# திருக்குறளில் மரபுகள்

ஆசிரியர்
டாக்டர் கு. மோகனராசு
பி.எஸ்சி., எம்.ஏ., பிஎச்.டி., சான்றிதழ் - சமசுகிருதம்,
பெருஞ்சான்றிதழ் : மானிடவியல், புவியியல், உயர்கல்வியியல்
திருக்குறள் ஆய்வுப் பகுதி, தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்



தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
1981

திருக்குறள் ஆய்வுப்பகுதி வெளியீடு: 7

# திருக்குறளில் மரபுகள்

பொதுப் பதிப்பாசிரியர்
பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி
எம். ஏ., எம். லிட்., பிஎச். டி.,
பெருஞ்சான்றிதழ்கள்: மானிடவியல், அரசியல் & ஆட்சியியல்
தலைவர் - தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்

தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
1981

# THE TRADITIONS IN TIRUKKURAL

*Author*

**Dr. K. MOHANRAJ**

B. Sc., M. A., Ph. D., Dip. Anth., Dip. Geog., D. H. Ed., Cert. — Skt.

Tirukkural Endowment Research Centre

Department of Tamil Literature

University of Madras

**Department of Tamil Literature**

UNIVERSITY OF MADRAS

1981

# திருக்குறளில் மரபுகள்

ஆசிரியர்
டாக்டர் கு. மோகனராசு
பி. எசி., எம். ஏ., பிஎச். டி., சான்றிதழ் - சமசுகிருதம்,
பெருஞ்சான்றிதழ்கள் : மானிடவியல், புவியியல், உயர்கல்வியியல்
திருக்குறள் ஆய்வுப் பகுதி, தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்



தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
1981

# தகவுரை

பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி
தலைவர், தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்

திருக்குறள் இந்தியத் தேசிய நூலாக இன்னும் அறிவிக்கப்படாவிடினும் அது தலைசிறந்த தமிழ்மறை; உலகப் பொதுமறை; தெய்வத் திருமறை. அறம், பொருள், இன்பம் என்ற மன்பதை முழுமைக்கும் பொருந்தும் மனித வாழ்வின் அடிப்படைகளை மனதில் கொண்டு முறைசெய்யப்பட்ட திருமுறைத் திருமறையாகவும் திகழ்வது திருக்குறள். தான் தோன்றிய நாள்தொட்டுப் புகழுடன் திகழும் திருக்குறளைப் பயன்படுத்தாத — ஆராயாத — தமிழ்ப் புலவரே இல்லை. இந்நிலை தமிழினம் — மனித இனம் இருக்கும்வரை தொடரும் போலவும் தோன்றுகிறது. காரணம் தொட்டனைத் தூறும் மணற்கேணி போலவும் பண்புடையாளர் தொடர்பு போலவும் (இன்றும் — இன்னும் கூட!) நவில்தொறும் நூல்நயம் நல்குவதாய் விளங்கும் வீறும் பேறும் திருக்குறளுக்கு இருக்கிறது; தலையாய காரணம் எல்லோர்க்கும் — எக்காலத்துக்கும் – பொதுவாய் இருக்கும் பொதுமறையாய் இருப்பதோடு **முரண்பாடுகள்** (conflicts) **அல்லது மிகை நிலைகள்** (extremes) **இடையே ஒரு மைய வழியை** (Mid-path/Moderation/Golden mean) **ஐயமறக் காட்டும் புதுமைப் பொதுமை நூலாகவும்** திருக்குறள் பொலிகிறது.

மேற்குறித்தவாறெல்லாம் மேன்மை கொண்டுள்ள திருக்குறளின் புகழை — பயன்பாட்டை — தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்கள் மூன்றன் வாயிலாகவும் பரப்ப விரும்பிய பெருமை 1968-இல் தமிழக முதல்வராகிய பேறிஞர் அண்ணாவின் தனியுரிமை ஆகும். 1968-இல்

தமிழ்நாட்டின் தலைநகரில் நடைபெற்ற இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டை ஒட்டிப் பேரறிஞர் அண்ணாவை முதல்வராகக் கொண்ட தமிழக அரசு அவர் கருத்துவழி தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்கள் மூன்றிலும் திருக்குறள் ஆய்வு மையங்களை ஏற்படுத்தப் பெருநிதி வழங்கியது. இதன் விளைவாகச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையின் திருக்குறள் பகுதி, பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்களின் முதன்மை வழிகாட்டுதலில் திருக்குறள் ஆய்வில் முழுமூச்சாய்த் தோய்ந்தது. பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்களைப் பின்பற்றி இத்தகவுரையாளன் தமிழ்த்துறைத் தலைமைப் பொறுப்பை 1971-இல் ஏற்றதும் பேராசிரியர் மு. வ. வின் வழிகாட்டுதலில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள் விரைந்து அச்சாகி வெளிவருதற்குரிய வேலைகள் முன்னுரிமை பெற்றுக் கவனிக்கப்பட்டன. புது நூல்கட்கான திட்டங் களும் நிறைவேற்றப்பட்டன. அவ்வகையில் இதுவரை 1. **திருக்குறள் யாப்பமைதியும் பாட வேறுபாடும்**, 2. **திருக்குறள் நீதி இலக்கியம்**, 3. **திருக்குறள் அணி நலம்**, 4. **திருக்குறள் அமைப்பும் முறையும்**, 5. **திருக் குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும்**, 6. **அகப் பொருள் மரபும் திருக்குறளும்** ஆகிய ஆறு நூல்களும் வெளியீடு பெற்றுள்ளன. இவற்றுள் பேராசிரியர் டாக்டர் க. த. திருநாவுக்கரசு அவர்களின் '**திருக்குறள் நீதி இலக்கியம்**' என்ற நூல் 1972-இல் சாகித்திய அகாதமி பரிசு பெற்றது தனிச்சிறப்புடன் குறிப்பிடத் தக்கது. இப்பெருமையை இதுவரை எந்தப் பல்கலைக் கழகத் தமிழ் வெளியீடும் பெறவில்லை என்பதும் பெரு மையுடன் குறிப்பிடத்தக்கது. திருக்குறள் வெளியீடுகளுள் 'திருக்குறள் நீதி இலக்கியம்' என்னும் இந்நூலே சென்னைப் பல்கலைக்கழகத்தின் இரண்டாவது பதிப்பை யும் பெற்றுள்ளது.

சென்னைப் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆய்வு வரிசையில் '**திருக்குறளில் மரபுகள்**' என்ற தலைப்பில் வெளிவரும் இப்புது நூல், வளரும் தமிழகத்தின் ஆய்வு வானில் தோன்றியுள்ள புதிய விண்மீனாக ஒளிரும் டாக்டர் கு. மோகனராசு அவர்களால் நுண்ணிய முறை யிலும் திண்ணிய வகையிலும் இயற்றப்பட்டதாகும். தமிழின் பெருமை அதன் தொன்மையே — **மரபு**

மாட்சியே — ஆகும். அவ்வகையில் திருக்குறளில் மரபின் மாட்சியைத் தாம் கற்ற பல்துறைக் கல்வியின் கண்கொண்டும் கண்டு விண்டுள்ள டாக்டர் கு. மோகனராசு அவர்களின் நுண்ணறிவும் நூலறிவும் போற்றத் தக்கன.

‘திருக்குறளில் மரபுகள்’ என்னும் இவ்வாய்வு நூல் ஆசிரியரின் பழந்தமிழ் இலக்கிய — இலக்கணத் தோய்வுகளையும் அவற்றின் பயனாகிய பாய்வுகளையும் காட்டுவதோடன்றிக் கற்போரை மேலுங்காண ஊக்கம் ஊட்டும் ஆக்கம் உடையதும் ஆகும். தேக்கம் இல்லாத் தமிழாய்வுக்கு இத்தகைய நூல்கள் இன்றியமையாதன.

திருக்குறள் ஆய்வுத் துணைவராகவும் விரிவுரையாளராகவும் 1973 முதல் முறைப்படி பணி பெற்ற டாக்டர் கு. மோகனராசு அவர்கட்குத் தொல்காப்பியம் — திருக்குறள் ஒப்பாய்வு தலைமைப் பணிப்பொருளாக முதன் முதல் கொடுக்கப்பட்டது. டாக்டர் கு. மோகனராசு அவர்கள் செம்மையுற முடித்த அப்பணியின் ஒரு பகுதி சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை முன் மாதிரியைப் பின்பற்றியே டாக்டர் பட்ட ஆய்வேடாகவும் 1978-இல் படைக்கப்பட்டுப் பட்டமும் பாராட்டும் பெற்றது. அப்பணியின் எஞ்சிய தொடர் ஆய்வே இந்நூல் வடிவாக இப்போது வெளியீடு பெறுகின்றது. ஆசிரியரின் நுட்ப திட்ப அறிவு இவ்வகையில் இன்னும் சில / பல ஆய்வுக் கொடைகளை வழங்குதலும் கூடும்.

‘திருக்குறளில் மரபுகள்’ என்னும் இந்நூல், அதன் பொருண்மைக்கு ஏற்பத் தொல்காப்பியம் — தொகை நூல்கள் — திருக்குறள் ஆகியவற்றின் ஒரு மொழி / தன் மொழி இலக்கிய ஒப்பீடு / ஒப்பாய்வு ஆகவும் (Studies in mono-lingual literary comparison) வடமொழி, சீன இலக்கியங்களோடு ஒப்பீடு செய்கின்ற இடங்களில் இருமொழி/ பல - பிறமொழி ஒப்பிலக்கிய ஆய்வாகவும் (Studies in bi-lingual and multi-lingual comparative Literature) இருத்தல் குறிப்பிட்டுப் போற்றத் தக்கதாகும்.

தொல்காப்பியம் போலவே ஒன்பது இயல்கள் பாகுபாட்டு அடிப்படையில் இந்நூலாசிரியர் தம் நூலைத் திட்பமாக இயற்றியிருப்பது அவர்தம் ஒட்பப் பெட்பங்களை

ஓதும். சிறப்பாக ஆசிரியர் மேற்கு நாட்டு ஆய்வு நெறி முறைகளை அணி செய்யும் வரைபடக் கலையை நன்கு வளமாகப் பயன்படுத்தி இருப்பது போற்றத் தக்கதாகும் [இவ்வகையில் குறிக்கத்தக்க இன்னொரு நூல் டாக்டர் திருமதி தி.சு. சத்தியம் அவர்களின் **ஏழில் நான்கு** (1979)].

***'திருக்குறளில் மரபுகள்'*** பற்றிய இவ்வாய்வு நூலில் சற்றும் விருப்பு வெறுப்பின்றி இக்கால ஆய்வாளர்களின் / கலைஞர்களின் கருத்துகளையும் மேற்கோளாய்க் காட்டி யிருப்பது நூலாசிரியரின் பரந்த படிப்பையும் பரந்த மனத் தையும் விளக்குவதாகும்.

இந்நூல் பழந்தமிழ் நூல்கட்கு ஓர் அறிமுக நூலாகவும் அந்நூல்கள் பற்றிய ஓர் ஒப்பாய்வு நூலாகவும் ஒளிர்தல் உவகை தருவதாகும்.

தமிழக அரசின் ஆணைவழித் தமிழ் எழுத்துச் சீர் திருத்தத்தைப் பின்பற்றி வெளிவரும் சென்னைப் பல்கலைக்கழகத்தின் முதல் வெளியீடு என்ற வகையிலும் இந்நூல் தனிச்சிறப்பு உடையதாகும்.

உயர் ஆய்வின் உயிர் காரணம் காணலும் காட்டலுமே ஆகும். அவ்வகையில் இந்நூலாசிரியர் தம் கருத்துகள் / முடிவுகள் ஒவ்வொன்றிற்கும் பொருத்தமான காரணங் களைப் புகன்றிருப்பது போற்றற்குரியதாகும். மேலும், இலைமறை காய்போல் இருக்கும் பேருண்மைகளை உள்ளங்கை நெல்லிக்கனியாய் விளக்குதலும் விழுமிய ஆய்வின் வீறும் பேறும் ஆகும். அவ்வகையிலும் இந் நூலாசிரியர் 'புறத்தில் அகம்' என்ற உட்தலைப்பில் (7.9) எடுத்துரைத்திருக்கும் உண்மை திருவள்ளுவர் தம் நூலுள் சற்றொப்ப முக்கால் பகுதியைப் புறத்துக்கே அகத்துக்காக்கிப் படைத்திருப்பதற்குப் படியாகலாம்.

'திருக்குறளில் மரபுகள்' போன்ற பற்பல மூல ஆய்வுகளை வெளியிடலே ஒரு பல்கலைக்கழகத்தின் பயன்பாட்டை மெய்ப்பிப்பதாகும். உண்மையில் இத் தகைய ஆய்வு நூல்களின் படைப்பை அடிப்படையாகக் கொண்டே பல்கலைக்கழகப் பணிகள் — அதில் பணி புரிவோர் உயர்வுகள் — மதிப்பீடு பெறுதல் வேண்டும். பல்கலைக்கழகங்களின் இத்தகைய பணிகட்கு உதவும்

வகையில் ஆய்வுச் சொற்பொழிவுகட்கு அறக்கட்டளைகள் நிறுவப்படுவது போலச் 'செல்வத்துப் பயன்' அறிந்த செம் மனச் செல்வர்கள்–செம்மல்கள் ஆய்வு நூல்கள் வெளியீட் டிற்கென்றும் அறக்கட்டளைகளை நிறுவ முன்வருதல் காலத் திற்கேற்ற கல்விக் கடமையாகும். மேலும் சொன்னால், பன்மொழி — பல்கலை அடிப்படையில் பல்கலைக்கழகங் களில் அறிஞரிடையே கருத்தாய்வுகள் உரமுடைய உரை யாடல்கள் கருத்துப்பரிமாற்றங்கள் (Discussions) வாயி லாக உருப்பெற்று அவை ஒலி (நாடா)ப் பதிவு உற்று அவ்வப்போதே தக்கவாறு பதிப்பிக்கப் பெறல் வேண்டும். இம்முறையால் பல்கலைக்கழக ஆய்வாளர் காலக் கேடின்றிக் கட்டாயமாகக் கல்விப் பணியில் ஈடுபடுதல் எளிதும் இனிதுமாகும். தனி ஆய்வுகளினும் இத்தகைய கூட்டாய்வுகள் அகலமும் ஆழமும் உடையனவுமாகும். ஆனால் இக்கனவுகள் பொதுவுடைமைச் சமூகத்திலேயே பெரிதும் நனவாகும் போலும்! ஆய்வின் ஆக்கம் அருந் தமிழ் அகப்பொருள் நெறிகாட்டும் வசதிகளும் காலமும் (நிலமும் பொழுதும்) ஆகிய 'முதற் பொருளை'யே பொறுத்தது. அத்தகைய நிலை உயர்ஆய்வு உலகுக்குக் கிட்டும்போது 'கருத்து மரபுகள்' போன்ற கடலனைய ஆய்வுகளும் கையகப்படும்!

'திருக்குறளில் மரபுகள்' நூலை வெளியீடு செய்யக் 'கலைக்கதிர்' — பேராசிரியர் — டாக்டர் ஜி. ஆர். தாமோதரன் அவர்களைத் தலைவராகக் கொண்ட சென்னைப் பல்கலைக்கழக ஆட்சிக்குழு இசைந்தமைக்குத் தமிழ்கூறு நல்லுலகின் சார்பில் உளமார்ந்த நன்றி யறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது (குறள். 68)

சென்னை-5
28—2—81

**ந. சஞ்சீவி**

# முகவுரை

## 0.1 *மரபு*

### 0.1.1 *மரபு - இலக்கணம்*

எந்தப் பொருளை எந்தச் சொல்லினால் எந்த நெறியுறச் சான்றோர்கள் சொல்லினார்களோ, அந்தப் பொருளை அந்தச் சொல்லினால் அந்த நெறியுறச் சொல்லுதலே மரபு என்பர்:

எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே (நன். 388)

இவ்விளக்கம், எல்லாவகை இலக்கணங்களுக்கும் பொருந்தும்.

### 0.1.2 *மரபின் இன்றியமையாமை*

காட்சிப் பொருளான அல்லது கருத்துப் பொருளான ஒன்றை உணர்த்துவதற்கு உருவாக்கப்படுவது சொல். அச்சொல், மக்களிடையே வழங்கப்பட்டுச் சான்றோரான் ஏற்றுக் கொள்ளப்படும்போது இலக்கிய வழக்கில் இடம் பெறுகின்றது.

ஒரு பொருளை உணர்த்த ஒருமுறை வழங்கப்படும் — ஏற்றுக் கொள்ளப்படும் ஒரு சொல் நிலையானதாக இருந்தால்தான் குழப்பங்கள் ஏற்படா. ஒரு பொருளை உணர்த்த, காலந்தோறும் சொல் மாறிக் கொண்டே இருக்குமானால், அதனால் பெருங்குழப்பங்கள் ஏற்படும்; அம்மாற்றத்தினால் ஏற்படும் விளைவும் பெரும்பயன் தரத்தக்கதாக அமையும் என்றும் கொள்ள முடியாது. அதனால்தான் முன்னர்ச் சுட்டிய வரையறையை நன்னூலார் உரைக்கின்றார் எனலாம்.

இலக்கியங்கள் மரபுவழிப் பட்ட சொற்களால் அமைய வேண்டும்; மரபு நெறியிலிருந்து சிறிதளவும் திரிதல்

கூடாது எனத் தொல்காப்பியம் அழுத்தந்திருத்தமாக எடுத்துரைக்கின்றது (தொல். 1590). மேலும், மரபுநிலை திரியுமானால், உலகத்துச் சொல்லெல்லாம் பொருளிழந்து போகும் என்பதைத் தொல்காப்பியம்,

மரபுநிலை திரியிற் பிறிதுபிறி தாகும் (தொல். 1591)

என்னும் நூற்பாவின் வழியே உணர்த்துகின்றது; இலக்கண நூல்களும் மரபுநிலை திரியாமையே மாட்சிமைக்கு உரியது எனவும் நெறிப்படுத்துகின்றது (தொல். 1592).

இவையெல்லாம் மரபின் இன்றியமையாமையைப் புலப்படுத்துவனவாகும். இவ்வரையறை எல்லாவகை நெறிகளுக்கும் (எழுத்து, சொல், பொருள்) பொருந்தும்.

### 0.1.3 மரபும் நெகிழ்ச்சியும்

தொல்காப்பியர் காலத்திலேயே (அல்லது அவர் காலத்திற்கு முன்பாகவே) மரபில் ஓரளவு நெகிழ்ச்சி ஏற்பட்டிருக்க வேண்டும் எனத் தோன்றுகின்றது.

குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்
செவ்வாய்க் கிளியைத் தத்தை என்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும்
குதிரையுள் ஆணினைச் சேவல் என்றலும்
இருள்நிறப் பன்றியை ஏனம் என்றலும்
எருமையுள் ஆணினைக் கண்டி என்றலும்
முடிய வந்த அவ்வழக் குண்மையின்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே (தொல். 1568)

எனவரும் மரபியல் நூற்பா மரபின் நெகிழ்ச்சி நிலையையே குறிப்பிடுகின்றது. முடிய வந்த வழக்காயினும் கடிதல் கூடாது என்பதே தொல்காப்பியம்.

மரபில் நிலைத்த தன்மை வேண்டும் என வரையறுக்கப்பட்டிருப்பினும், காலப் போக்கில் நெகிழ்ச்சிகள் ஏற்படுவதுண்டு என்பதற்குத் தொல்காப்பியத்தில் கூறப்படும் பல மரபுச் சொற்கள் சங்கத் தொகைநூல்களிலேயே வழக்கிழந்தமையைக் காட்டலாம். ஆட்டின் ஆண்பால்

பெயரை அப்பர் என்றும் மோத்தை என்றும் வழங்கும் மரபு, ஆட்டின் பெண்பால்பெயரை மூடு என வழங்கும் மரபு, நரி நாய் பன்றி ஆகியவற்றின் பெண்பால் பெயரைப் பாட்டி என வழங்கும் மரபு முதலாய வழக்காறுகள் சங்கத் தொகைநூல்களில் இடம் பெறவில்லை.

## 0.2 நூலின் எல்லை

***திருக்குறளில் மரபுகள்*** என்னும் தலைப்பு விரிந்து பரந்துபட்ட ஒரு தலைப்பாகும். இத்தலைப்பில் எழுத்து, சொல், பொருள் தொடர்பான மரபுகளைத் தனித்தனியே ஒப்பிட்டு ஆராயலாம்.

'தொல்காப்பிய எழுத்ததிகாரமும் திருக்குறளும்' என்னும் தலைப்பில், தொல்காப்பிய எழுத்ததிகார ஒன்பது இயல்களில் வரும் மரபுகளைத் திருக்குறளுடன் ஒப்பிட்டு ஆராயலாம். இவ்வாய்வு தனிப்பெரும் ஆய்வாக மலரும் பரப்பினது.

'தொல்காப்பியச் சொல்லதிகாரமும் திருக்குறளும்' என்னும் தலைப்பில், தொல்காப்பியச் சொல்லதிகார மரபுகளைத் திருக்குறளுடன் ஒப்பிட்டு ஆராயலாம். இவ்வாய்வும் தனிப்பெரும் ஆய்வாக மலரும் பரப்பினதே.

இவ்விருபெரும் ஆய்வுகளும் எழுத்து, சொல் தொடர்பான இலக்கண நெறிமுறைகளை அடிப்படையாகக் கொண்டவை.

தொல்காப்பியப் பொருளதிகாரம் காட்டும் மரபுகளுள் அகப்பொருள், புறப்பொருள், உவமம், யாப்புத் தொடர்பான மரபுகள் இத்துறையில் முன்னரே ஆராயப் பட்டுள்ளன. ஆகவே, மரபியல் தொடர்பான கருத்துகள் இந்நூலின் கடைசி இயலில் ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன; மற்றும் சங்கத் தொகைநூல்களில் காணும் பெயர்மரபு, அறம் பொருள் இன்பம்-வைப்புமுறை மரபு, அதிகாரப் பெயர் மரபு, எண்ணிக்கைச் சமநோக்கு மரபு, முன்னோர் மொழிபொருள் போற்றும் மரபு, பழங்கதை மரபு, உவம மரபு ஆகிய இலக்கண—இலக்கிய மரபுகள் பலவும் இந் நூலின்கண் ஒப்பிட்டு ஆராயப்படுகின்றன. எல்லார்க்கும்

எளிதில் புரியும் வகையில், முன்னர்ச் சொல்லப்பட்ட சில கருத்துகள் இந்நூலில் விரிவாக விளக்கம் பெற்றுள்ளன.

## 0.3 நன்றிக்குரியோர்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம், மதுரைப் பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம் ஆகிய மூன்று பல்கலைக்கழகங்களிலும் திருக்குறள் ஆய்வு மையங்கள் உருவாகுவதற்குக் காரணமாக விளங்கிய பேரறிஞர் அண்ணா அவர்களுக்குத் தமிழ் உலகமே நன்றி செலுத்தக் கடன்பட்டுள்ளது; அதில் இந்த எளியேனின் நன்றியும் அடங்கும்.

தமிழ் இலக்கியத்துறை — திருக்குறள் ஆய்வுப் பகுதியின் வழியே 'திருக்குறளில் மரபுகள்' என்னும் இந்நூல் வெளிவருவதற்கு ஆவன செய்துதவிய சென்னைப் பல்கலைக்கழக மாண்பமை துணைவேந்தர் பேராசிரியர் டாக்டர் ஜி. ஆர். தாமோதரன் அவர்களுக்கும் மற்றும் ஆட்சிக்குழு உறுப்பினர்கள் உயர்திரு பதிவாளர் அவர்கள் ஆகியோருக்கும் நன்றி உடையேன்.

என் வாழ்க்கைக்கு—ஆய்வுக்குத் தூண்டுகோலாகவும் ஊன்றுகோலாகவும் நின்று ஒல்லும் வகையான் எல்லாம் வழிகாட்டி வருவதோடு, இந்நூலுக்கு அரிய தகவுரையும் தந்து சிறப்பித்த, சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறைத் தலைவர் 'சிந்தனைச் செம்மல்' பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களுக்கும் நன்றி உடையேன். அவ்வாறே, தமிழ் இலக்கியத்துறை இளநிலைப் பேராசிரியர் டாக்டர் பொன். கோதண்டராமன் (பொற்கோ) அவர்களுக்கும் உளமார்ந்த நன்றி உடையேன்.

இவ்வாய்வு மேற்கொண்ட நான்கே திங்களில், இந்நூல் உருவாகுவதற்குப் பேரளவு நூல்கள் தந்துதவிய மறைமலையடிகள் நூலக நூலகர் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களுக்கும் அந்நூலகத்தில் பணியாற்றும் பணியாளர்களுக்கும், சென்னைப் பல்கலைக்கழக மொழிவளாக நூலகர் திரு. மு. முத்துச்சாமி அவர்களுக்கும் பணியாளர் திரு. து. வரதன் அவர்களுக்கும் நன்றி உடையேன்.

இந்நூல் அச்சாகும்போது, அச்சுப்படிகளை ஒப்பிட்டுப் பார்க்க, கையெழுத்துப் படிகளைப் படித்துதவிய

திருமதி சாந்தி மோகனராசு, செல்வன் கு.மோ.பாவேந்தன் ஆகியோருக்கும், பக்கப்படிகளைத் திருத்தி உதவிய தமிழ் இலக்கியத்துறை டாக்டர் பட்ட ஆய்வு மாணவி செல்வி க. விசயா அவர்களுக்கும், நூல் முடிந்த நிலையில் இதில் உள்ள பிழைகளைக்கண்டு உதவிய துணைப் பேராசிரி-யர்கள் திரு. வ. பா. கோபாலன், திரு. சே. முகையதீன் புலவர் ஆகியோருக்கும் நன்றியுடையேன்.

இந்நூலை நல்ல முறையில் விரைந்து அச்சிட்டு உதவிய அவ்வை அச்சுக்கூடத்தார்க்கும், இந்நூலில் காணும் வரிப் படங்கள், வரைபடம், அட்டைப்படம் ஆகியவற்றை வரைந்துதவிய ஓவியர் திரு. இலிங்கேசன் அவர்களுக்கும் நன்றி உடையேன்.

சென்னை-5
4—3—81

கு. மோகனராசு

# உள்ளடக்கம்

[இடப்பக்கம் உள்ள எண்கள் இயல் - உட்தலைப்புத் தொடர் எண்கள்; வலப்பக்கம் உள்ள எண்கள் பக்க எண்கள்.]

## சுருக்கக் குறிப்பு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | = | அகநானூறு |
| அதி. | = | அதிகாரம் |
| ஏர். | = | ஏர் எழுபது |
| ஐங். | = | ஐங்குறுநூறு |
| கலி. | = | கலித்தொகை |
| குறள். | = | திருக்குறள் |
| குறிஞ். | = | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | = | குறுந்தொகை |
| சிவ. | = | சிவசிவ வெண்பா |
| சிறு. | = | சிறுபாணாற்றுப்படை |
| த. பே. | = | தமிழ்ப் பேரகராதி |
| தனிப். | = | தனிப்பாடல் திரட்டு |
| தி. மா. | = | திருவள்ளுவ மாலை |
| திருக். ஞா. | = | திருக்கைலாய ஞான உலா |
| தொல். | = | தொல்காப்பியம் |
| நற். | = | நற்றிணை |
| நன். | = | நன்னூல் |
| நெடு. | = | நெடுநல்வாடை |
| ப. | = | பக்கம் |
| பக். | = | பக்கங்கள் |
| பட். | = | பட்டினப்பாலை |
| பதி. | = | பதிப்பு |
| பதிற். | = | பதிற்றுப்பத்து |
| பரி. | = | பரிபாடல் |
| புறம். | = | புறநானூறு |
| பெருந். | = | பெருந்தொகை |
| பெரும். | = | பெரும்பாணாற்றுப்படை |

| | | |
|---|---|---|
| பொருந. | = | பொருநராற்றுப்படை |
| மணி. | = | மணிமேகலை |
| மது. | = | மதுரைக்காஞ்சி |
| ம. மா. | = | மலரும் மாலையும் |
| மலை. | = | மலைபடு கடாம் |
| மு.நூ. | = | முன்னர்க் குறித்த நூல் |
| முருகு. | = | திருமுருகாற்றுப்படை |
| வ.உ. | = | வள்ளுவர் உலகம் |
| வ.எண். | = | வரிசை எண் |
| p. | = | page |
| pp. | = | page to page |
| ———— | = | மேல் நூல் |
| ஷை. | = | மேல் குறித்த நூலும் பக்கமும் |

# 1

# திருக்குறள் - பெயர் மரபு

## 1.1 *இலக்கியமும் சூழலும்*

*இலக்கியங்கள் - குறிப்பாக அற இலக்கியங்கள் சமுதாயச் சூழலை ஒட்டி/தேவையை ஒட்டி எழுந்துள்ளன; எழுகின்றன. சான்றுகளாக, கீதை, கன்பியூசியஸ் எழுதிய தாகக் கருதப்படும் சிறப்பு மிக்க கல்வி* (The Great Learning)[1] *ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.*

*தமிழ் மண்ணில், பண்டைக் காலத்தே, காலந்தொறும் கனிந்த அறக்கருத்துகள் பலப்பல; தமிழ்ச் சான்றோர்கள் அவற்றை வெளிப்படையாக உணர்த்தாமல் பெரும்பான்மையும் வாழ்க்கைக் கோலத்தினூடே மறையவே உணர்த்தினர்; சிலபோது வெளிப்படையாக வும் உணர்த்தினர்.*

*முன்னோர் கொண்ட கருத்துகளையும், தாம் கண்ட நெறிமுறைகளையும் வகை தொகை செய்து, சமுதாயத் தேவை கருதி வெளிப்படையாக வெளிப்படுத்தியவர் வள்ளுவர் எனக் கொள்ளலாம். ஆனால் அவர் அறம் உரைத்தற்குக் காரணமாக இருந்த சூழலையும் தேவையை யும் நாம் தெளிவுற அறிய முடியவில்லை.*

## 1.2 *திருக்குறளின் தனிச்சிறப்புகள்*

*காலத்தின் தேவைநோக்கித் தோன்றியதாதலின், காலத்தின் பிடிக்குள் சிக்குண்டு சிலபோது வள்ளுவம் திணறுகின்றது; என்றாலும், அத்திணறல் குறளின் காலங்கடந்த பொதுமையாகிய உயிர்மூச்சை அடக்கிவிட வில்லை. வள்ளுவக் கருத்துகளில் மிகப்பல, காலங்கடந்தே*

நிற்கின்றன. காலம் கடந்து நிற்கும் அதன் தன்மை உலகில் மற்றெந்த நூலிற்கும் உள்ள அளவின் எல்லையைக் கடந்தது என்பதே வள்ளுவத்தின் தனிச்சிறப்பு.

குறள் தமிழ் மண்ணில் முகிழ்த்தது; தமிழ் மண்ணின் மணத்தை அது முழுமையாகப் புறக்கணித்து விடவில்லை; ஆனால், அந்த மணம், அதன் பொதுமை மணத்தை அடக்கிவிடவில்லை. ஆகவேதான், காலங்கடந்து நிற்கும் குறள் ஞாலங்கடந்தும் நிற்கும் பெருமை பெற்று மிளிர்கின்றது.

சமயச் சுழற்சிக்குள் மனிதம் வேறுபட்டு உழன்ற காலத்தில் தோன்றியது வள்ளுவம். ஆனால், அது சமயச் சுழற்சிக்குள் சிக்கிவிடவில்லை; என்றாலும், சுழற்சி நீரில் அது நனையவில்லை என்று இயம்ப முடியாது. எனினும், அதிலே ஒரு புதுமை; பொதுமை.

## 1.3 திருக்குறளின் பல்வேறு பெயர்கள்

என்றென்றும் தன்னிகரற்றுக் காலத்திற்கு ஏற்ற கருத்து வளர்ச்சிகட்குப் பெரும்பான்மையும் இடமளித்துக் குன்றாது ஒளிரும் குறளைச் சான்றோர்கள் பல்வேறு பெயர்களால் அழைத்தனர்[2]; இறைவனைச் சமயக் குரவர்கள் பல்வேறு பெயர்களால் அழைத்தது போல, தமிழ் கூறு நல்லுலகம், திருக்குறளுக்கு வழங்கும் அப் பல்வேறு பெயர்களும் அவற்றின் பெயர் விளக்கங்களும் வருமாறு :

### 1.3.1 அறம்

1.3.1.1 வள்ளுவர் வழங்கிய வான்மறைக்கு - தேன் குறளுக்கு வண்தமிழ்வாணர் வழங்கிய உயர்தனிச் சிறப்புப் பெயர்களுள் ஒன்று **அறம்** என்பது. சங்க இலக்கியத்திலேயே இப்பெயர் திருக்குறளைச் சுட்ட வழங்கப்பட்டுள்ளது என்பர்.[3]

ஒரு தனி மனிதன் தான், சமுதாயத்தில் வாழும் மற்றொரு மனிதன், தன் குடும்பம், தன் சுற்றம், நட்பு, இனம், சமுதாயம், நாடு, உலக மக்கள், உலக உயிர்கள் என்னும் பல்வேறு நிலைகளில் பல்வேறு சூழல்களில் கைக் கொள்ளத்தக்கப் பொது அறங்கள், ஒன்றற்கொன்று

தொடர்புற்றுள்ள தொடர்புநிலை அறங்கள் ஆகிய இவையே குறளில் பெரும்பான்மையும் நெறிமுறைப் படுத்தி உரைக்கப்படுகின்றன.[4] திருக்குறளின் முப்பால் களிலும் ஊடுருவி நிற்பது அறமே; ஒன்றோடொன்று தொடர்புபட்டுள்ள முப்பால்களையும் இயக்கிச் செல் வது அறமே எனலாம்.




படம் : 1

மொத்தத்தில் திருக்குறளை ஓர் **அறக்களஞ்சியம்** என்றே சொல்லலாம். ஆகவே இதனை **அறம்** என்ற னர் என்க.

1.3.1.2 **அறம்** என்னும் பெயரொடு திரு என்னும் அடை சேர்த்துத் **திருவறம்** என வழங்குகின்றார் டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள். அப்பெயர்ப் பொருத்தத் திற்கு அவர்களே தரும் விளக்கம் வருமாறு:

> திருக்குறளுக்கு அறம் என்னும் பெயர் அதன் உயர் தன்மையைக் காட்டும் மெய்ப்பெயராகும். ...யாப்புக் காரணமாகப் பிற்காலத்துத் திருக்குறள் என்ற பெயரை வைத்து வழங்கி வருகிறோம். இதனை மாற்ற நான் சொல்லவில்லை. திருவாசகம் என்பது போலத் திருவறம் என்று அடை புணர்த் தும் வழங்கலாம்.[5]

**குறள்** என்னும் பெயருக்கு அடைகொடுத்துத் திருக்குறள் என வழங்குவது போல **அறம்** என்னும் பெயருக்கு அடைகொடுத்துத் **திருவறம்** என வழங்கலாம் என்பது பயனுள்ள கருத்தே.

### 1.3.2 இரண்டு

1.3.2.1 இரண்டே அடிகள்! அதில், விரிந்து பரந்து ஆழ்ந்த ஏற்றமிகு சிந்தனைகள்! வியப்பின் விளிம்பில் நிற்கிறோம். இந்த வியப்பே,

> கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
> குறுகத் தறித்த குறள் (தி. மா. 54)

என இடைக்காடனாரும்,

> அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
> குறுகத் தறித்த குறள் (தி. மா. 55)

என ஔவையாரும் பாடக் காரணமாயிற்று எனலாம்.

இரண்டு அடிகளைக் கொண்டு பாடப்பட்ட நூல்களுள் திருக்குறளைப் போல அத்துணையளவு ஓங்குயர் சிறப்பினைப் பெற்ற நூல் அன்றும் இல்லை; இன்றளவும் இல்லை. குறள் என்றாலே இரண்டடிகள் நினைவிற்கு வரும் அளவிற்கு வடிவ நிலையிலும் திருக்குறள் தனிச் சிறப்பினைப் பெற்று விளங்குகிறது. எனவே, இதனை **இரண்டு** எனச் சிறப்பித்துரைத்தனர் போலும்!

> நாலும் **இரண்டும்** சொல்லுக் குறுதி (பெருந். 1128)

> பழகுதமிழ்ச் சொல்லருமை **நாலிரண்டில்** (தனிப். 68)

என்பன சான்றோர் வாக்குகள்.

1.3.2.2 மேலும்,

> நாற்சீர் கொண்டது அடியெனப் படுமே

எனவரும் தொல்காப்பிய நூற்பாவொடு (1289) அல்லது அளவடியொடு ஒப்பிட்டு நோக்கின், குறள் இரண்டடிகளைப் பெற்றது என்பதினும் ஒன்றே முக்காலடிகளைப் பெற்றது என்பதே பொருத்தம் எனவும் கொள்ளலாம். இதனாலேயே வள்ளுவர் வான்மறையை **ஒன்றே முக்காலடி** எனவும் சிறப்பித்து வழங்குகின்றனர்.[6]

### 1.3.3 உத்தர வேதம்

வேதம் என்பது மறைநூல். வேதங்களை மூன்றாகப் பகுப்பர்.




படம் : 2

இவற்றுள், பூர்வ வேதம் என்னும் பகுப்பினுள் இருக்கு, யசூர், சாமம், அதர்வணம் என்னும் பழமை சான்ற வேதங்கள் அடங்கும்; மத்திய வேதம் என்னும் பகுப்பினுள் பாரதம் அடங்கும்; வேதங்களுக்கெல்லாம் பின் வந்த வேதமாகத் திருக்குறளைக் கருதிய காரணத்தால் அதனை **உத்தர வேதம்** என வழங்கினர்.

### 1.3.4 எழுதுண்ட மறை

வேதத்தை **எழுதாமறை** என்பர்.

ஆற்றல் அழியுமென் றந்தணர்கள் நான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார் (தி. மா. 15)

எனத் திருவள்ளுவமாலையில் கோதமனார் கூறும் கூற்று இதற்குச் சான்றாகின்றது.

வேதத்திற்குரிய அத்தனை தகுதிகளையும் — ஏன்? அதற்கு மேம்பட்ட தகுதிகளையும் பெற்ற திருக்குறள், எல்லார்க்கும் பயன்பட வேண்டும் என்னும் பரந்த நோக்கில் எழுதப்பட்டமையால் **எழுதுண்ட மறை** என வழங்கப்படுகிறது. கம்பர் தம் **ஏர் எழுபது** என்னும் நூலில்,

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாருந்
தொழுதுண்டு பின்செல்வர் என்றேயித் தொல்லுலகில்
**எழுதுண்ட மறை**சொன்னா லிவரேவன் மள்ளர்க்கும்
பழுதுண்டோ பார்வேந்தர் படைமள்ள ரொப்பாரே
(ஏர். 19)

என்னும் பாடலில் குறளை இவ்வாறு வழங்கியுள்ளார்.

### 1.3.5 ஓத்து

சமயத் திவாகர வாமன முனிவர் தம் நீலகேசி உரையில் பின்வருமாறு எழுதுகின்றார்:

ஒருத்தனை யவ்வாறு ரக்ஷிக்க வேண்டினால் எமக்குக் கைகாட்டியு நிலங்காட்டியும் வஞ்சனை யாற் சொல்ல வேண்டுவதில்லை; என்னை?

'பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்'

என்பது எம்**மோத்தா**தலாற் பிராணி பீடா நிவ்ரத் யர்த்தமாகப் பொய்யுரைத்தலு மாவதாதலி னென்பது [7]

இங்குத் திருக்குறள் **ஒத்து** என்னும் பெயரில் வழங்கப் பட்டுள்ளது.

ஒத்து என்பது இலக்கண நூலின் ஒரு கூறாகிய இயலைக் குறிப்பதாகும். இதற்குத் தொல்காப்பியம்,

நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை ஒருவழி வைப்ப
தோத்து (தொல். 1426)

என விளக்கம் தருகின்றது. இவ்விளக்கம் குறளுக்கும் அப்படியே பொருந்திவரக் காண்கின்றோம். மேலும், குறளும் ஒருவகை இலக்கண நூல்தானே! ஆம்; வாழ்க்கை இலக்கண நூல்.

' உயர்ந்தோர்க் குரிய ஓத்தி னான ' (தொல். 977)

என்பது, ஒத்து என்னும் சொல்லை உள்ளடக்கிய மற்றுமொரு தொல்காப்பிய நூற்பா. இங்கு ஒத்து என்பதற்கு **மறைநூல்** என்பது பொருள்.[8] திருக்குறள் தமிழ்மறை ஆகலின் **ஒத்து** என வழங்கினர் என்க.

### 1.3.6 கட்டுரை

திருக்கைலாய ஞான உலா திருக்குறளைக் **கட்டுரை** என வழங்குகிறது.

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுளவென்று — பண்டையோர்
கட்டுரையை (திருக். ஞா. 173-174)

என்பது அதன் கூற்று.

கட்டுரை என்பதற்கு அடியார்க்கு நல்லார்,

பொருள் பொதிந்த சொல்; உறுதியுடைய சொல்லுமாம் [9]

எனப் பொருள் விளக்கம் தந்துள்ளார். ஒவ்வொரு குறளும் பொருள் பொதிந்த மொழியாகவும் வாழ்க்கைக்கு உறுதி பயப்பதாகவும் அமைவதால் திருக்குறளைக் **கட்டுரை** என வழங்கினர் போலும்!

### 1.3.7 **குறளமுது**

**குறளமுது** என்பது திருக்குறளுக்கு வழங்கப்படும் பல்வேறு பெயர்களுள் ஒன்று.

> இலக்கியம் என்பார்க் கிலக்கியமாய் வாழ்வின்
> இலக்கணம் ஆகுமி(து) என்பார்க் — கிலக்கணமாய்
> ஒண்டமிழில் வள்ளுவனார் ஊட்டும் குறளமுதால்
> உண்டாகும் மெய்யுணர்வாம் ஊற்று (வ. உ. 13)

என்பர் புலவர் பொன். கோதண்டராமன் அவர்கள்.

> உடலுக்கு அமுதம் போல உள்ளத்துக்கு நல்ல அமுதமாகத் திருக்குறள் பயன்படுவதால் குறளமுது என வழங்கப்பட்டது

என ஆசிரியரே இப்பெயர் வழங்கியதற்குக் காரணமும் கூறுகின்றார்.[10]

### 1.3.8 தமிழ் மறை

**மறை** என்பதற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி பின்வரும் பொருள்களைத் தருகிறது: 1. மறைக்கை, 2. இரகசியம், 3. மந்திராலோசனை, 4. வேதம், 5. உபநிஷதம், 6. ஆகமம், 7. மந்திரம், 8. உபதேசப் பொருள், 9. களவுப்புணர்ச்சி, 10. பெண் குறி, 11. உருக்கடந்த வேடம், 12. புகலிடம், 13. சிறைக் கூடம், 14. மறைவிடம், 15. வஞ்சனை, 16. கேடகம், 17. எதிர்மறை, 18. விலக்குகை, 19. இரண்டாம் உழவு, 20. புள்ளி, 21. சிவப்புப் புள்ளிகளையுடைய மாடு முதலியன, 22. மரை, 23. சங்கின் முருக்கு (த. பே., பக். 3124—3125).

தமிழர் வடவர் என்னும் இனப்போராட்டம், இந்த நூல் உயர்ந்தது அந்த நூல் தாழ்ந்தது என்ற அளவில் விரிவடைந்தபோது, திருக்குறள் வேதங்களைப் போலவே சிறப்புடையது என நிலைநாட்டும் பொருட்டு **மறை** என முன்னோர் வழங்கியிருத்தல் கூடும். திருவள்ளுவமாலை

யில் பல இடங்களில் வேதத்தையும் திருக்குறளையும் இணைத்து நோக்கும் போக்கு விரிவடைந்திருப்பதைக் காண்கின்றோம். பேராசிரியர் டாக்டர் தெ. பொ. மீ. அவர்கள்,

> ''குறளும் பெருநூலோ?'' ''ஞானம் பாடும் உப நிஷதங்களிருக்கக் காமம் பாடும் குறளினை ஓதிக் கெடுவதோ?'' என்று எழுதியும் வருகின்றனர்...தாம் பிடித்த முயலுக்கு மூன்றேகால் என்று மன்றாடுவா ரிடம் மன்றாட வல்லார் யார்? கண்ணைத் திறந் திருப்பாருக்கு எதையேனும் காட்டுதல் கூடும். ''கண்ணைத் திறவோம்'' என்று இறுக மூடிக் கிடப்பாருக்கு எதனைக் காட்ட முடியும்?
>
> பரிமேலழகர் முதலியோர் காலத்திலும் இத்தகை யவர் இருந்தனர். அவர்களுக்காகவே இந்த உரை யாசிரியர்கள் வடமொழி மரபு பற்றி உரை கூறி ''அங்குள்ளதெல்லாம் இங்குள்ளது'' எனக்காட்ட மிக முயல்கின்றார்கள்[11]

எனக் கூறுவதும் இங்குக் கருதத்தக்கது.

ஓர் இனத்தில்/மொழியில் மிகச் சிறப்புடையனவாகக் கருதப்படும்—மக்களை நல்வழிப்படுத்துவனவாகக் கருதப் படும்—மேன்மை தருவனவாகக் கருதப்படும் நூல்களைப் **புனித** நூல்களாக — மறைகளாகக் கருதும் போக்கை வரலாறு காட்டுகின்றது.

வடபுலத்தார் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம், ஆகமம், உபநிடதம், மந்திரம் ஆகியவற்றை **மறை** களாகக் கருதுகின்றனர். இந்துக்களில் ஒரு பகுதியினர் **கீதையை** மறைநூலாகக் கருதுகின்றனர்; கிறித்துவர்கள் **பைபிளை** மறை நூலாகக் கருதுகின்றனர்; முகமதியர்கள் **குர்-ஆனை** மறை நூலாகக் கருதுகின்றனர். மற்றவர் களும் அவ்வாறே. தமிழில்—தமிழ் இனத்துக்குக் கிடைத்த உயர்ந்த நூலாகக் கருதப்படுவது திருக்குறள். அதனால் இதனைத் **தமிழ்மறை** என வழங்கியுள்ளனர் எனலாம்.

மறை என்பதற்கு அறிவுரைப் பொருள் (உபதேஷப் பொருள்) என்றும் பொருள் இருப்பதைக் கண்டோம். மக்களுக்கு அறிவுரை புகட்டும் நூலாகலின் திருக்குறள் **மறை** எனப்பட்டது. இது தமிழில் தோன்றியதால்—

தமிழரால் எழுதப்பட்டதால் **தமிழ்மறை** எனப்பட்டது எனலாம்.

திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்,

> திருக்குறள் ஒழுக்கக் கருத்துகளை வெள்ளிடை மலையாய் விளக்கிக் காட்டுதலின், அந்தக் காரணம் பற்றி வந்த பெயராகுமா என்பது ஆராயத் தக்கது. மறை—மறுத்தலைச் செய்வது. தன்னைப் பயின்றார், தீய ஒழுக்கத்தின்கண் செல்ல மறுத்தலின் மறை என்றாயிற்று என்றலே சிறப்புடைய பொருளாம் [12]

என ஓர் அரிய விளக்கம் தந்துள்ளதும் கருதத்தக்கது.

திருக்குறள் தமிழில் தோன்றிய நூலாயினும் சாதி, சமயம், இனம், மொழி, நாடு முதலிய எவ்வகை வேறுபாடுகளையும் சிறிதும் கருதாமல் எல்லார்க்கும் (பெரிதும்) பொதுவான—எக்காலத்துக்கும் ஏற்புடைய—அடிப்படைக் கருத்துகளை வெளிப்படுத்துகின்றது.

> ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
> அன்றென்ப ஆறு சமயத்தார் — நன்றென
> எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
> முப்பால் மொழிந்த மொழி (தி.மா. 9)

> ... ... ... — செய்யா
> அதற்குரியார் அந்தணரே ஆராயின் ஏனை
> இதற்குரியார் அல்லாதார் இல் (தி.மா. 23)

என வரும் திருவள்ளுவமாலைப் பாடல்கள் இக்கருத்தை வலியுறுத்துவன ஆகும். இப்பொதுமை குறித்து இந் நூலாசிரியன் 'வள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப் பொதுமையியலும்' என்னும் நூலில் தெளிவாக விளக்கி உள்ளனன்.[13] பொதுமை உணர்த்தும் நூலாகலின் திருக்குறளைப் **பொதுமறை** என்றனர்.

வானோங்கிய பெரும்புகழை இந்நூல் பெற்றிருப்பதாலும், பலமொழியினரும் தம் மொழியில் திருக்குறளை மொழிபெயர்த்துப் போற்றுவதாலும் **வான்மறை** எனவும் போற்றுகின்றனர்.

> தெய்வ வள்ளுவன் **வான்மறை** (பா.பா.சுய. 25:2)

என்பார் கவியரசர் பாரதியார்;

வள்ளுவர் தந்திட்டார் **வான்மறை** (வ.உ. 21:12)

என்பார் புலவர் கு. கணபதி அவர்கள்; புலவர் ந. சோம சுந்தரம் அவர்களும்,

வள்ளுவனின் **வான்மறை** (வ.உ. 46:4)

என்றே திருக்குறளைப் போற்றுகின்றார்.

தமிழரின் செல்வமாகவும் - ஏன்? உலகினரின் செல்வமாகவும், கண்டோரால்/கேட்டோரால் விரும்பப்படும் தன்மையதாகவும் திருக்குறள் விளங்குவதால் இதனைத் **திருமறை** என்று போற்றுகின்றார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள்.

வள்ளுவர் தந்த **திருமறையைத்** – தமிழ்
மாதின் இனிய உயிர்நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே – என்றும்
உத்தம ராகி ஒழுகுவமே (ம.மா. 52)

என்பது அவர் வாக்கு.

### 1.3.9 திருவள்ளுவப்பயன்

திருக்குறளுக்கு வழங்கப்படும் பல்வேறு பெயர்களுள் இதுவும் ஒன்று.

நாடு அரண் முதலாகக் கூறுவனவெல்லாந் **திரு வள்ளுவப்பயனிற்** காண்க.[14]

எனவரும் தொல்காப்பியப் பொருளதிகார உரையில், நச்சினார்க்கினியர் திருக்குறளைத் திருவள்ளுவப்பயன் எனக் குறிப்பிட்டுள்ளார்.

**திருவள்ளுவப் பயன்**எல்லாம் குறள்வெண்பா[15]

என்பார் பெருந்தேவனார்.

திருவள்ளுவரால் உலகுக்குண்டான பெரும்பயனாகத் திருக்குறள் விளங்குவதால், **திருவள்ளுவப்பயன்** எனப் பெயர் பெற்றது என்க. இப்பெயருக்கு வேறு விளக்கமும் தருவர்.[16]

### 1.3.10 திருவள்ளுவர்

1.3.10.1 திருவள்ளுவர் என்னும் கருத்தாப் பெயர் அவர் இயற்றிய நூலுக்கு ஆகிவந்து, கருத்தாவாகு பெயராகத் திருக்குறளைச் சுட்டுகின்றது.

> பல்காற் பழகினும் தெரியா வுளவேல்
> தொல்காப் பியம்**திரு வள்ளுவர்** கோவையார்
> மூன்றினும் முழங்கும்

எனும் பாடலில் சாமிநாத தேசிகர் அவர்கள், திருக்குறளைத் **திருவள்ளுவர்** என்னும் பெயராலேயே குறிப்பிட்டுள்ளார்கள்.[17]

1.3.10.2 திருவள்ளுவர் என்பது போலவே திரு என்னும் அடையின்றி **வள்ளுவர்** என்னும் பெயராலும் திருக்குறள் வழங்கப்படுகிறது.

> **வள்ளுவர்**சீர் அன்பர்மொழி வாசகம்

என்பார் உமாபதி சிவாசாரியார்.[18]

### 1.3.11 தெய்வ நூல்

திருக்குறள் தெய்வப் புலவர் எனக் கருதப்படும் திருவள்ளுவரால் எழுதப்பட்டதாலும், இந்நூலை நான் -முகத்தோன் தான் மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த தாலும், திருக்குறளே தெய்வத் தன்மை வாய்ந்த நூலாகக் கருதப்படுவதாலும், இந்நூலைக் கற்பார் தெய்வ நிலையை எய்துவர் என்பதாலும் இந்நூற்குத் **தெய்வ நூல்** எனப் பெயர் வாய்த்தது எனலாம். இக்காரணங் களை எல்லாம் உள்ளடக்கியே சோடாசவதானம் சுப்பராய செட்டியார் அவர்கள்,

> திருக்குறள் என்னும் **தெய்வ மாமறை**[19]

எனச் சிறப்பித்துள்ளார் போலும்!

### 1.3.12 பழமொழி

அருணகிரி நாதரும், சிவசிவ வெண்பா என்னும் நூலாசிரியரான சென்னி மல்லையர் அவர்களும் திருக்குறளைப் **பழமொழி** என வழங்கியுள்ளனர்.

> திருவள்ளுவ தேவர் வாய்மையென் கின்ற
> **பழமொழி** யையோதி யேயுணர்ந்து (திருப். திருச். 48)

... ... ... — கவிஞரியற்
பண்பால் உரைத்த பழமொழிமுன் ஈதுமொரு
வெண்பா எனவிளங்க வே

(சிவ. அவையடக்கம், 2.2.4)

என்பன அவர்கள்தம் கூற்றுகள்.

பழமொழிகள் மக்களின் அனுபவத்தால் முகிழ்த்தவை; வடிவத்தால் மிகச் சுருங்கியவை; படித்தவர் பாமரர் என்னும் இருபாலாரிடத்தும் வழங்கப்படுபவை. பழமொழிக்குரிய இப்பண்புகளைக் குறளும் பெற்று இலங்குவதால் இதனைப் **பழமொழி** என வழங்கி இருக்கலாம்; அல்லது, பழமையான மொழிகளை உடையது என்னும் பொருளில் இந்நூல் இப்பெயர் பெற்றிருக்கலாம்; அல்லது, தானே பழமையானதால் **பழமொழி** என்னும் பெயர் பெற்றிருக்கலாம்.

### 1.3.13 பால்முறை

அறம், பொருள், இன்பம் என்னும் மும்முதற் பொருள் மூன்றையும் தெளிவாகத் தேர்ந்து தெளிந்து, அவரவர்க்கு வேண்டிய கருத்துகளை முறைப்படுத்தி உரைத்துள்ள தால் இந்நூல் **பால்முறை** என வழங்கப்பட்டதெனலாம்.

அறம் எது? பொருள் எது? காமம் எது? என்பன வற்றிற்கான விடைகளைத் தேர்ந்து முறையுற உரைப்ப தனால் இப்பெயர் பெற்றது என்றும் கொள்ளலாம்.

அறமுதல் நான்கும் அகலிடத்தோர் எல்லாம்
திறமுறத் தேர்ந்து தெளியக் — குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் **பால்முறை** (தி. மா. 38:1—3)

என்பார் கோவூர்கிழார், இவ்வடிகள், திருக்குறள் ஏன் பால்முறை என வழங்கப்பட்டது என்பதற்கான விளக்க மாகவும் அமைகின்றன.

### 1.3.14 பொய்யாமொழி

திருவள்ளுவமாலையில் வெள்ளிவீதியார் திருக் குறளைப் **பொய்யாமொழி** என வழங்குகிறார்.[20] தப்பாது வாய்க்கும் (வாய்மை) நீர்மையது வள்ளுவர் வாய்மொழி என்பதனால் இவ்வாறு வழங்கினர் எனலாம். **பொய்யா**

**மொழி** என்பது நூலுக்கு அடையடுத்த கருவியாகுபெயர். இப்பெயருக்கான காரணத்தைக்

> கால மாற்றத்தானும், மக்களின் கருத்து மாற்றத் தானும், கருதிய பொருளைத் தரமுடியாமல் ஒழிகின்ற ஏனைய மொழிகளைப் போல் அல்லா மல், கருதியதைக் கருதிய வண்ணம் தரும் மொழி யாதலின் பொய்யாமொழி ஆயிற்று எனவும் பொருள் சொல்லலாம். பொய்யாமொழி சத்தியம்; என்றும் உள்ள பொருள். அதனை உணர்த்தும் நூலாதலின், பொய்யாமொழியாயிற்று எனலும் பொருந்தும். பொய்யில் புலவனது மொழியாதலின் பொய்யா மொழி ஆயிற்று எனலும் ஆம் [21]

என நயமாக உரைப்பார் மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்.

### 1.3.15 பொருளுரை

சீத்தலைச் சாத்தனார் அவர்கள் தாம் பாடிய மணி மேகலை என்னும் இறவாக் காப்பியத்தில்,

> தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
> பொய்யில் புலவன் **பொருளுரை** தேறாய்
>
> (மணி. 22:59 - 61)

என வள்ளுவர் குறளை (ஈற்றில் சிறிது மாற்றி)ச் சுட்டி, திருக்குறளைப் **பொருளுரை** என்றும் வழங்குகின்றார்.

பொருள் உரை என்பது, வெற்றுரை போல் அல்லா மல் மனித வாழ்விற்குப் பயன் தரும் பொருள் பொதிந்த உரை எனப் பொருள்படும்.

பொருள் என்பதற்கு உறுதிப்பொருள் என்னும் பொருளும் உண்டு. மனிதன் வாழ்வில் அடைய வேண்டிய உறுதிப் பொருள்கள் மூன்று. அவை அறம், பொருள், இன்பம் என்பன. இவற்றையே 'அறமுதலாகிய மும்முதற் பொருள்' என்கிறது தொல்காப்பியம்.

மனித வாழ்க்கையில் அடைய வேண்டிய உறுதிப் பொருள்களான — உறுதிக் குறிக்கோள்களான அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றையும் உரைத்து,

மக்களை நல்லாற்றுப்படுத்துவதால் திருக்குறளைப் **பொருளுரை** (பொருள் உரைப்பது) என்றனர் என்றல் சாலும்.

### 1.3.16 முதுமொழி

திருக்குறளுக்கு வழங்கப்படும் பல்வகைப் பெயர்களுள் **முதுமொழி** என்பதும் ஒன்று. திருக்குறளை ஈற்றிரண்டு அடிகளில் கொண்டு இயற்றப்பட்ட **சோமேசர் முதுமொழி வெண்பா, முதுமொழி மேல் வைப்பு** என்னும் நூல்களின் பெயர்களில் வரும் **முதுமொழி** என்பது திருக்குறளைக் குறிப்பதே.

> 'நுண்மையும் சுருக்கமும் ஒளியுடை மையும்
> எண்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
> குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
> ஏது நுதலிய முதுமொழி யென்ப'

என முதுமொழிக்கு இலக்கணம் வரையறுக்கின்றது தொல்காப்பியம் (தொல். 1433). 1. நுட்பம், 2. சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல், 3. உண்மை உடைமை, 4. எளிமை, 5. குறித்த பொருளைத் தெளிவுற, மயக்கமற முடித்தல், 6. காரண காரியம் காட்டல் ஆகிய அறுவகைப் பண்புகளைக் கொண்டிலங்குவது முதுமொழி என்றாகிறது. இப்பண்புகள் அனைத்தும் கொண்டிலங்குவது திருக்குறள்; ஆகையால் இதனை **முதுமொழி** என்றனர்.

> முதுமை என்பது தொன்மையும், பேரறிவுடைமையும் காட்டும் பண்புச்சொல். தமிழில் இன்றுள்ள நூல்களில் தொன்மையானதாக, பேரறிவு பயப்பதாக இருக்கும் நூல் இதனையன்றி வேறொன்றும் இல்லையாதலின், முதுமொழி என்று போற்றப்படுவதாயிற்று. அன்றியும் இதனைக் கற்றவன் ஆண்டில் இளையவனாயினும், அனுபவ அறிவால் பண்பட்ட முதியோனாதலால், முதுமையைப் பயக்கு மொழி முதுமொழி ஆயிற்று எனலுமாம். ....... முதியோர் மொழி, முதுமொழி ஆயிற்று என்றலும் பொருந்தும் [22]

என அரிய — புதிய விளக்கம் தருவார் மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்.

### 1.3.17 முப்பால்

திருக்குறள், அறம் பொருள் காமம் என்னும் மூன்று பகுப்புகளை உடைய காரணத்தால் **முப்பால்** என வழங்கப்படுகிறது. முப்பால் என்னும் பெயரே திருக்குறளுக்கு இயல்பாக அமைந்த பெயர் என்பர்.[23]

தமிழர் போற்றிய அறம் முதலாகிய மும்முதற் பொருள்களை முறைப்படுத்தி உரைத்த முதல்நூல் குறள் என்பதும் கருதத்தக்கது.

திருக்குறளை **மெய்ஞ்ஞான முப்பால்** (வ. உ. 41 : 2) என வழங்குகிறார் திரு. அர. தமிழ்ச்செல்வன் அவர்கள்.

### 1.3.18 வள்ளுவம்

சைவர் தம் மதக்கொள்கைகளைச் **சைவம்** என்பர்; வைணவர் தம் மதக்கொள்கைகளை **வைணவம்** என்பர்; சமணர் தம் மதக்கொள்கைகளைச் **சமணம்** என்பர்; பௌத்தர் தம் மதக்கொள்கைகளைப் **பௌத்தம்** என்பர். கிறித்துவ மதக்கொள்கைகளைக் **கிறித்துவம்** என்றும் வழங்கக் காண்கிறோம்.

இவ்வாறே, தற்போது, தமிழர்களின் தனிநிலைக் கொள்கைகளைத் **தமிழம்** என்று வழங்குகின்றனர்; மனிதன் வாழ்வதற்கான — வாழ்க்கைக்கான கொள்கைகளை **மனிதம்** என்றும் வழங்குகின்றனர். **அம்** என்னும் பிற்சேர்ப்பு **கொள்கை** என்னும் பொருளில் இங்கெல்லாம் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வகையில் வள்ளுவரின் கொள்கைகளை **வள்ளுவம்** என்னும் சொல்லால் வழங்குகின்றனர்.

இப்பெயர் முதன்முதல் திரு. வி. க. அவர்களால் உருவாக்கப்பட்டதேயாயினும், அதற்குப் புத்துயிர் ஊட்டியவர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களே. பின்னர், பல தமிழ் அறிஞர்கள்/கவிஞர்கள் திருக்குறளை இப் பெயரால் வழங்கி வருகின்றனர்.

வள்ளுவத்தின் சொற்களுக்கு
இல்லை உலகில் இணை (வ. உ. 7: 3-4)

என்பார் புலவர் கீரன் அவர்கள்;

வள்ளுவமே ஞாலப் பொதுமறையாம் (வ. உ. 12: 2)

என்பார் மதுர கவிமணி மா. வரதராசன் அவர்கள்;

வள்ளுவத்தை,
ஓதி உணர்வதே மேல் (வ. உ. 14: 3-4)

என்பார் புலவர் செல்லப் பாப்பா கீரன் அவர்கள்;

வள்ளுவம் நம்பாட்டன் சொத்து (வ. உ. 44: 4)

எனப் பெருமை கொள்வார் புலவர் பாரதிப்பித்தன் அவர்கள்.

டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் தாம் எழுதிய கற்பனைப் பொழிவு நூல் ஒன்றுக்கு **வள்ளுவம்** என்றே பெயரிட்டுள்ளார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.[24]

### 1.3.19 வள்ளுவ மாலை

பிரபந்த தீபிகை என்னும் நூலின் ஆசிரியரான வேங்கட சுப்ப பாரதியார் அவர்கள் திருக்குறளை **வள்ளுவ மாலை** என வழங்குகின்றார்.[25]

மாலை என்பது தொடுக்கப்பட்டது / தொகுக்கப் பட்டது என்னும் பொருளுடையது. பல்வண்ணப் பூக்களை (அல்லது ஒரே வகையான பூக்களை) ஏதேனும் ஒரு நிரல்பெறத் தொகுப்பதை மாலை என்கிறோம். அதுபோலவே பால்தொறும், அதிகாரந்தொறும், இயல் தொறும் ஒரே சீரான கருத்துகளை ஒரு நிரல்பட வகை தொகை செய்துதரும் நூலாகலின், திருக்குறளை **வள்ளுவமாலை** என வழங்கினர் எனலாம். பூக்களால் ஆகிய மாலை பூமாலை; பாக்களால் ஆகிய மாலை பாமாலை; இவை போல, வள்ளுவரின் கருத்துகளால் - வள்ளுவத்தால் ஆகிய மாலையை **வள்ளுவமாலை** என்பது பொருத்தமே.

### 1.3.20 வள்ளுவர் வாய்மொழி

திருக்குறளை **வள்ளுவர் வாய்மொழி** என வழங்கும் வழக்குத் திருவள்ளுவமாலையிலேயே காணப்படுகிறது.

ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ளம் உருக்குமே
**வள்ளுவர் வாய்மொழி** மாண்பு (தி.மா. 24)

என்பார் மாங்குடி மருதனார்.

**வள்ளுவர் வாய்மொழி** என்பதற்கு வள்ளுவர் வாயிலிருந்து தோன்றிய மொழி (அல்லது கருத்து) எனப் பொருள் கொள்ளலாம். **வாய்மொழி** என்பதற்குத் தப்பாது வாய்க்கும் மொழி எனப் பொருள் கொள்ளல் சாலப் பொருந்தும். இவ்வாறு கொள்ளின், **வள்ளுவர் வாய்மொழி** என்பதற்கு வள்ளுவர் வாயிலிருந்து தோன்றிய, தப்பாது வாய்க்கும் மொழி எனப்பொருள் கிடைக்கும்.

இக் கருத்துகளின் அடிப்படையில் திருக்குறளை **வள்ளுவன் வாய்ச்சொல்**, **வள்ளுவனார் தெள்ளுதமிழ் வாக்கு**, **வள்ளுவர்தம் வாய்க்குறள்**, **திருவள்ளுவன் வாக்கு** என்றெல்லாம் பெயரிட்டு வழங்குவாரும் உளர்.[26]

### 1.3.21 வள்ளுவனார் வைப்பு

திருக்குறள், தமிழினத்துக்கு-இவ்வுலகுக்கு வள்ளுவர் வழங்கிய விலைமதிக்க முடியாத கருவூலம் போன்றது. வள்ளுவனார் உலகிற்குத் தந்த வைப்பு (சொத்து) திருக்குறள் ஆகலான், ஒருவருடைய சொத்தை அவர்தம் பெயராலேயே வழங்குதல் போல, இதனை வள்ளுவர்தம் பெயராலேயே **வள்ளுவனார் வைப்பு** என்றனர்.

பெருந்தொகை 1999 ஆம் பாடல் திருக்குறளை **வள்ளுவனார் வைப்பு** என்று வழங்குகிறது.

முப்பாலும் உண்டோ முலைப்பால் இனிநுகரோம்
அப்பாலுக் கப்பாலு மாயிருக்கும்—எப்பொருளும்
உள்ள படியுணர்ந்தோம் ஓதிக் குறைதீர்ந்தோம்
**வள்ளுவனார் வைப்**பெமக்கு வாய்த்து

என்பது அப்பாடல்.

### 1.3.22 வாயுறை வாழ்த்து

வாழ்த்தியல் வகைகள் நான்கனுள் ஒன்றாக வாயுறை வாழ்த்தைக் குறிப்பிட்டு, அதற்கு,

வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே

என இலக்கணமும் வரையறுக்கிறது தொல்காப்பியம் (தொல். 1369). இதற்கு உரை எழுதிய இளம்பூரணர்,

வாயுறை வாழ்த்தை விளங்க ஆராயின் வேம்பினையும் கடுவினையும் போல வெஞ்சொல் லடக்காது பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாவற் கிளவியானே மெய்யறிவித்தல் என்றவாறு[27]

என்பார்; பேராசிரியர்,

முற்பருவத்துக் கைத்து, பிற்பருவத்து உறுதி பயக்கும் வேம்பும் கடுவும் போல வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாத்துக் கிளக்கும் கிளப்பினான் மெய்யாக அறிவுறுத்துவது வாயுறை வாழ்த்தெனப்படும்[28]

என்பார். இளம்பூரணர் வெஞ்சொல் இல்லாது வரும் என்கிறார்; பேராசிரியர் வெஞ்சொல் பெற்றுவரும் என்கிறார். திருக்குறளில் இவ்விரு நிலைகளும் உண்டு;

பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி எனல் (குறள். 196)

இக்குறள் வெஞ்சொல் பெற்று வந்துள்ளது.

நயனில சொல்லினும் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று (குறள். 197)

இக்குறள் வெஞ்சொல் பெறாது வந்துள்ளது.

இவ்வாறு வெஞ்சொல் பெற்றும் பெறாமலும், உயிருக்கு நன்மை பயக்கும்—உலகத்தை வாழ்விக்கும் உயர்ந்த கருத்துகளைப் பெற்று உள்ளமையால் திருக்குறளை **வாயுறை வாழ்த்து** என்றனர்.

வாயுறை — மருந்து, வாழ்த்து — வாழ்வித்தல்; உடம்புக்கு உறுதி செய்யும் மருந்து போல, உயிர்க்கு உறுதி செய்து உலகத்தை வாழ்விக்கும் நூலென்க; நீதிகளை வற்புறுத்துக் கூறுவ தென்ற

வாறு ... வாய்க்கண் தோன்றிய மருந்து என வேற்றுமைத் தொகையுமாம்[29]

என்பார் வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யர் அவர்கள்.

## 1.3.23 திருக்குறள்

வள்ளுவர் எழுதிய நூலுக்கு முப்பால் என்னும் பெயரே முன்பு பெருவழக்காக வழங்கப்பட்டுள்ளது. இதனைத் திருவள்ளுவமாலை நமக்குத் தெளிவுபடுத்து கின்றது.

பண்டைய நிலைக்கு மாறாக, இன்று **திருக்குறள்** என்னும் பெயரே, வள்ளுவர் இயற்றிய நூலின் பெரு வழக்குப் பெயராக உள்ளது. திருக்குறள் என்னும் பெயர் இன்று பெருவழக்காக வழங்கப்படுவதற்குரிய காரணங்களுள் சிலவற்றைக் கீழ்வரும் தலைப்புகளில் காணலாம்.

1. பெயர் மரபு
2. பாவின் சிறப்பு
3. நூல் எழுந்த சூழல்
4. பெயர் விளக்கம்

(இவற்றுள் இடையிரண்டும், இந்நூலாசிரியனின் **தமிழ்யாப்பு—சில புதிய கோணங்கள்** என்னும் நூலில் வரும் **குறள் வடிவமும் வள்ளுவர் நோக்கமும்** என்னும் கட்டுரையில் தெளிவாக விளக்கப்பட்டிருப்பதால்,[30] ஏனை இரண்டு மட்டுமே இங்கு விளக்கம் பெறுகின்றன.)

### 1.3.23.1 பெயர் மரபு

#### 1.3.23.1.1 பாடலால் பெற்ற பெயர்

சங்கத் தொகை நூல்களுள் ஒன்றாகிய கலித்தொகை 150 பாடல்களைக் கொண்ட தொகுதியாகும். இதில் உள்ள எல்லாப் பாடல்களும் கலிப்பாவால் ஆகியவை. கலிப் பாவால் ஆகிய பாடல்களைக் கொண்டமையால் இந்நூற் றொகையைக் **கலித்தொகை** என வழங்கியுள்ளனர்.

அதாவது, தொகையில் உள்ள பாடல் வகையின் அடிப் படையில் நூலுக்குப் பெயரிட்டுள்ளனர்.

இதே போன்று, பரிபாட்டால் அமைந்த பாடல்களைக் கொண்ட தொகைநூலைப் **பரிபாடல்** என வழங்கி யுள்ளனர்.

வள்ளுவர் எழுதிய நூல் முழுவதும் குறட்பாவினால் அமைந்துள்ளதால், **குறள்** என்னும் பெயர் பெறுவதா யிற்று எனலாம். இப்பெயர், மரபுவழித்தான சிறப்புக் குரிய பெயர் எனலாம்.

### 1.3.23.1.2 அளவால் பெற்ற பெயர்

சங்கத் தொகை நூல்களுக்குப் பெயரிடப்பட்ட முறை களுள் ஒன்று பாடலின் அடி எண்ணிக்கையை அடிப்படை யாகக் கொண்டு பெயரிடப்பட்டதாகும். **ஐங்குறுநூறு, குறுந்தொகை, நெடுந்தொகை** (அகநானூறு) என்னும் பெயர்கள் இவ்வாறு அமைந்தவையே.

மிகக் குறுகிய அடிகளைக் கொண்ட பாடல்களால் ஆகியதால் வள்ளுவரின் நூல் **குறள்** (=குறுமை) என வழங்கப்பட்டது என்றும் கொள்ளலாம். இவ்வாறு கொள்ளினும் இப்பெயர், மரபு வழித்தான சிறப்பினை யுடைய பெயராகவே விளங்குகின்றது.

### 1.3.23.1.3 திரு என்னும் அடை

பத்துப்பாட்டில் முதல் நூலாக விளங்குவது முரு காற்றுப்படை. இந்நூல் திரு என்னும் அடைபெற்றுத் **திருமுருகாற்றுப்படை** என்று வழங்கப்படுகிறது. இவ் வாறு, திரு என்னும் அடையுடன் ஒரு நூலை வழங்குவது அருகிய வழக்காயினும், ஒருவகையில் மரபுக்குத் தொடக்கம் என்றும் கொள்ளலாம். **திருக்குறள்** என்னும் பெயரிலும் இம்மரபு காணப்படுகிறது.

### 1.3.25,1.4 மரபும் சிறப்பும்

மரபு என்பது உடனே மாறக்கூடியது அன்று; நெடு நாள் நிலைத்து நிற்பது எனலாம். மரபிலிருந்து மாற்றம்

ஏற்படுமானால், அது மெல்ல மெல்லவே நிகழும்; மரபை ஒட்டியே நிகழும்.

மேலும், தொல்காப்பியமே மரபின் இன்றியமையா மையைப் பெரிதும் வலியுறுத்துகின்றது எனக் கண்டோம்; 'மரபுநிலை திரியா மாட்சி' என்பது எல்லாவகையிலும் பொருந்தும் ஒரு மரபுச் செய்தியாகும்.

திருக்குறள் என்னும் பெயர், மரபை ஒட்டி அமைந் துள்ளது. மரபு போற்றப்பட்ட சூழலில் இப்பெயர், நிலைப் புக்குக் காரணமாயிற்று எனலாம்.

### 1.3.23.2 **பெயர் விளக்கம்**

திருக்குறள் என்பதில் **திரு** என்பது சிறப்பு அடை. இத் திரு என்னும் அடைக்குப் பல்வேறு பொருள்கள் இருப்பினும்,

1. செல்வம்
2. மதிப்பு / சிறப்பு
3. அழகு அல்லது கண்டோரால் விரும்பப்படும் தன்மை

என்னும் மூன்று பொருள்கள் இங்குக் கருதத்தக்கவை.

திரு என்பது **குறள்** (பா வடிவம்) என்பதற்கு அடை யாகவும் வரும்; குறளால் ஆகிய நூல் என்பதற்கு அடையாகவும் வரும்.[40]

**குறள்** என்பதற்கு இங்கு இருவகைப் பொருள்கள் கொள்ளலாம்.

1. குறுகிய வடிவம்
2. குறள் வெண்பா

மேற்சுட்டிய விளக்கங்களையொட்டிய நிலையில், **திருக் குறள்** என்னும் பெயருக்குரிய பல்வேறு விளக்கங்களைப் பின்வரும் வரிப்படம் விளக்கும்:




படம் : 3

திரு என்பதைக் குறள் என்பதற்கு அடையாகக் கொண்டால், கிடைக்கும் பொருள் விளக்கங்களைப் பின் வரும் வரிப்படம் விளக்கும்:




படம் : 4

திரு என்பதைக் குறள் என்பதன் ஆகுபெயராக வரும் நூலுக்குரியதாகக் கொண்டால் கிடைக்கும் பொருள் விளக்கங்களைப் பின்வரும் வரிப்படம் விளக்கும்:




படம் : 5

மேற்சுட்டிய வரிப்படங்கள் காட்டியவாறு பல்வேறு விரிவு விளக்கங்களைக் கொண்டது **திருக்குறள்** என்னும் பெயர்.

இதுவரை கண்டவற்றால், திருக்குறள் என்னும் பெயர், மரபு வழித்தான சிறப்பினையும், பல்வேறு பெயர் விளக்கங்களையும் உள்ளடக்கியது என்பது தெளிவு. மேலும், இப்பெயரில் வரும் **குறள்** என்னும் சொல், இயல்பான ஓசை, தூய்மை, படைப்பதில் அருமை ஆகிய பெருமைகளை உள்ளடக்கியது; பாவகை வரலாற்றில் ஒருபெரும் திருப்புமுனையாக அமைந்து, பல்வேறு நூல்கள் தோன்றக் காரணமாக அமைந்த சிறப்பினை உடையது; கல்விச் சூழல், சமுதாயச் சூழல், இலக்கியச் சூழல் ஆகியவற்றிற்கு ஈடு கொடுக்கும் வகையில் மலர்ந்த வீறுடையது.[31]

மேற்சுட்டிய சிறப்புகளுள் சில / பல, திருக்குறளுக்கு வழங்கும் வேறு பெயர்களுக்கும் உரியனவாக இருக்கலாம். ஆனால், இச்சிறப்புகள் **அனைத்தையும்** உள்ளடக்கிய ஒரே பெயர் **திருக்குறள்** என்பதே. ஆகவே இப்பெயர், மற்ற எப்பெயரினும் பெருஞ்சிறப்புக்கு உரியதாகப் போற்றப்பட்டுப் பெரிதும் வழங்கப்படுகின்றது என்க.

## குறிப்புகள்

1. 'The great Sung dynasty Confucianist, Chu Hsi, suggested that while Confucius himself was responsible for the first section of the *Great Learning*, Tsêng-tzü wrote the rest, whilst other scholars have attributed the *Classic of Filial Piety* to him. Though both these ascriptions are now considered to be erroneous, they do witness to the importance and influence of Tsêng-tzü in the confucian tradition'.

   — D. Howard Smith, *Confucius*, Temple Smith, London, 1973, pp. 57-58.

   'The Ta-Hio (Ta-Hsüeh) "The Great Study", consists of a short treatise always held to be by Khung-fu-Tsü himself until our modern scepticism and incredutity set to work on it, and a commentary on this by Khung's disciple Thseng-Tsü. I am anable to find any substance in the assertion by Dr. Fung that the root treatise is in fact a latter forgery. Science does not consist merely in denial of what has hitherto been held true. Legge (Chinese Classic) seems definite that the book, which he calls *T'ai Hsio* was probably written by Khung-Chi Tsü-sse, the grandson of Confucius, as was also stated by Chiā K'wei in the first century A.D.

   — Dr. Pauthier, *The Gospel of China*, Duncan Greenless (Tra.), The Theosophical publishing house, Madras, 1949, p. iii.

2. காண்க : பின்வைப்பு *1/1*

3. 'வள்ளுவர் கருத்தின் உண்மை உணர்ந்த ஆலத்தூர் கிழார் என்னும் புலவர், புறநானூற்றில் மலை விளக்காக விளங்கும் ஓரிடத்தில்

   " ஒருவன் செய்திகொன்றோர்க்கு உய்தி இல்லென அறம்பா டிற்றே ஆயிழை கணவ " என அறம் என்ற பெயராலேயே இந்நூலை அமைத்துள்ளமை காண்க.'

   — ச. தண்டபாணி தேசிகர், *திருக்குறள் அமைப்பும் அழகும்*, முத்தையா நிலைய வெளியீடு, சென்னை, *1969*, ப. *26*.

   ' அறத்தையே நூற்பொருளாகக் கொண்டு எழுந்த முதல் நூலாதலின், திருக்குறளுக்கு அறம் என்ற பெயர் பண்டு வழங்கலாயிற்று. '

   — டாக்டர் வ. சுப. மாணிக்கம், **இலக்கிய விளக்கம்**, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1973, ப. 15.

4. காண்க : இந்நூலாசிரியனின் *'வள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப் பொதுமையியலும்'* என்னும் நூல், திருக்குறள் ஆய்வுப் பகுதி, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1981.

5. டாக்டர் வ. சுப. மாணிக்கம், மு. நூ., ப. 65.

6. ' அறத்திற்கு வேலியதும் அன்புப் பிணைப்பும்
சிறப்புப் பொருளின்பச் சீரும் — மறப்பரிய
தென்றலுக்கு முன்பிறந்த செந்தமிழின் பண்பாடும்
*ஒன்றேமுக் காலடி*யென் றோது.'

— சொ. சொ. மீ. சுந்தரம், *வள்ளுவர் உலகம்*, 17.

7. திவாகர வாமன முனிவர், *நீலகேசி உரை*, பேராசிரியர் ஏ. சக்ரவர்த்தி (பதி.), கும்பகோணம், 1936, பாடல் 326.

8. ' ஈண்டு ஒத்து என்பது வேதம்.'

— இளம்பூரணர், *தொல்காப்பியம் - பொருளதிகாரம்-இளம்பூரணம்*, கழக வெளியீடு, சென்னை, 1969, ப. 34.

' ஒத்தின் ஆன — வேதத்தினாற் பிறந்த வட நூல்களும் தமிழ் நூல்களும்.'

— நச்சினார்க்கினியர், *தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியர் உரை*, கழக வெளியீடு, சென்னை, 1965, ப. 66.

9. அடியார்க்கு நல்லார், *சிலப்பதிகார மூலமும் அடியார்க்கு நல்லாருரையும்*, உ. வே. சாமிநாதையர் (பதி.), ஜூபிலி அச்சுக்கூடம், சென்னை, 1892, ப. கரு.

10. நேரடியாகக் கேட்டறிந்த நாள் 9—9—79

11. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், *வள்ளுவர் கண்ட நாடும் காமமும்*, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1954, பக். 157-158.

12. மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர், மு. நூ., ப. 24.

13. டாக்டர் கு. மோகனராசு, *வள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப் பொதுமையியலும்*, மு. நூ.

14. நச்சினார்க்கினியர், மு. நூ., ப. 232.

15. பெருந்தேவனார், *வீர சோழிய உரை*, பவானந்தம் வெளியீடு, சென்னை, 1942, ப. 171.

16. ' *திருவள்ளுவப் பயன்* - ஆசிரியராகிய திருவள்ளுவரது அறிவு அனுபவங்களும் வாழ்க்கையின் பயனுமாகிய இவற்றின் வடிவமே இந்த இலக்கியம். ஆதலால் திருவள்ளுவப் பயன் ஆயிற்று.'

— மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர், மு. நூ., ப. 25.

17. சாமிநாத தேசிகர், *இலக்கணக் கொத்து*, பாயிரம் 7:45-47.

18. 'வள்ளுவர்

திருவள்ளுவர் என்பது போலக் கருத்தா ஆகுபெயராக அமைந்த பெயர் இது. உமாபதி சிவாசாரியார் பாடியதாக வழங்கும் பாட்டில்,

" வள்ளுவர்சீர் அன்பர்மொழி வாசகம் "

என வருவது காண்க.'

— கி. வா. ஜகந்நாதன், *திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு*, முன்னுரை, ஸ்ரீ ராமகிருஷ்ணமிஷன் வித்யாலயம், கோவை, 1963, ப. ஆறு.

19. சோடாசாவதானம் சுப்பராய செட்டியார், *திருக்குறண் மூலமும் பரிமேலழகர் உரையும்*, ஆறுமுக நாவலர் (பதி.), வித்தியாநூபாலனயந்திர சாலை, சென்னை, பிங்கள ஸ்ரீ, ப. 6.

20. 'செய்யா மொழிக்கும் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே'

— வெள்ளி வீதியார், *திருவள்ளுவமாலை*, 23: 1-2.

21. மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர், மு. நூ., பக். 21-22.

22. ஷை

23. 'ஆகவே திருக்குறளுக்கு இயல்பாக அமைந்த பெயர் முப்பால் என்றே தோன்றுகின்றது. பன்னிரு படலம் என்பது போல நூலின் பகுதியளவு கொண்டு அமைந்த பெயர் இது என்று கொள்ள வேண்டும்.'

—கி. வா. ஜகந்நாதன், மு. நூ., ப. நான்கு.

24. டாக்டர் வ. சுப. மாணிக்கம், *வள்ளுவம்* (*கற்பனைப் பொழிவுகள்*), பாரி நிலையம், சென்னை, 1969.

25. வேங்கட சுப்ப பாரதியார், *பதினெண்கீழ்க்கணக்கு, முதல் தொகுதி*, எஸ். ராஜம் (பதிப்பு), சென்னை, 1959, ப. 6.

26. 'மாபுலவன் வள்ளுவன்வாய்ச் சொல்'

—இறையனார், *திருவள்ளுவமாலை*, 3 : 4.

'வள்ளுவனார் தெள்ளுதமிழ் வாக்கு'

—சண்முக தாயுமானவன், *வள்ளுவர் உலகம்*, 27 : 4.

'வள்ளுவர்தம் வாய்க்குறள்'

—ச. குமார அழகப்பன், *வள்ளுவர் உலகம்*, 33 : 1.

‘ வாய்த்ததிரு வள்ளுவன் வாக்கு ’
—சு. சண்முக சுந்தரம், *வள்ளுவர் உலகம்*, 37 : 4.

27. இளம்பூரணர், மு. நூ., ப. 475.

28. பேராசிரியர், *தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பேராசிரியம்*, கழக வெளியீடு, சென்னை, 1969, ப. 291.

29. ஸ்ரீ உ. வே. வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யர், *திருக்குறள், அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் மூலமும் பரிமேலழகருரையும்*, வை. மு. நரசிம்மன் (பதி.), வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யர் கம்பெனி, சென்னை, 1965, பக். XII—XIII.

30. டாக்டர் கு. மோகனராசு, *தமிழ்யாப்பு — சில புதிய கோணங்கள்*, வள்ளுவர் கழகம், சென்னை, 1980, பக். 72-91.

31. ஷ்டி

32. ‘திருவள்ளுவர் அருளிய நூல் திருக்குறள். திரு+குறள் = திருக்குறள். திரு, பலபொருள் ஒருசொல். இங்கே இரண்டு பொருள் குறிக்கத்தக்கன. ஒன்று செல்வம்; மற்றொன்று அழகு. செல்வம் : அறம், பொருள், இன்பம். அழகு : கண்டோரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்; இது பேராசிரியர் கூறியது. குறளில் முச்செல்வமென்னும் அறம்—பொருள்—இன்பம் உண்மையானும், கண்டோரால் விரும்பப்படும் தன்மை நோக்கமாகிய அழகு உண்மையானும், அது, திரு என்னும் பொருந்திய அடைபெற்றுத் திருக்குறள் என்று அழைக்கப்படலாயிற்று.’

—திரு.வி. கலியாணசுந்தரனார், *திருக்குறள் விரிவுரை, (பாயிரம்)*, சாது அச்சுக்கூடம், சென்னை, 1956, ப.11.

**இணைப்பு** 1/1

வள்ளுவர் நூலுக்கு வழங்கப்படும் (34) பெயர்களின் அகர வரிசை வருமாறு:

அறம்
இரண்டு
உத்தர வேதம்
எழுதுண்ட மறை
ஒன்றே முக்காலடி
ஓத்து
கட்டுரை
குறளமுது
தமிழ்மறை
திருக்குறள்
திருமறை
திருவள்ளுவப் பயன்
திருவள்ளுவர்
திருவள்ளுவன் வாக்கு
திருவறம்
தெய்வநூல்
பழமொழி
பால்முறை
பொதுமறை
பொய்யாமொழி
பொருளுரை
முதுமொழி
முப்பால்
மெய்ஞ்ஞான முப்பானூல்
வள்ளுவம்
வள்ளுவ மாலை
வள்ளுவர்
வள்ளுவர் வாய்மொழி
வள்ளுவர் வாய்ச்சொல்
வள்ளுவ தேவர் வாய்மை
வள்ளுவனார் தெள்ளுதமிழ் வாக்கு
வள்ளுவனார் வைப்பு
வாயுறை வாழ்த்து
வான்மறை

# 2
# அறம் பொருள் இன்பம் – வைப்புமுறை மரபு

## 2.1 கோட்பாடுகள்

தமிழ் மண்ணில், தொல்காப்பியர் காலத்துக்கும் முன்னிருந்தே வழங்கிவரும் கோட்பாடுகள் இரண்டு:

1. *அகம் புறம்* என்னும் கோட்பாடு
2. *அறம் பொருள் இன்பம்* என்னும் கோட்பாடு

இவ்விரு கோட்பாடுகளையும் ஒப்பிட்டு நோக்கிய பண்டைய உரையாளர்கள், அகத்துள் இன்பமும் புறத்துள் ஏனைய இரண்டும் (அறமும் பொருளும்) அடங்கும் என்பர்.




படம் : 6

அகப்பொருள், புறப்பொருள் இலக்கிய இலக்கணங்களை ஆராயின் நமக்குக் கிடைக்கும் முடிவுகள் சற்றே மாறுபடுகின்றன. அகத்திலும் அறம் உண்டு, பொருள் உண்டு, இன்பம் உண்டு; புறத்திலும் அறம் உண்டு, பொருள் உண்டு, இன்பம் உண்டு என்பனவே அம் முடிவுகள்.




படம் : 7

மேலும், அறம் பொருள் இன்பம் என்பது **வாழ்வியல் கோட்பாடு**; மக்கள் நலன்கருதும் ஆன்றோர்கள் நூல்களின் வாயிலாக உணர்த்த வேண்டிய உணர்த்து பொருள் பாகுபாடு. அகம் புறம் என்பது 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கி'ற்கு உரிய **இலக்கியக் கோட்பாடு**; பாடுபொருள் பாகுபாடு. வாழ்க்கை நெறியைப் பற்றியே இலக்கிய நெறி படர்வதால், இந்த இரண்டு கோட்பாடுகளும் ஒன்றினுள் ஒன்று இணைந்தும் மயங்கியும் வந்துள்ளன.

வாழ்வியல்
கோட்பாடு
(அல்லது)
உணர்த்து
பொருள்
பாகுபாடு

இலக்கியக்
கோட்பாடு
(அல்லது)
பாடு
பொருள்
பாகுபாடு




வாழ்க்கை
நெறிமுறை

**படம் : 8**

## 2.2 *அறம் பொருள் இன்பம்—வைப்புமுறை*

*வையத்துள் வாழ்வாரை வாழ்வாங்கு வாழவைப்ப தற்குப் பண்டைத் தமிழர் கண்ட உறுதிப் பொருள்களே அறம், பொருள், இன்பம். இவற்றை, 'ஊதியம்'* (தொல். 987:13), *'மும்முதற்பொருள்'* (தொல். 1363:2), *'மூன்றன் பகுதி'* (தொல். 987:17) *என வழங்கினர்.*

*தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே* ***அறம் பொருள் இன்பம்*** *என்னும் கோட்பாடு தமிழரிடையே நிலவி வந்துள்ளது. இதனை,*

> *அந்நிலை மருங்கின் அறமுத லாகிய*
> *மும்முதற் பொருட்கு முரிய வென்ப*
>
> (தொல். *1363*)

*என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறிய முடிகின்றது.*

அறம் பொருள் இன்பம் என்னும் மும்முதற் பொருள்களின் வைப்பு முறையை நோக்கின், இருவகை வைப்பு முறைகள் தொல்காப்பியத்திலேயே காணப்படுகின்றன. ஒன்று, **அறம் பொருள் இன்பம்** என்னும் வைப்பு முறை; இதனை மேற்சுட்டிய தொல்காப்பிய நூற்பா 1363-ஆல் அறியலாம்.

இவ் வைப்பு முறையே சங்க இலக்கியங்களில் பெரிதும் காணப்படுகின்றது.

ஆற்றல்சால் கேள்வி யறம்பொரு ளின்பம்
(குறிஞ். இறுதி வெண்பா : 1)

அறனும் பொருளு மின்பமும் மூன்றும் (புறம். 28)

அறம் பொருள் இன்பம் உயிரச்சம் (குறள். 501)

இவ்வைப்பு முறையே சங்க காலத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டதாக விளங்கியது என்பதை,

அறம்முத லாகிய மும்முதற் பொருள் (தொல்.1363:1-2)

என்னும் தொடரில் வரும் **அறமுதலாகிய** என்னும் தொகையே உறுதிப்படுத்துகின்றது.

மேற்சுட்டிய அறம் பொருள் இன்பம் என்னும் வைப்பு முறைக்கு மாறாக விளங்குகின்றது இரண்டாவது வைப்பு முறை. இவ்வைப்புமுறை **இன்பம் பொருள் அறம்** எனக் காணப்படுகின்றது.

இன்பமும் பொருளும் அறனும் என்றாங்
கன்பொடு புணர்ந்த ஐந்திணை (தொல். 1038: 1-2)

என்பது தொல்காப்பியம்.

இவ்விருவைப்புமுறை அமைப்புகளையும் பின்வருமாறு காட்டலாம்:

1. அறம்→பொருள்→இன்பம்
2. இன்பம்→பொருள்→அறம்

இரண்டாவது அமைப்பைப் பின்வருமாறும் குறிக்கலாம்.

அறம்←பொருள்←இன்பம்

இவ்விரு அமைப்புகளும் முரண்பட்ட போக்குடையன. இவற்றுள், எது முன்னது? எது பின்னது? என்பது ஆராய்தற்குரியது.

## 2.3 முப்பொருள் கோட்பாடு —வளர்ச்சி நிலை

காடுகளிலும் குகைகளிலும் மரப்பொந்துகளிலும் வாழ்ந்த மனிதர்கள் கூடி வாழ முற்பட்டபோது, அவர்களுடைய செயல்களெல்லாம் தற்காப்பாகவே இருந்திருக்கும். வாழ்க்கையின் குறிக்கோள் என்று பார்க்கும் போது,

> எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
> தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும் (தொல். 1169)

என்பது சான்றோர் கண்ட உண்மையாகலான், இன்பமே முதலிடமும் முழுமையிடமும் பெற்றிருக்கும் எனலாம். தன்னைப் பாதுகாத்துக் கொள்வதும் இன்பம் நுகர்வதுமே தொடக்கநிலை போக்கும் நோக்கும் ஆகியிருக்கும்.

மனிதன் ஆற்றங்கரையை அடைந்ததன்பின், நிலையான குடியிருப்புகளை அமைத்துக் கொண்டான்; பயிர்த் தொழிலைப் பெருக்கினான்; நாகரிகம் வளரத் தொடங்கியது. நாகரிகம் வளர்ந்த நிலையில், மனிதன் தனக்கெனப் பொருள்களைச் சேர்க்க முற்பட்டிருக்க வேண்டும்; இன்பத்தைச் செவ்வனே நுகரப் பொருள் தேவை என்ற நிலை அவனுக்கு ஏற்பட்டிருக்கும். இந்நிலையில், இன்பமும் பொருளும் வாழ்க்கையின் குறிக்கோள் ஆகி இருக்கலாம்.

இன்பம் → பொருள்

மனிதனின் நாட்டம் பொருளில் செல்லச் செல்ல வாழ்க்கைப் போராட்டங்கள் பெருகியிருக்கும். அச்சம், அழுக்காறு, அவா, பசி, பிணி, பகைமை ஆகியவை சமுதாயத்தில் தீர்க்க முடியாத போராட்டங்களாகியிருக்க வேண்டும். இப்போராட்டங்களில் இருந்து ஒரு சமுதாயத்தை மீட்க அறக்கோட்பாடுகள் வகுக்கப்பட்டிருக்க வேண்டும். ஆகவே,

இன்பம்→பொருள்→அறம்

என்றாகி, முப்பொருள் கோட்பாடு உருவாகி இருக்கலாம். இதனைக் கோட்பாட்டின் **வளர்ச்சி நிலை** எனலாம்.

> வரலாற்று முறையில் உய்த்துணருங்கால், தொடக்க நிலையில் இன்பமே உறுதிப்பொருள் என்றும்; சொத்துடைமை, ஆட்சியமைப்பு ஆகியவற்றில் கருத்தூன்றிய காலத்தில் பொருளே உறுதிப்பொருள் என்றும்; குழப்பமும் பூசலும் அமைதியின்மையும் பெருகிய காலத்தில் அறமே உறுதிப்பொருள் என்றும் கருதப் பெற்றன என்பதும், வளர்ச்சி நிலையில் இம் மூன்றுமே உறுதிப் பொருள்கள் என்று எண்ணப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதும் புலனாகும்.[2]

என, சோ. ந. கந்தசாமி அவர்கள் குறிப்பிடுவதையும் இங்குக் கருத்தில் கொள்ளலாம்.

இன்பம் பொருள் அறம் என்னும் உறுதிப் பொருள்கள் மூன்றுள், அறமே உயர் குறிக்கோள், அந்த அறவழித் தான மேம்பாடே உயர்மேம்பாடாகும் என்ற உயர்ந்த அற எண்ணம் சான்றோர்களிடையே மலர்ச்சி பெற்ற போது அறம் முதன்மை பெற்றிருக்கும். இன்பம் பொருள் அறம் என்னும் கோட்பாடு அறம் பொருள் இன்பம் என, முறைமாறியிருக்கும். இதனைக் கோட்பாட்டின் **ஆக்க நிலை** வைப்புமுறை எனக் கொள்ளலாம்.




படம் : 9

காலப் போக்கில், அறத்தின் வழியே நின்று அதன் பயனாகப் பொருளையும் இன்பத்தையும் பெற வேண்டும் என்னும் கருத்து மலர்ந்து, பின்னர்,

> இம்மைச் செய்தது மறுமைக்கா மெனும்
> அறவிலை வணிகன் ஆய்அலன் (புறம். 134:1-2)

எனச் சங்கப் புலவர் குறிப்பிடுவதான உயர்நிலையை எய்தியிருக்க வேண்டும். இந்நிலையில் அறம் என்பது ஓர் மீதுயர் குறிக்கோளாக அமைகின்றது; அறம் பொருள் இன்பங்களின் இயக்கியாகவும் அமைகின்றது எனலாம்.




படம் : 10

இவ்வாறு மீதுயர் குறிக்கோளான அறத்தால் இயக்கப் படும்போது பொருளும் இன்பமும் மிகவும் விரிந்த மேலான பொருள் விளக்கங்களைப் பெறுகின்றன. இவ்விளக்கங்களே சமயத் தத்துவ வடிவம் பெறற் குரியன எனலாம். இதன் வளர்ச்சி நிலையில்தான் **வீடு** என்னும் குறிக்கோளும் சேர்ந்து நாற்பொருள் கோட் பாடு மலர்வதைக் காண்கிறோம்.

இவ்வளர்ச்சி நிலைகளைப் பின்வருமாறு ஒருங் கிணைத்துக் குறிப்பிடலாம்:

## ‘அறம் பொருள் இன்பம் — கோட்பாடு’




படம் : 11

## 2.4 இன்பத்தின் முதன்மை

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே, அறமே முதன்மையானது என்னும் கருத்துத் தமிழகத்தில் வேரூன்றிவிட்டது. இதனை,

> அறமுத லாகிய மும்முதற் பொருள் (தொல். 1363:1-2)

என்னும் தொடரே உறுதி செய்கின்றது எனக் கண்டோம். உண்மை இவ்வாறிருக்க, தொல்காப்பியர் தம் நூலில் களவியல் தொடக்கத்தில், 'இன்பமும் பொருளும் அறனும் என்றாங் கன்பொடு புணர்ந்த ஐந்திணை' (தொல். 1038: 1-2) எனச் சுட்டுவது கேள்விக்குரியது ஆகிவிடுகின்றது. தொல்காப்பியரே, இரு முரண்பட்ட போக்குகளைப் பயன் படுத்துகின்றாரோ என்னும் ஐயமும் எழுகின்றது.

இம்முரண்பாட்டை ஆராய்ந்தவர்கள் பலர்; அவர் களுள் நச்சினார்க்கினியர்,

> அறத்தினான் பொருளாக்கி, அப்பொருளான் இன் பம் நுகர்தற் சிறப்பானும் அதனான் இல்லறங் கூற லானும் இன்பம் முற்கூறினார் [3]

என்பார்.

> அறத்தைச் சிறப்பாக நோக்காது இன்பத்தையே நோக்கும் இன்ப நூல்களும் இலக்கண நூல்களும் இம்முப்பொருளையும் இம் முறையிலேயே குறிக் கும் [4]

என்பார் தேவநேயன் அவர்கள்.

> அறம், பொருள், இன்பம் என்று கூறுவதே முறை மையாயினும், அகத்திணை பற்றிச் சிறப்பிக்கும் இடம் ஆதலின், இன்பத்தை முதலில் வைத்து இன்பம், பொருள், அறம் என்று முறைமாற்றி மேலைய நூற்பா குறிக்கும் [5]

என்பார் இரா. சாரங்கபாணி அவர்கள்.

அதாவது, இன்பத்தை முதன்மையாகக் கொண்டு இலக்கியம் படைப்பாரும், இலக்கண நூல்களுள் இன்பப் பகுதி (காமத்துப் பகுதி)யில் வரையறை தருவாரும் இன் பத்தை முதலாக வைத்தே மும்முதற் பொருள்களைக் குறிப்பர் என்பதும், அறத்தை முதன்மையாகக் கருதி

இலக்கியம் படைப்பாரும் அறநூலாரும் அறத்தை முதலாக வைத்தே மும்முதற்பொருள்களைக் குறிப்பர் என்பதும் அறியவரும் செய்திகளாகும்.

மேலும், பொருளை முதன்மையாகக் கொள்ளும் பொருளியல் நூல்கள், முறைவைப்பில் பொருளையே முதலாவதாகக் குறிப்பிடுகின்றன என்பர்.

> கௌடில்யரின் அருத்த சாத்திரத்தில் 'திரிவர்க்கம்' என்னும் தொடர் 'அர்த்த திரிவர்க்கம்', 'சம்சய திரிவர்க்கம்' என, அடைகொடுத்து, சிறப்பிக்கப்பட்டுள்ளதைக் காணுகின்றோம். 'அர்த்த திரிவர்க்கம்' என்பது அருத்தம் (பொருள்), தருமம், காமம் எனும் முப்பொருள்களாகும். வைப்பு முறையில் பொருள் நூலாசிரியரான சாணக்கியர், அருத்தத்திற்கே முதலிடம் கொடுத்துள்ளார்[4]

என்பார் க.த.திருநாவுக்கரசு அவர்கள். இந்த வைப்பு முறை சங்கத் தமிழ் நூல்களில் இடம் பெறவில்லை; என்றாலும் இன்பத்தை முதன்மையாகக் கொள்ளும் அக இலக்கியங்களும் இலக்கணங்களும் இன்பம் பொருள் அறம் என்னும் வைப்பு முறையைக் குறிக்கும் எனச் சான்றோர்கள் கருதும் கருத்திற்கு ஓரளவு இஃது அரண் செய்கின்றது எனலாம்.

## 2.5 மூன்றாவது பால்

திருக்குறளின் மூன்றாவது பால் இன்பத்துப்பால் என்பாரும் உளர்; காமத்துப்பால் என்பாரும் உளர். இன்பமும் காமமும் வெவ்வேறு சொற்கள் என்பதனை,

> இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
> துன்பம் அதனிற் பெரிது (குறள். 1169)

என்னும் குறளாலும் அறிய முடிகின்றது. இன்பம் என்பதற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி அகமகிழ்ச்சி, இனிமை, காமம், கலியாணம், சொல்லினும் பொருளினும் சுவைபடுவதாகிய குணம் என்னும் ஐவகைப் பொருள்களைத் தருகின்றது (த. பே., ப. 368).

அவாவின்மை (குறள். 369), அறம் (குறள். 39), இகல் இன்மை (குறள். 854), இழிவறிந்து உண்ணும் உணவு (குறள். 946), ஈகை (குறள். 228), சிறுமையுள் நீங்கிய

இன்சொல் (குறள். 98), தலைமகனுடன் கூடிவாழும் வாழ்க்கை (குறள். 1166), தாம் தீண்டும் தம் மக்கள் மெய் (குறள். 165), திறனறிந்து தீதின்றி வந்த பொருள் (குறள். 754), புணர்ச்சி (குறள். 1330), வினை முடிப்பு (குறள். 669), வெற்றி (குறள். 869) முதலியவற்றை இன்பம் பயக்கும் காரணிகளாகத் திருக்குறள் குறிப்பிடுகின்றது. ஆகவே, இன்பம் என்பது பல நிலைகளில் பெறக் கூடியது; அகவாழ்விலும் இன்பம் உண்டு; புறவாழ்விலும் இன்பம் உண்டு. பொதுவாக அக மகிழ்ச்சியை இச்சொல் குறிப்பிடுகின்றது எனலாம்.

காமம் என்னும் சொல்லிற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி விருப்பம், உறுதிப்பொருள்களுள் ஒன்றான இன்பம், புணர்ச்சி இன்பம், காம நீர், விரும்பிய பொருள், இலக்கினத்துக்கு ஏழாமிடம் என்னும் பொருள்களைத் தருகிறது (த. பே., ப. 872). திருக்குறளில் காமம் என்னும் சொல் விருப்பம், புணர்ச்சி, இன்பம் என்னும் பொருள்களில் வழங்கப்பட்டுள்ளது.

இன்பம் காமம் ஆகிய இவற்றிற்குரிய பொருள்களை நோக்கின், இன்பம் என்பது பரந்துபட்ட பொருளை உடையது என்பதும் காமம் இன்பத்துள் ஒருவகை என்பதும் அது ஆண் பெண் உறவால் எழும் காதலின்பத்தைக் குறிப்பது என்பதும் புலப்படுகின்றன.

> இன்பம், பல்வகை இன்பத்திற்கும் பொதுவான பெயராய் வரக் காமம் காதலின்பத்திற்கே சிறப்பான பெயராய் வருகிறது [7]

என்பார் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள்.

திருக்குறளில் மூன்றாம் பால் ஆண் பெண் என்னும் இருவரிடத்து நிகழும் காதல் அன்புகளையே பேசுகின்றது. மலரினும் மெல்லியதான காமத்தைச் செவ்வியறிந்து நுகர வேண்டும் என்பதே மூன்றாம் பாலின் வேரான கருத்து எனலாம்.

> வள்ளுவர், தொல்காப்பியர் முதல் வழங்கிவரும் தமிழ் இன்ப அன்பு மரபுகளையே கூறுகிறார் [8]

என்பார் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள்.

> காம இன்பமே — புலனுகர் இன்பமே — திருவள்ளு வரால் காமத்துப்பாலில் விரித்து உரைக்கப்பட்டுள் ளது என்பது தெளிவாகிறது [9]

என்பார் க. த. திருநாவுக்கரசு அவர்கள்.

> கணவன் மனைவியர் இல்லற இன்பம் துய்த் தற்குக் காரணமான நேயம் என்னும் பொருளி லேயே காமம் என்னும் சொல்லை ஆண்டு, இன்பத்துப்பாலைக் காமத்துப்பால் எனக் குறித் தனர் வள்ளுவர் [10]

என்பது ஞா. தேவநேயன் அவர்கள் துணிவு. எனவே, அறிஞர் பெருமக்கள் வாக்குவழி நோக்கின், திருக்குறள் மூன்றாம் பாலை இன்பத்துப்பால் என்பதினும் காமத்துப் பால் என்பதே பொருத்தம் உடையது எனலாம்.

## 2.6 திருக்குறள் வைப்புமுறை

அறம், பொருள், இன்பம் என்பது முப்பொருள் கோட் பாட்டின் ஆக்கநிலை; அறநூல்கள் கொள்ளும் வைப்பு முறை. திருக்குறளில் இம்முறையில், சிறிது நெகிழ்ச்சி — பெயர் மாற்றம் காணப்படுகின்றது.

| | | | |
|---|---|---|---|
| அறநூல் வைப்புமுறை | அறம் | பொருள் | இன்பம் |
| | ‖ | ‖ | ∦ |
| திருக்குறள் வைப்புமுறை | அறம் | பொருள் | காமம் |

அறம் பொருள் இன்பம் என்பனவற்றுள் இன்பம் என்பது பயன்; அஃது அறத்தினால் விளைவது; பொரு ளால் விளைவது; ஆண் பெண் உறவால் விளைவது. திருக்குறள், அறத்தினை மேற்கொள்வதால் விளையும் இன்ப நிலைகளை அறத்துப்பாலில் எடுத்துரைக்கின்றது; பொருள் நிலையில் பெறத்தகு இன்பங்களைப் பொருட் பாலில் எடுத்துரைக்கின்றது. ஆண் பெண் ஆகியோரின் நெறிபிறழா உறவால் ஏற்படும் இன்பம் தனிப்பட்டது; முன்னிரண்டினுள் அடங்காதது. ஆகவே அந்த இன்பத்தை — காம இன்பத்தைத் தனியொரு பாலாக்கி உரைக் கின்றது வள்ளுவம் எனலாம். இவ்வகையில் நோக்கின் காமத்துப்பால் என்பது ஆண் பெண் நெறிபிறழா உறவால்

எழும் இன்பத்தை வெளிப்படுத்துவது; பெரிதும் தமிழ் கூறும் அகப்பொருள் மரபின் சாயலில் முகிழ்த்தது; மாந்தர் தம் பொதுவுணர்ச்சிகளை மட்டும் கருப்பொருளாகக் கொண்டது எனலாம். பொதுவாகச் சொல்வதானால்,

அறம் + அறத்தால் பெறும் இன்பம் — அறத்துப்பால்
பொருள் + பொருளால் பெறும் இன்பம் — பொருட்பால்
ஆண் பெண் உறவால் பெறும் இன்பம் — காமத்துப்பால்

எனக் கொள்ளலாம்.

அறம் பொருள் என்னும் இரண்டிற்கும் தனித்தனிப் பால் வகுத்த வள்ளுவர், இன்பத்துக்கெனத் தனியொரு பால் வகுக்காமல், அறம் பொருள் காமங்களைச் செந்நெறியில் இயக்குவதால் — நுகர்வதால் பெறக்கூடிய பயனாக மறைமுகமாக உரைக்கின்றாரோ எனக் கொள்ளவும் இடமுண்டு.

## குறிப்புகள்

1. 'அகத்திணைக்கண் இன்பமும் புறத்திணைக்கண் ஒழிந்த மூன்று பொருளும் உணர்த்துப.'
—நச்சினார்க்கினியர், **தொல்காப்பியம்-பொருளதிகாரம்-நச்சினார்க்கினியர் உரை, அகத்திணை இயல்**, கழகவெளியீடு, சென்னை, 1969, ப. 1.
2. சோ. ந. கந்தசாமி, **திருக்குறள் கூறும் உறுதிப்பொருள்**, மணிவாசகர் நூலகம், சென்னை, 1977, பக். 8-9.
3. நச்சினார்க்கினியர், மு.நூ., களவியல், ப. 4.
4. தேவநேயன், **திருக்குறள் தமிழ் மரபுரை**, நேசமணி பதிப்பகம், காட்பாடி விரிவு, 1969, ப. 1.
5. இரா. சாரங்கபாணி, **குறள் விருந்து**, தி சௌத் இந்தியன் பிரஸ், காரைக்குடி, 1973, ப. 19.
6. க.த. திருநாவுக்கரசு, **திருக்குறளும் இந்திய அறநூல்களும்**, மணியகம் வெளியீடு, சென்னை, 1978, ப. 27.
7. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், **வள்ளுவர் கண்ட நாடும் காமமும்**, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1957, ப. 161.
8. ஷை, ப. 180.
9. க.த. திருநாவுக்கரசு, மு.நூ., ப. 19.
10. ஞா. தேவநேயன், **தமிழர் திருமணம்**, சேலம், 1956, ப. VII.

# 3

# அதிகாரப் பெயர் மரபு

## 3.1 *அதிகாரம்*

திருக்குறளில், ஒவ்வொரு 10 பாடல்கள் கொண்ட பகுதிக்கும் அதிகாரம் என்னும் பெயர் காணப்படுகிறது; 133 அதிகாரங்களைக் கொண்டது திருக்குறள். அவற்றுள், அறத்துப்பால் 38 அதிகாரங்களைக் கொண்டது; பொருட் பால் 70 அதிகாரங்களைக் கொண்டது; காமத்துப்பால் 25 அதிகாரங்களைக் கொண்டது.

அதிகாரம் என்னும் பெயர் வள்ளுவரால் வழங்கப்பட் டிருக்குமா என்பது ஐயத்திற்கு இடமாகவே உள்ளது. திருவள்ளுமாலைப் பாடல்கள் 53; இவற்றுள், காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடிய பாடலில்(தி.மா.28) மட்டுமே திருக்குறளில் அதிகாரம் என்னும் ஒரு பகுப்பு இருப்பதாகச் சுட்டப்படுகின்றது. மற்றவர்கள் யாருமே அதிகாரம் எனச் சுட்டவில்லை.

> வள்ளுவர் சொன்ன வகை (தி.மா. 20:1)

என்பார் சிறுமேதாவியார். திருக்குறளில் ஒவ்வொரு பாலிலும் வரும் பகுப்புகளை விளக்கியவர்கள்கூட அதிகாரம் எனக் குறியீடு செய்யாமல்,

> பாயிரம் நான்கி லறம்இருபான் பன்மூன்றே
> தூய துறவறமொன் றூழாக — ஆய
> அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார்
> (தி.மா. 25:1-3)

> அரசியல் ஐயைந் தமைச்சியல் ஈரைந்
> துருவல் அரண்இரண்டொன் றொண்கூழ்—இருஇயல்
> திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
> றெண்பொருள் ஏழாம் இவை, (தி. மா. 26)

> ஆண்பால்ஏழ் ஆறிரண்டு பெண்பால் அடுத்தன்பு
> பூண்பால் இருபால்ஓர் ஆறுக ... (தி.மா. 27:1-2)

என்றே கூறியுள்ளனர்.

## 3.2 தொல்காப்பியமும் திருக்குறளும்

தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பாக்களின்படி (தொல். 1422-1428) பிண்டம் (நூல்), படலம் என்னும் பகுப்பை உடையது; படலம், ஓத்து என்னும் பகுப்பை உடையது; ஓத்து, சூத்திரங்களை உள்ளடக்கியது. இப் பகுப்பு வகைகளைத் தொல்காப்பியத்தொடு பொருத்திக் காட்டும் உரையாசிரியர்களின் துணிபு வருமாறு:

பிண்டம் — நூல்
↓ ↓
படலம் — அதிகாரம்
↓ ↓
ஓத்து — இயல்
↓ ↓
சூத்திரம் — நூற்பா

படலம் (அல்லது அதிகாரம்) என்பதற்குத் தொல்காப்பியம்,

> ஒருநெறி இன்றி விரவிய பொருளால்
> பொதுமொழி தொடரின் அது படல மாகும்
>
> (தொல். 1427)

என இலக்கணம் வகுக்கின்றது. இதற்கு இளம்பூரணர்,

> ஓரினமாகிய நெறியின்றிப் பலநெறியான் வருவன பொருளானே பொதுமொழியாற் றொடர்வுபடின் அது படலமெனப் பெயராம்

என உரை எழுதி,

> அது கிளவியாக்க முதலாக எச்சவியல் ஈறாகக் கிடந்த ஒன்பதோத்தினும் வேறுபாடுடையவாயி னும், சொல்லிலக்கணம் உணர்த்தினமையாற் சொல்லதிகாரம் எனப் பெயர் பெறுதல்.
>
> அதிகாரம் எனினும் படலமெனினும் ஒக்கும்[2]

என உரைவிளக்கமும் தந்துள்ளார்.

தொல்காப்பியத்தில் வரும் பகுப்புகளையும் திருக்குறளில் வரும் பகுப்புகளையும் ஒப்பிட்டு நோக்கின் கிடைக்கும் விளக்கப்படம் வருமாறு:




படம் : 12

தொல்காப்பியத்தில் வரும் அதிகாரம் என்னும் பெயரும் திருக்குறளில் வரும் அதிகாரம் என்னும்பெயரும் ஒன்றல்ல. தொல்காப்பியத்தில் வரும் அதிகாரம் என்னும் பெயர், பல இயல்களைத் தன்னுள் கொண்டதாகும். குறளில் வரும் அதிகாரம் என்னும் பெயர், இயலின் ஒரு பிரிவாகும்.

தொல்காப்பியத்தின் பகுப்பிற்கு வழங்கப்படும் அதிகாரம் என்னும் பெயர் ஒரு நெறித்தான கருத்துகளை உள்ளடக்கியது அன்று; பல நெறித்தான கருத்துகளைப் பெற்று ஒரு பொதுச் சொல்லால் தொடர்புபட்டு விளங்குவது. திருக்குறளின் பகுப்பிற்கு வழங்கப்படும் அதிகாரம் என்னும் பெயர் ஒரு நெறித்தான கருத்துகளை உள்ளடக்கியது.

ஒவ்வொரு பத்துக் குறள்களிலும் அவ்வதிகாரத்திற்குரிய பொருள் அதிகரித்து வருவதால் அதிகாரம் எனப் பெயர் ஏற்பட்டிருக்கலாம் என்பர்.[3]

## 3.3 திருக்குறளில் அதிகாரப் பெயர் வைப்பு முறை

3.3.1 திருக்குறளில், குறட்பாக்களில் வரும் சொற்களைக் கொண்டும் தொடர்களைக் கொண்டும் அதிகாரத்

திற்குப் பெயர் வைக்கப்பட்டுள்ளது. இவ்வகையில் 40 அதிகாரப் பெயர்கள் வழங்கப்படுகின்றன.[4]

3.3.2 குறட்பாவில் வரும் ஒரு தொடரின் வினை எச்சம், தொழிற் பெயராகி, அதிகாரப் பெயராக வழங்கப்பட்டுள்ளது.

அவை அறிந்து > அவை அறிதல்
(குறள். 711) (அதி. 72)

இடன் அறிந்து > இடன் அறிதல்
(குறள்கள் 493, 494) (அதி. 50)

காலம் அறிந்து > காலம் அறிதல்
(குறள். 488) (அதி. 49)

நட்பு ஆராய்ந்து > நட்பு ஆராய்தல்
(குறள். 795) (அதி. 80)

3.3.3 குறட்பாத் தொடரில் வரும் ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம் எதிர்மறை வினையாகி அதிகாரப் பெயராக வழங்கப்பட்டுள்ளது.

அவை அஞ்சா > அவை அஞ்சாமை
(குறள். 725) (அதி. 73)

3.3.4 குறட்பாவில் வரும் வினையாலணையும் பெயர்கள், பண்புப்பெயர், தொழிற்பெயர் வடிவங்களில் அதிகாரப் பெயர்களாக வழங்கப்பட்டுள்ளன.

அறிவுடையார் > அறிவுடைமை
(குறள்கள் 427, 430) (அதி. 43)

புலாலை மறுத்தான் > புலால் மறுத்தல்
(குறள் 260) (அதி. 26)

3.3.5 குறட்பாவின்கண் வரும் சில தொடர்களின் எதிர்மறைகள் அதிகாரப் பெயர்வடிவம் பெற்றுள்ளன.

ஆள்வினை இன்மை > ஆள்வினை உடைமை
(குறள். 618) (அதி. 62)

இன்னாத கூறல் > இனியவை கூறல்
(குறள். 100) (அதி. 10)

3.3.6 குறட்பாவில் இடம்பெறும் சில தொடர்களின் பொருள்கள் அதிகாரப் பெயர்வடிவம் பெற்றுள்ளன.

| | | |
|---|---|---|
| படிற்று ஒழுக்கம் (குறள்கள். 271, 275) | > | கூடா ஒழுக்கம் (அதி. 28) |
| பெரியாரைப் பேணித் தமராக் கொளல் (குறள். 443) | > | பெரியாரைத் துணைக் கோடல் (அதி. 45) |

3.3.7 குறட்பாவின்கண் இடம் பெறாத சொல்/தொடர் அதிகாரப் பெயராகவும் வழங்கப்பட்டுள்ளது.

கடவுள் வாழ்த்து (அதி. 1)

## 3.4 அதிகாரப் பெயர் வேறுபாடுகள்

தற்போது, பொதுவாகப் பலராலும் பயன்படுத்தப் படும் திருக்குறள் அதிகாரப் பெயர்களிலிருந்து ஏறத்தாழ 40 அதிகாரப் பெயர்கள் (ஏறத்தாழ 30%) வேறுபடு கின்றன. இவற்றுள் திருக்குறள் பழைய உரையாசிரியர் களின் உரைகளில் காணப்படும் வேறுபாடுகள் 10 ; திருக் குறள் புதிய உரையாசிரியர்களின் உரைகளில் காணப் படும் வேறுபாடுகள் ஏறத்தாழ 30.

திருக்குறள் அதிகாரப் பெயர்களில் காணப்படும் பெயர் வேறுபாட்டுப் போக்குகள் பல. அவை வருமாறு:

### 3.4.1 ± உடைமை

திருக்குறள் உரைகளில் மொத்தம் ஏழு அதிகாரப் பெயர்களில் இவ்வகை வேறுபாடு காணப்படுகிறது; அவற்றுள் 'உடைமை' சேர்வதால் (+) ஏற்படும் வேறுபாடு ஐந்து; 'உடைமை' நீங்குவதால் (—) ஏற்படும் வேறுபாடு இரண்டு.

ஈகை, புகழ், வாய்மை, தவம், துறவு என்னும் ஐந்து அதிகாரப் பெயர்களும் மணக்குடவர் உரையில் முறையே ஈகையுடைமை, புகழுடைமை, வாய்மையுடைமை, தவ முடைமை, துறவுடைமை என வழங்கப்பட்டுள்ளனவாக 1917 ஆம் ஆண்டு வ.உ.சி. அவர்கள் வெளியிட்டுள்ள மணக்குடவர் உரையால் அறிகிறோம். செல்வக் கேசவ ராய முதலியார் அவர்களும் இவ்வேறுபாட்டை எடுத்துக் காட்டுகின்றார்.[5] ஆனால், 1925ஆம் ஆண்டு கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் வெளியிட்டுள்ள மணக்

குடவர் உரையில் இப்பெயர் வேறுபாடுகள் இடம் பெற வில்லை. (இவ்விரு பதிப்புகளிலும் இயலில் வரும் அதி காரங்களும் மாற்றம் பெற்றுள்ளன என்பதும் கருதத்தக்க தாகும்).

'அருளுடைமை' என்னும் அதிகாரப் பெயரை மு. கோவிந்தசாமி அவர்கள் 'அருள்' என வழங்கியுள் ளார்கள்; 'அறிவுடைமை' என்னும் அதிகாரப் பெயரை 'அறிவு' என டாக்டர் P.S. சுப்பிரமணிய சாஸ்திரி அவர் களும், மு. கோவிந்தசாமி அவர்களும் வழங்கியுள்ளார்கள்.

### 3.4.2 ±வேற்றுமை உருபு

'பெரியாரைப் பிழையாமை' என்னும் அதிகாரப் பெயர் 'பெரியார்ப் பிழையாமை' என்றும்; 'புணர்ச்சி மகிழ்தல்' என்னும் அதிகாரப் பெயர் 'புணர்ச்சியின் மகிழ்தல்' என்றும் காலிங்கர் உரையில் காணப்படு கின்றன.

### 3.4.3 ±சிறப்புச் சொல்

சால்பு, சிறப்பு, மாட்சி முதலிய சிறப்புச் சொற் களைச் சேர்த்தல் (+) அல்லது நீக்கல் (—) ஆகிய போக்கு களாலும் அதிகாரப் பெயர்கள் வேறுபட்டுள்ளன. அவை வருமாறு:

| | | |
|---|---|---|
| நீத்தார் பெருமை | > | ஒழுக்கத்து நீத்தார் பெருமை |
| இல்வாழ்க்கை | > | இல்வாழ்க்கைச் சிறப்பு |
| வாழ்க்கைத் துணை நலம் | > | வாழ்க்கைத்துணை |
| அன்புடைமை | > | அன்புடைமையின் சால்பு |
| விருந்தோம்பல் | > | விருந்தோம்பல் மாட்சி |
| இனியவை கூறல் | > | இனியவை கூறற் சிறப்பு |
| நடுவு நிலைமை | > | நடுவு நிலைமையின் சால்பு |
| இறைமாட்சி | > | இறை |
| நன்றியில் செல்வம் | > | செல்வம் |

சால்பு, சிறப்பு, மாட்சி என்னும் சொற்களைச் சேர்த்து அதிகாரப் பெயர்களில் வேறுபாடுகளை உண் டாக்கி இருப்பவர் கா. அப்பாத்துரை அவர்கள். திரு.வி.க.

அவர்கள் 'வாழ்க்கைத் துணைநலம்' என்பதை 'வாழ்க்கைத்துணை' என்றும், டாக்டர் P.S. சுப்பிரமணியசாஸ்திரி அவர்கள் 'இறைமாட்சி', 'நன்றியில் செல்வம்' என்னும் அதிகாரப் பெயர்களை முறையே 'இறை', 'செல்வம்' என்றும் வழங்கியுள்ளார்கள்.

### 3.4.4 — மை

பழைய உரையாசிரியர்களின் உரைகளிலேயே 'கொடுங்கோன்மை', 'குடிமை' என்னும் இரண்டு அதிகாரப் பெயர்களும் 'மை' என்னும் பண்புப்பெயர் விகுதி நீக்கம் பெற்று, முறையே 'கொடுங்கோல்' (பழைய உரையாசிரியர்), 'குடி' (மணக்குடவர்) என வழங்கப் பட்டுள்ளன.

### 3.4.5 அ > ஐ

திருக்குறள் அதிகாரப் பெயர்களில் ஒரே ஒரு பெயரில் மட்டும் அகரம் ஐகாரமாகத் திரிந்த நிலையில் வழங்கப் பட்டுள்ளது.

பழமை > பழைமை

இப்பெயர் வேறுபாடு காலிங்கர் உரையில் மட்டும் காணப்படுகிறது.

### 3.4.6 ±வினைச்சொல்

அதிகாரப் பெயரில் வரும் வினைச்சொல்லை நீக்கல் (—) அல்லது புதியதொரு வினைச்சொல்லைச் சேர்த்தல் (+) என்னும் செயல்களால் அதிகாரப் பெயர் வேறுபாடுகள் நிகழ்ந்துள்ளன. அவை பின்வருமாறு:

**வினைச்சொல் நீக்கம்**

குற்றங் கடிதல் > குற்றம்

கள்ளுண்ணாமை > கள்

**வினைச்சொல் சேர்க்கை**

இகல் > இகல்மேவாமை

### 3.4.7 சொல் மாற்றம்

திருக்குறள் அதிகாரப் பெயர்களில் வரும் சொல்லை/சொற்களை மாற்றும் போக்கிலும் பல அதிகாரப் பெயர்கள் மாற்றம் பெற்றுள்ளன. அவை வருமாறு:

| | | |
|---|---|---|
| கடவுள் வாழ்த்து | > | இறை வாழ்த்து |
| | > | முதற்பகவன் வழுத்து |
| மக்கட் பேறு | > | புதல்வரைப் பெறுதல் |
| செய்ந்நன்றியறிதல் | > | செய்ந்நன்றி நலம் |
| பிறனில் விழையாமை | > | பிறன்மனை நயவாமை |
| தெரிந்து செயல்வகை | > | செய்முன்னர்த் தெரிதல் |
| வினைத் தூய்மை | > | வினை நலம் |

### 3.4.8 பொருள் மாறுபாடு

குறளில் வரும் அதிகாரப் பெயர்களின் வேறுபாடு களுள் ஐந்து வேறுபாடுகள் பொருள் வேறுபடவும் அமைந்துள்ளன.

| | | |
|---|---|---|
| பொருள் செயல்வகை | — | கூழ் |
| மருந்து | — | நோய் |
| படைமாட்சி | — | இகல் மேவுகை |
| பெரியாரைப் பிழையாமை | — | பெரியாரைப் பேணா தொழுகுதல் |
| நல்குரவு | — | நல்குரவின்மை |

இவ்வேறுபாடுகளுக்கு அடிப்படையான காரணங்களாக,

1. உரையாசிரியர்களின் உள்ளப் பாங்கு
2. குறளில் வரும் சொல்/தொடர்களைக் கொண்டு அதி காரப் பெயரிட வேண்டும் என்னும் ஆர்வம்

ஆகியவற்றைக் கூறலாம்.

## 3.5 பதிற்றுப்பத்தும் திருக்குறளும்

பதிற்றுப்பத்தில் முதல் பத்தும் கடைசிப் பத்தும் தவிர்த்து மற்றைய 80 பாடல்கள் கிடைத்துள்ளன. இதில் ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு பெயர் (தலைப்பு) கொடுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலிலும் வரும் சிறந்த ஒரு தொடரைக் கொண்டு ஒவ்வொரு பாடலுக்கும் பெயர் வழங்கப்பட்டுள்ளது; அவ்வாறு எட்டுப் புலவர்கள் பாடிய எண்பது பாடல்களுக்கு 80 பெயர்கள் அமைந் துள்ளன; எந்த ஒரு பெயரும் இருமுறை இடம் பெற வில்லை என்பது குறிப்பிடத்தக்கது. சில பாடல்களின்

பெயர்களில் அடைகள் வேறுபட்டுள்ளதாலேயே வெவ் வேறு பெயர்கள் அமைந்துள்ளன. சான்றுகள்:

உருத்தெரு வெள்ளம்
நிரைய வெள்ளம்
வரம்பில் வெள்ளம்

காடுறு கடுநெறி
கானுணங்கு கடுநெறி

கூந்தல் விறலியர்
நன்னுதல் விறலியர்

ஏவிளங்கு தடக்கை
வலிகெழு தடக்கை
வெந்திறல் தடக்கை

நிறம்விடு குருதி
புண்ணுமிழ் குருதி

எண்பது பெயர்களில் 2 அடைகள் மட்டும் இருமுறை வந்துள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். அவை வருமாறு:

நாடுகாண் அவிர்சுடர்
நாடுகாண் நெடுவரை

வலம்படு வியன்பணை
வலம்படு வென்றி

எண்பது பாடல்களின் பெயர்களும் அடையடுத்த பெயர்களாகவே காணப்படுகின்றன. ஒவ்வொரு பாடலிலும் வரும் சிறந்த — பாடலுக்குப் பொருத்தமான அடைத்தொடரையே தேர்ந்து, பாடலின் பெயராக வைத்துள்ளனர். ஒவ்வொரு பாடற்பெயரும் கவிநயம் நிறைந்து காணப்படுகின்றது.

பதிற்றுப்பத்தையும் திருக்குறளையும் ஒப்பிட்டு நோக்கின், பாடலில் வரும் தொடரைக் கொண்டு பெயரிடு தல் என்ற அளவில் ஒப்புமை காணப்படுகிறது. குறளில் ஏறத்தாழ 40 அதிகாரத் தலைப்புகள் அவ்வவ்வதிகாரத் தில் வரும் சொற்களையும் தொடர்களையும் கொண்டே பெயர் பெற்றுள்ளன எனக்கண்டோம். எனினும், ஒப்புமை யினும் வேறுபாடுகளே மிகுதி.

பதிற்றுப்பத்தில் ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு பெயர் வைக்கப்பட்டுள்ளது; குறளில் ஒவ்வொரு பத்துப் பாடல்களுக்கும் ஒவ்வொரு பெயர் வைக்கப்பட்டுள்ளது.

பதிற்றுப்பத்தில் கிடைத்துள்ள எண்பது பாடல்களிலுமே அவ்வப் பாடலில் வரும் (சிறந்த அடைத்) தொடரைக் கொண்டு பெயரிடும் முறை பின்பற்றப் பட்டுள்ளது. குறளில் ஏறத்தாழ 30 விழுக்காட்டளவிற்கே இம்முறை [ஒவ்வோர் அதிகாரத்திற்கும் அவ்வதிகாரத்திலுள்ள சொற்களை / தொடர்களை அடிப்படையாகக் கொண்டு பெயரிடும் முறை] காணப்படுகிறது. பதிற்றுப்பத்தில் வரும் பெயர்கள் எல்லாம் கவிநயம் நிறைந்த தொடர்கள்; குறளில் வரும் அதிகாரத் தலைப்புகள் எல்லாம் கருத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டவை; கவிநயம் என்பது இங்கு முதன்மை அன்று.

### 3.6 ஐங்குறுநூறும் திருக்குறளும்

ஒவ்வொரு திணைக்கும் நூறு நூறு பாடல்கள்; ஒவ்வொரு நூற்றிலும் பத்துப்பத்து பிரிவுகள்; ஒவ்வொரு பிரிவுக்கும் பத்துப்பத்துப் பாடல்கள்; ஒவ்வொரு பத்துப் பாடலுக்கும் ஒவ்வொரு தலைப்பு. இதுவே ஐங்குறுநூற்றின் பொது அமைப்பு.

ஒவ்வொரு தலைப்பும் பின்வரும் ஏதேனும் ஓர் அடிப்படையில் அமைந்துள்ளது :

1. முதற்பொருளின் அடிப்படையில் பெயர் அமைதல்.

சான்று :

நெய்தற் பத்து
இளவேனிற் பத்து

2. கருப்பொருளின் அடிப்படையில் பெயர் அமைதல்.

சான்று :

மக்கள் — குன்றக் குரவன் பத்து
விலங்கு — எருமைப் பத்து
ஊர்வன — களவன் பத்து
பறவை — கிள்ளைப் பத்து
[illegible] — ஞாழற் பத்து

3. கூற்று அடிப்படையில் பெயர் அமைதல்.

சான்று :

கிழத்தி கூற்றுப் பத்து

4. கூற்றினைக் கேட்போர் அடிப்படையில் பெயர் அமைதல்.

சான்று :

கிழவற் குரைத்த பத்து

5. அகத்துறைகளின் அடிப்படையில் பெயர் அமைதல்.

சான்று :

செலவழுங்குவித்த பத்து

6. விளிப்புத் தொடர்களின் அடிப்படையில் பெயர் அமைதல்.

சான்று :

அன்னாய் வாழிப் பத்து

மொத்தம் 50 பத்துகள்; 50 தலைப்புகள். ஓர் அதிகாரப் பெயர் (தோழிக்குரைத்த பத்து 31—40, 111—120) மட்டும் இருமுறை வந்துள்ளது. ஆக, 49 வெவ்வேறு பெயர்த் தலைப்புகள் இடம் பெற்று உள்ளன.

ஐங்குறுநூற்றையும் திருக்குறளையும் ஒப்பிட்டு நோக்கின் காணும் ஒப்புமைகள் வருமாறு :

1. பத்துப் பத்துப் பாடல்களுக்கு ஒரு பெயர்த் தலைப்பு கொடுத்தல்.

2. பத்துப் பாடலில் வரும் சொல் / தொடர் பெயர்த் தலைப்பாக அமைதல். இவ்வொற்றுமை ஓரள வானதே.

## 3.7 ஆய்வு முடிவுகள்

1. திருவள்ளுவமாலை ஆசிரியர்களுள் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் மட்டும் 'அதிகாரம்' என்னும் பகுப்புக் குறளில் உண்டு எனக் குறிக்கின்றார்; திருக்குறள் அதிகாரப் பகுப்பை உரைக்கும் பிற

திருவள்ளுவமாலை ஆசிரியர்கள்கூட, திருக்குறளில் 'அதிகாரம்' என்னும் பகுப்புப் பெயர் இருந்ததாகக் குறிக்கவில்லை. ஆகவே, 'அதிகாரம்' என்னும் பகுப்புப் பெயர் வள்ளுவர் தந்ததா என்பது ஐயப்பாடாக உள்ளது.

2. தொல்காப்பியத்தில் வழங்கும் 'அதிகாரம்' என்னும் பகுப்புப் பெயரும், குறளில் வழங்கும் 'அதிகாரம்' என்னும் பகுப்புப் பெயரும் வேறுபட்டவை. தொல்காப்பியத்தில் வழங்கும் அதிகாரம் என்னும் பகுப்புப் பெயர் பல இயல்களைத் தன்னுள் கொண்டதாகும். குறளில் வழங்கும் அதிகாரம் என்னும் பகுப்புப் பெயர் இயலின் ஒரு பகுதியாகும்.

3. திருக்குறளில் வரும் அதிகாரப் பெயர்கள் பின் வரும் பிரிவுகளுள் அடங்கும். (1) குறட்பாவில் வரும் சொற்கள் / தொடர்களால் அதிகாரப் பெயர் பெற்றவை; (2) குறட்பாவில் வரும் சொற்கள் / தொடர்கள் திரிந்து அதிகாரப் பெயர் பெற்றவை; (3) குறட்பாவில் வரும் சொற்கள்/தொடர்கள் அல்லாத சொற்கள்/தொடர்களால் அதிகாரப் பெயர் பெற்றவை.

4. திருக்குறளில் வரும் அதிகாரப் பெயர்களுள் ஏறத்தாழ 40 பெயர்கள் திரிந்தும் வேறுபட்டும் வழங்கு கின்றன. அவற்றுள், பழைய உரைகளிலேயே காண்பன 10; புதிய உரைகளில் காண்பன ஏறத்தாழ முப்பது.

5. பதிற்றுப்பத்தும் ஐங்குறுநூறும் திருக்குறளுக்கு முன்னர்த் தோன்றியவை எனக் கொண்டால், திருக் குறளில் வரும் அதிகாரப் பெயர் வைப்பு முறைக்கு ஓரளவு அவை எடுத்துக் காட்டுகளாக அமைந்துள்ளன எனலாம்.

## குறிப்புகள்

1. ' ஐயாறும் நூறும் அதிகாரம் மூன்றுமா '

(தி. மா. 28 : 1)

2. ' இளம்பூரணர், தொல்காப்பியம் - பொருளதிகாரம் - இளம்பூரணம் கழக வெளியீடு, சென்னை, 1969, ப. 518.

3. 'அதன் உட்பிரிவாகிய அதிகாரம் என்பது அதிகரித்தலை யுடைய பகுதி எனப் பொருள்படும்.

— ச. தண்டபாணி தேசிகர், *திருக்குறள் அழகும் அமைப்பும்*, முத்தையா நிலைய வெளியீடு, சென்னை, 1969, ப. 53.

4. காண்க : பின்னிணைப்பு 3/1.

5. செல்வக் கேசவராய முதலியார், *திருவள்ளுவர்*, கழக வெளியீடு, சென்னை, 1934, ப. 34.

## இணைப்பு 3/1

### குறளில் வரும் சொல்/தொடர் — அதிகாரப்பெயர்

| வரிசை எண் | அதிகார எண் | அதிகாரப் பெயர் | அதிகாரப் பெயர் இடம் பெறும் குறள்/குறள்கள் |
|---|---|---|---|
| 1 | 64 | அமைச்சு | 631-634 |
| 2 | 75 | அரண் | 741-750 |
| 3 | 86 | இகல் | 851-860 |
| 4 | 5 | இல்வாழ்க்கை | 45-49 |
| 5 | 32 | இன்னா செய்யாமை | 311, 312 |
| 6 | 23 | ஈகை | 221 |
| 7 | 89 | உட்பகை | 883-885, 887-889 |
| 8 | 104 | உழவு | 1031 |
| 9 | 38 | ஊழ் | 371, 372, 380 |
| 10 | 14 | ஒழுக்கம் உடைமை | 133 |
| 11 | 58 | கண்ணோட்டம் | 571-575, 577 |
| 12 | 40 | கல்வி | 398, 400 |
| 13 | 29 | கள்ளாமை | 281 |
| 14 | 42 | கேள்வி | 418 |
| 15 | 33 | கொல்லாமை | 321, 323-326 |
| 16 | 99 | சான்றாண்மை | 981, 989, 990 |
| 17 | 94 | சூது | 931, 934, 936, 938, 940 |
| 18 | 27 | தவம் | 261-266 |
| 19 | 69 | தூது | 685, 686, 690 |
| 20 | 79 | நட்பு | 781, 782, 786-790 |
| 21 | 105 | நல்குரவு | 1043, 1045, 1047 |
| 22 | 74 | நாடு | 731-740 |
| 23 | 102 | நாணுடைமை | 1012, 1014 |
| 24 | 3 | நீத்தார் பெருமை | 21 |
| 25 | 100 | பண்புடைமை | 991, 992 |
| 26 | 20 | பயனில சொல்லாமை | 197 |

| வரிசை எண் | அதிகார எண் | அதிகாரப் பெயர் | அதிகாரப் பெயர் இடம் பெறும் குறள்/ குறள்கள் |
|---|---|---|---|
| 27 | 81 | பழைமை | 801 |
| 28 | 24 | புகழ் | 232-234, 237 |
| 29 | 131 | புலவி | 1302, 1306, 1309 |
| 30 | 98 | பெருமை | 974, 975, 978-980 |
| 31 | 84 | பேதைமை | 831, 832 |
| 32 | 16 | பொறையுடைமை | 154 |
| 33 | 7 | மக்கட்பேறு | 61 |
| 34 | 95 | மருந்து | 942, 950 |
| 35 | 97 | மானம் | 969, 970 |
| 36 | 30 | வாய்மை | 291, 292, 295, 298, 300 |
| 37 | 9 | விருந்தோம்பல் | 89 |
| 38 | 67 | வினைத்திட்பம் | 661, 665, 670 |
| 39 | 18 | வெஃகாமை | 178 |
| 40 | 31 | வெகுளாமை | 308 |

## குறளில் வரும் சொல்/தொடர் திரிந்து அதிகாரப் பெயர் ஆதல்

| திரிபு வகை | அதிகார எண் | அதிகாரப் பெயர் | குறளில் இடம்பெறும் தொடர் | குறள் எண்(கள்) |
|---|---|---|---|---|
| தொழிற்பெயர் ← எச்சம் | 72 | அவை அறிதல் | அவை அறிந்து | 711 |
| | 50 | இடன் அறிதல் | இடன் அறிந்து | 493, 494 |
| | 49 | காலம் அறிதல் | காலம் அறிந்து | 488 |
| | 80 | நட்பு ஆராய்தல் | நட்பு ஆராய்ந்து | 795 |
| எ. வினை ← ஈறு கெட்ட | 73 | அவை அஞ்சாமை | அவை அஞ்சா (மாற்றம்) | 725 |
| எதிர்மறைப் | 93 | கள்ளுண்ணாமை | கள்ளுண்ணாப் (போழ்தில்) | 930 |
| பெயர் எச்சம் | 54 | பொச்சாவாமை | பொச்சாவா(க் கருவி) | 537 |
| | 61 | மடி இன்மை | மடியிலா (மன்னவன்) | 610 |
| பண்புப் பெயர், தொழிற் பெயர் ← வினையால் அணையும் பெயர் | 43 | அறிவுடைமை | அறிவுடையார் | 427, 430 |
| | 8 | அன்புடைமை | அன்புடையார் | 72 |
| | 60 | ஊக்கம் உடைமை | ஊக்கம் உடையான் | 594 |
| | 108 | கயமை | கயவர் | 1071, 1073, 1076, 1077, 1080 |

| திரிபு வகை | அதிகார எண் | அதிகாரப் பெயர் | குறளில் இடம்பெறும் தொடர் | குறள் எண்(கள்) |
|---|---|---|---|---|
| | 41 | கல்லாமை | கல்லாதான், கல்லாதவர் கல்லார் | 402, 403, 404, 406, 408, 409 |
| | 71 | குறிப்பறிதல் | குறிப்பறிவான் | 701 |
| | 35 | துறவு | துறந்தார் | 348 |
| | 26 | புலால் மறுத்தல் | புலாலை மறுத்தான் | 260 |
| | 19 | புறங்கூறாமை | புறங்கூறான் | 181 |
| | 61 | மடி இன்மை | மடியுடையார் | 606 |
| எதிர்மறைகள் | 62 | ஆள்வினை உடைமை | ஆள்வினை இன்மை | 618 |
| | 10 | இனியவை கூறல் | இன்னாத கூறல் | 100 |
| | 56 | கொடுங்கோன்மை | செங்கோன்மை | 556 |
| தொடரில் சொல் மாற்றம் | 28 | கூடா ஒழுக்கம் | படிற்று ஒழுக்கம் | 271, 275 |
| | 51 | தெரிந்து தெளிதல் | தெரிந்து தேறப்படும் | 501 |
| | 66 | வினைத் தூய்மை | வினை நலம் | 651 |
| சொல்/தொடர் பொருள் | 17 | அழுக்காறாமை | அழுக்காறு இலாத இயல்பு | 161 |
| | | | அழுக்காற்றின் அன்மை | 162 |
| | 106 | இரவு | இரப்பு | 1053 |

| | | | | |
|---|---|---|---|---|
| | 59 | ஒற்றாடல் | ஒற்றொற்றுணராமை ஆள்க | 589 |
| | 53 | சுற்றம் தழால் | சுற்றத்தால் சுற்றப்பட ஒழுகல் | 524 |
| | 65 | சொல்வன்மை | சொலல் வன்மை | 647 |
| | 15 | பிறனில் விழையாமை | பிறன்வரையாள் பெண்மை நயவாமை | 150 |
| | 45 | பெரியாரைத் துணைக் கோடல் | பெரியாரைப் பேணித் தமராக் கொளல் | 443 |
| | 92 | வரைவின் மகளிர் | வரைவிலா மாணிழையார் | 919 |
| | 48 | வலியறிதல் | வலி(யும்) தூக்கிச் செயல் | 471 |
| | 68 | வினை செயல் வகை | செய்வினை செய்வான் செயல் முறை | 677 |
| வினையாலணையும் | 25 | அருளுடைமை | அருள் ஆள்வார் | 244 |
| பெயர்+சொல்/தொடர் | | | அருள்சேர்ந்த நெஞ்சினார் | 243 |
| பொருள் | 22 | ஒப்புரவறிதல் | ஒத்ததறிவான் | 214 |
| | 90 | பெரியாரைப் பிழையாமை | பெரியாரைப் பிழைத்தொழுகு வார் | 896 |
| | 70 | மன்னரைச் சேர்ந்தொழுகல் | இகல்வேந்தர் சேர்ந்தொழுகு வார் | 691 |

**பின்னிணைப்பு :** 3/4

## அதிகாரப் பெயர் மாற்றங்கள்

| வரிசை எண் | அதிகாரப் பெயர் | அதிகாரப் பெயர் மாற்றம் | மாற்றம் செய்யும் உரையாசிரியர் |
|---|---|---|---|
| 1 | கடவுள் வாழ்த்து | இறை வாழ்த்து | கா. அப்பாத்துரை |
| | | முதற்பகவன் வழுத்து | ஞா. தேவநேயன் |
| 2 | நீத்தார் பெருமை | ஒழுக்கத்து நீத்தார் பெருமை | கா. அப்பாத்துரை |
| 3 | இல்வாழ்க்கை | இல்வாழ்க்கைச் சிறப்பு | ,, |
| 4 | வாழ்க்கைத் துணை நலம் | வாழ்க்கைத் துணை | திரு. வி. கலியாண சுந்தரம் |
| 5 | மக்கட்பேறு | புதல்வரைப் பெறுதல் | காலிங்கர்<br>பரிதியார்<br>பரிப்பெருமாள்<br>பரிமேலழகர்<br>பழைய உரையாசிரியர் |
| 6 | அன்புடைமை | அன்புடைமையின் சால்பு | கா. அப்பாத்துரை |
| 7 | விருந்தோம்பல் | விருந்தோம்பல் மாட்சி | ,, |
| 8 | இனியவை கூறல் | இனியவை கூறற் சிறப்பு | ,, |
| | | இன்சொல் | திரு. வி. கலியாண சுந்தரம் |
| 9 | செய்ந்நன்றியறிதல் | நன்றி நலம் | கா. அப்பாத்துரை |
| 10 | நடுவு நிலைமை | நடுவு நிலைமையின் சால்பு | ,, |
| 11 | பிறனில் விழையாமை | பிறன்மனை நயவாமை | ,, |
| 12 | ஈகை | ஈகையுடைமை | மணக்குடவர் |
| 13 | புகழ் | புகழுடைமை | ,, |

| வரிசை எண் | அதிகாரப் பெயர் | அதிகாரப் பெயர் மாற்றம் | மாற்றம் செய்யும் உரையாசிரியர் |
|---|---|---|---|
| 14 | அருளுடைமை | அருள் | மு. கோவிந்தசாமி |
| 15 | தவம் | தவமுடைமை | மணக்குடவர் |
| 16 | வாய்மை | வாய்மையுடைமை | ,, |
| 17 | துறவு | துறவுடைமை | ,, |
| 18 | இறைமாட்சி | இறை | டாக்டர் P. S. சுப்பிரமணிய சாஸ்திரி |
| 19 | அறிவுடைமை | அறிவு | ,, மு. கோவிந்தசாமி |
| 20 | குற்றங்கடிதல் | குற்றம் | டாக்டர் P. S. சுப்பிரமணிய சாஸ்திரி |
| 21 | தெரிந்து செயல் வகை | செய்முன்னர்த் தெரிதல் | ,, |
| 22 | கொடுங்கோண்மை | கொடுங்கோல் | பழைய உரையாசிரியர் |
| 23 | வினைத் தூய்மை | வினை நலம் | டாக்டர் P. S. சுப்பிரமணிய சாஸ்திரி |
| 24 | பொருள் செயல் வகை | கூழ் | ,, |
| 25 | பழைமை | பழமை | காலிங்கர் |
| 26 | இகல் | இகல் மேவாமை | டாக்டர் P. S. சுப்பிரமணிய சாஸ்திரி |
| 27 | பகை மாட்சி | இகல் மேவுகை | ,, |
| 28 | பெரியாரைப் பிழையாமை | பெரியார்ப் பிழையாமை | காலிங்கர் |
| | | பெரியாரைப் பேணா தொழுகுதல் | டாக்டர் P. S. சுப்பிரமணிய சாஸ்திரி |
| 29 | கள்ளுண்ணாமை | கள் | ,, |
| 30 | மருந்து | நோய் | ,, |
| 31 | குடிமை | குடி | மணக்குடவர் |
| 32 | நன்றியில் செல்வம் | செல்வம் | டாக்டர் P. S. சுப்பிரமணிய சாஸ்திரி |
| 33 | நல்குரவு | நல்குரவின்மை | ,, |

| வரிசை எண் | அதிகாரப் பெயர் | அதிகாரப் பெயர் மாற்றம் | மாற்றம் செய்யும் உரையாசிரியர் |
|---|---|---|---|
| 34 | குறிப்பறிதல் | குறிப்புணர்தல் | காலிங்கர் |
| 35 | புணர்ச்சி மகிழ்தல் | புணர்ச்சியின் மகிழ்தல் | ,, |
| 36 | அலரறிவுறுத்தல் | அலரறிவுரைத்தல் | டாக்டர் P. S. சுப்பிர மணிய சாஸ்திரி |
| 37 | கண்விதுப் பழிதல் | கண்விதுப் பழித்தல் | காலிங்கர் |
| 38 | பசப்புறு பருவரல் | பசப்புறுதல் | மணக்குடவர் |
| 39 | கனவு நிலை யுரைத்தல் | கனவு நலிபுரைத்தல் | பழைய உரையா சிரியர் |
| 40 | அவர்வயின் விதும்பல் | அவர்வயின் விரும்பல் | காலிங்கர் |

**பின்னிணைப்பு : 3/5**

## பதிற்றுப்பத்தில் பாடல் பெயர்கள்

| வரிசை எண் | பாடலின் பெயர் (அகர வரிசையில்) | பாடல் எண் |
|---|---|---|
| 1 | அட்டுமலர் மார்பன் | 20 |
| 2 | அடுநெய்யாவுதி | 21 |
| 3 | அருவியாம்பல் | 63 |
| 4 | உருத்துவரு மலிர்நிறை | 28 |
| 5 | உருத்தெழு வெள்ளம் | 72 |
| 6 | உரைசால் வேள்வி | 64 |
| 7 | ஊன்றுவை அடிசில் | 45 |
| 8 | ஏம வாழ்க்கை | 68 |
| 9 | ஏவல் வியன்பணை | 39 |
| 10 | ஏவிளங்கு தடக்கை | 58 |
| 11 | ஏறாவேணி | 43 |
| 12 | ஒண்பொறிக் கழற்கால் | 34 |
| 13 | கமழ் குரல் துழாய் | 31 |
| 14 | கயிறுகுறு முகவை | 22 |
| 15 | கரைவாய்ப் பருதி | 46 |
| 16 | கல்கால் கவணை | 88 |
| 17 | கழையமல் கழனி | 32 |
| 18 | காடுறு கடுநெறி | 26 |
| 19 | கானுணங்கு கடுநெறி | 25 |
| 20 | குண்டுகண்ணகழி | 53 |
| 21 | குறுந்தாண் ஞாயில் | 71 |
| 22 | கூந்தல் விறலியர் | 18 |
| 23 | சான்றோர் மெய்ம்மறை | 14 |
| 24 | சில்வளை விறலி | 57 |
| 25 | சிறுசெங் குவளை | 52 |
| 26 | சீர்சால் வெள்ளி | 24 |
| 27 | சுடர்வீ வேங்கை | 41 |
| 28 | செங்கை மறவர் | 49 |
| 29 | தசும்பு துளங்கிருக்கை | 42 |
| 30 | ததைந்த காஞ்சி | 23 |
| 31 | தீஞ்சேற்றி யாணர் | 75 |

| வரிசை எண் | பாடலின் பெயர் (அகர வரிசையில்) | பாடல் எண் |
|---|---|---|
| 32 | துஞ்சும் பந்தர் | 55 |
| 33 | துயிலின் பாயல் | 16 |
| 34 | துவராக் கூந்தல் | 89 |
| 35 | தொடர்ந்த குவளை | 27 |
| 36 | தொழினவில் யானை | 84 |
| 37 | நலம்பெறு திருமணி | 74 |
| 38 | நன்னுதல் விறலியர் | 47 |
| 39 | நாடுகாண் அவிர்சுடர் | 40 |
| 40 | நாடுகாணெடுவரை | 85 |
| 41 | நாண் மகிழிருக்கை | 65 |
| 42 | நிரைய வெள்ளம் | 15 |
| 43 | நில்லாத் தானை | 54 |
| 44 | நிழல் விடு கட்டி | 81 |
| 45 | நிறந்திகழ் பாசிழை | 73 |
| 46 | நிறம்படு குருதி | 79 |
| 47 | நோய்தபு நோன்றொடை | 44 |
| 48 | பரிசிலர் வெறுக்கை | 38 |
| 49 | பறைக்குரலருவி | 70 |
| 50 | ப.:றோற்றொழுதி | 83 |
| 51 | பிறழநோக்கியவர் | 78 |
| 52 | புகன்ற வாயம் | 30 |
| 53 | புண்ணுடை யெறுத்தோள் | 80 |
| 54 | புண்ணுமிழ் குருதி | 11 |
| 55 | புதழ்சூழ் பறவை | 66 |
| 56 | புலாஅம் பாசறை | 61 |
| 57 | பூத்த நெய்தல் | 13 |
| 58 | பேரெழில் வாழ்க்கை | 48 |
| 59 | மண்கெழு ஞாலம் | 69 |
| 60 | மரம்படு தீங்கனி | 60 |
| 61 | மறம் வீங்கு பல்புகழ் | 12 |
| 62 | மாகூர் திங்கள் | 59 |
| 63 | மாசிதறிருக்கை | 76 |
| 64 | மெய்யாடு பறந்தலை | 35 |
| 65 | வடுவடு நுண்ணயிர் | 51 |

| வரிசை எண் | பாடலின் பெயர் (அகர வரிசையில்) | பாடல் எண் |
|---|---|---|
| 66 | வரம்பில் வெள்ளம் | 33 |
| 67 | வரைபோலிஞ்சி | 62 |
| 68 | வலம்படு வியன்பணை | 17 |
| 69 | வலம்படு வென்றி | 37 |
| 70 | வலிகெழு தடக்கை | 90 |
| 71 | வளனறு பைதிரம் | 19 |
| 72 | வாண்மயங்கு கடுந்தார் | 36 |
| 73 | வினைநவில் யானை | 82 |
| 74 | வெண்கை மகளிர் | 29 |
| 75 | வெண்டலைச் செம்புனல் | 87 |
| 76 | வெண்போழ்க் கண்ணி | 67 |
| 77 | வெந்திறல் தடக்கை | 86 |
| 78 | வெருவரு புனற்றார் | 50 |
| 79 | வென்றாடு துணங்கை | 77 |
| 80 | வேந்து மெய்ம் மறந்த வாழ்ச்சி | 56 |

**பின்னிணைப்பு : 3/5**

## ஐங்குறு நூற்றில் அதிகாரப் பெயர்முறை

| வரிசை எண் | பெயர் அடிப்படைப் பகுப்பு | தலைப்பின் பெயர்கள் | பாடல் எண்கள் |
|---|---|---|---|
| 1 | முதற்பொருள் | | |
| | 1.1 நிலம் | தொண்டிப் பத்து | 171-180 |
| | | நெய்தற் பத்து | 181-190 |
| | 1.2 பொழுது | இளவேனிற் பத்து | 341-350 |
| 2 | கருப்பொருள் | | |
| | 2.1 மக்கள் | குன்றக்குறவன் பத்து | 251-260 |
| | 2.2 விலங்கு | எருமைப் பத்து | 91-100 |
| | | குரக்குப் பத்து | 271-280 |
| | | கேழற் பத்து | 261-270 |
| | 2.3 ஊர்வன | களவன் பத்து | 21-30 |
| | | வளைப் பத்து | 191-200 |
| | 2.4 பறவை | கிள்ளைப் பத்து | 281-290 |
| | | சிறுவெண் காக்கைப் பத்து | 161-170 |
| | | மஞ்ஞைப் பத்து | 291-300 |
| | | வெள்ளாங் குறுகுப் பத்து | 151-160 |
| | 2.5 பூ | ஞாழற் பத்து | 141-150 |
| | | வேழப் பத்து | 11-20 |
| 3 | கூற்றாளர் | கிழத்தி கூற்றுப் பத்து | 61-70 |
| | | செவிலி கூற்றுப் பத்து | 401-410 |
| | | தோழி கூற்றுப் பத்து | 51-60 |
| 4 | கேட்போர் | கிழவற்குரைத்த பத்து | 121–130 |
| | | தாய்க்குரைத்த பத்து | 101-110 |
| | | தோழிக்குரைத்த பத்து | 31-40 |
| | | பாணர்க்குரைத்த பத்து | 131-140 |
| 5 | துறைகள் | உடன் போக்கிற்கண் இடைச் சுரத்துரைத்த பத்து | 381-390 |

| வரிசை எண் | பெயர் அடிப்படைப் பகுப்பு | தலைப்பின் பெயர்கள் | பாடல் எண்கள் |
|---|---|---|---|
| | | கிழவன் பருவம் பாராட்டுப் பத்து | 421-430 |
| | | செலவழுங்குவித்த பத்து | 301-310 |
| | | செலவுப் பத்து | 311-320 |
| | | தலைவி இரங்கு பத்து | 331-340 |
| | | தேர்வியங் கொண்ட பத்து | 481-490 |
| | | தோழி வற்புறுத்த பத்து | 461-470 |
| | | பருவங்கண்டு கிழத்தியுரைத்த பத்து | 451-460 |
| | | பாசறைப் பத்து | 441-450 |
| | | புலவிப் பத்து | 41-50 |
| | | புலவி விராய பத்து | 81-90 |
| | | புறவணிப் பத்து | 431-440 |
| | | புனலாட்டுப் பத்து | 71-80 |
| | | மகட்போக்கியவழி தாய் இரங்கு பத்து | 371-380 |
| | | மறுதரவுப் பத்து | 391-400 |
| | | முன்னிலைப் பத்து | 361-370 |
| | | வரவுச் சிறப்புரைத்த பத்து | 491-500 |
| | | வரவுரைத்த பத்து | 351-360 |
| | | விரவுப் பத்து | 421-430 |
| | | வெறிப் பத்து | 241-250 |
| | | வேட்கைப் பத்து | 1-10 |
| 6 | விளிப்புத் தொடர் | அம்ம வாழிப் பத்து | 221-230 |
| | | அன்னாய்ப் பத்து | 211-220 |
| | | அன்னாய் வாழிப் பத்து | 201-210 |
| | | தெய்யோப் பத்து | 231-240 |

# 4

# எண்ணிக்கைச் சமநோக்கு மரபு

## 4.0 முன்னுரை

சங்கத் தமிழ் நூல்கள் அறிவுக் களஞ்சியங்கள்; உணர்ச்சியின் வார்ப்படங்கள்; ஒழுக்க நெறியூட்டும் சொல்வார்ப்பு ஓவியங்கள். ஒழுக்கமுறை—ஒழுகுமுறை உணர்த்தும் இந்நூல்கள் பல ஒழுங்குமுறை நோக்கு களைப் பெற்று இலங்குகின்றன. அவற்றுள் ஒன்றுதான் எண்ணிக்கைச் சமநோக்கு.

சங்கத் தமிழ் நூல்களில் காணப்படும் எண்ணிக்கைச் சமநோக்குகள் எவை எவை? அவை எவ்வெவ்வாறு இடம் பெற்றுள்ளன? பல்வேறு எண்ணிக்கைச் சம நோக்குகளுள் பத்துப் பத்தாக நோக்கும் எண்ணிக்கைச் சமநோக்கின் இடம் யாது? அதன் தாக்கம் குறளில் எவ்வாறு வெளிப்படுகின்றது? என்னும் வினாக்கள் இவ் வியலில் ஆராயப்படுகின்றன.

## 4.1 சங்க இலக்கியங்களில் எண்ணிக்கைச் சமநோக்குகள்

### 4.1.1 நானூறு

சங்கப் பாடல்களைத் தொகையும் பாட்டும் என இரு பிரிவுகளுக்குள் அடக்குவர். அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை, பரிபாடல் என்பன எட்டும் தொகை நூல்கள்; இவற்றை **எட்டுத் தொகை** என்பர். திருமுரு காற்றுப்படை, பொருநர் ஆற்றுப்படை, சிறுபாண் ஆற்றுப்படை, பெரும்பாண் ஆற்றுப்படை, முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்

பாட்டு, பட்டினப் பாலை, மலைபடுகடாம் என்பன பாட்டு நூல்கள். இவற்றைப் **பத்துப்பாட்டு** என்பர்.

அகநானூறு என்பது கடவுள் வாழ்த்து ஒன்றும் 145 புலவர்கள் பாடிய 400 அகப்பாடல்களையும் கொண்டது; இதனை **நெடுந்தொகை நானூறு** என்றும் வழங்குகின்றனர்.[1]

குறுந்தொகை என்பது கடவுள் வாழ்த்து ஒன்றும் ஏறத்தாழ 205 புலவர்கள் பாடிய 401 அகப்பாடல்களையும் கொண்டது. இத்தொகை நூல் நாலடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் கொண்டு தொகுக்கப்பட்டதாகும். ஆனால் 307-வது பாடலும் 391-வது பாடலும் ஒன்பது அடிகள் கொண்டுள்ளன. சில ஓலைச் சுவடிகளில் 391-ஆம் பாடல் எட்டு அடிகளைக் கொண்டு அமைந்துள்ளது என்பார் தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள்.[2] அவர்களே 307-வது பாடலைக் குறுந்தொகைப் பாடல் இல்லை என நீக்கி விடலாம் என்றும் கருத்துத் தெரிவித்துள்ளார்கள்.[3] ஐயர் அவர்களின் கூற்றினை ஏற்றுக் கொள்ளும் புலவர் சுந்தர சண்முகனார் அவர்கள்,

> ஆசிரியப் பாவாலான இந்த அகப்பொருள் பாடல் குறுந்தொகை, நற்றிணை, நெடுந்தொகை என்னும் மூன்று தொகை நூல்களுள் ஏதேனும் ஒன்றினைச் சேர்ந்ததாயிருக்க வேண்டும். ஒன்பது அடிகள் கொண்ட இந்தப் பாடல், எட்டு அடிகளுக்கு மேற்படாத குறுந்தொகைப் பாடலாக இருக்க முடியாதது போலவே, பதின்மூன்று அடிகளுக்குக் குறையாத நெடுந்தொகைப் பாடலாகவும் இருக்க முடியாது; எனவே, இந்தப் பாடல், ஒன்பது அடிச் சிற்றெல்லையுடைய நற்றிணைப் பாடலாக இருக்கலாம். அங்ஙனம் இதனை நற்றிணையில் சேர்த்தால், நற்றிணையில் நானூற்றுக்கு மேல் ஒன்று கூடிவிடுமே என்று வினவலாம். அந்த இடர்ப்பாட்டிற்கு இடமில்லை. நற்றிணையில் 234-ஆம் பாடல் கிடைக்கவில்லை. எந்த ஓலைச் சுவடியிலும் 234-ஆம் பாடல் இல்லை. எனவே குறுந்தொகையில் கூடுதலாக உள்ள 307-ஆம் செய்யுளை, நற்றிணையில் இல்லாத 234-ஆம் பாடலாகச் சேர்த்துக் கொள்ளலாம்.[4]

என்பார்; அதாவது குறுந்தொகை 400 பாடல்களைக் கொண்டது என்பார். இறையனார் அகப்பொருள் உரையில்

இந்நூல் **குறுந்தொகை நானூறு** என்றே வழங்கப்பட்டும் உள்ளது.[5]

நற்றிணை என்பது கடவுள் வாழ்த்து ஒன்றும் (குறுந் தொகையில் காணும் 307-ஆம் பாட்டலை 234-ஆம் பாட லாகச் சேர்த்து) 400 அகப்பாடல்களையும் கொண்டது. இதனை **நற்றிணை நானூறு** என்பர்.[6]

புறநானூறு என்பது கடவுள் வாழ்த்தொடு சேர 400 புறப்பாடல்களைக் கொண்டது.

அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு என்னும் தொகை நூல்கள் நான்கும் (கடவுள் வாழ்த்தைச் சேர்த்தும் நீக்கியும்) நானூறு நானூறு பாடல்களைப் பெற்றிருப்பதை நோக்கின், தொகை செய்தவர்கள் எண்ணிக்கைச் சமநிலையை — ஒழுங்கு நிலையைக் கருத்தில் கொண்டிருக்க வேண்டும் என்று தோன்று கின்றது. திருக்குறளுக்குப் பின்னர்த் தோன்றிய நாலடியார், பழமொழி முதலியவை நானூறு நானூறு பாடல் களைக் கொண்டிருப்பதும் கருதத்தக்கது.

### 4.1.2 **நூறு**

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான ஐங்குறுநூறு அகப்பொருள் பற்றியது; மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்னும் ஐந்து திணைகளுக்கும் — ஒவ் வொரு திணைக்கும் நூறு பாடல்கள் வீதம் $(5 \times 100)$—500 பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு திணையையும் ஒவ்வொரு புலவர் வீதம் பாடியுள்ளனர்; ஒவ்வொரு புலவரும் நூறு பாடல்கள் வீதம் பாடியுள்ளனர்.

பதிற்றுப்பத்து என்பது புறப்பொருள் பற்றிய தொகை நூல்; சேர மன்னர்கள் பதின்மர் மீது பாடப்பட்ட நூறு பாடல்களைக் கொண்டது.

ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து என்னும் இரு தொகை நூல்களின் பாடல் எண்ணிக்கை நிலையைக் கருதும்போது நூறு நூறாகக் காணும் எண்ணிக்கைச் சமநோக்கைச் சங்கச் சான்றோர் கருதியிருக்க வேண்டும் என்று தோன்று கின்றது.

## 4.2 தொல்காப்பியத்தில் எண்ணிக்கைச் சம நோக்குகள்

தமிழ் மொழிக்கே அரிய / பெரிய காப்பாக விளங்குவது **தொல்காப்பியம்** என்னும் தொன்னூல். இதனை இயற்றியவர் **ஒல்காப் புலமை தொல்காப்பியன்** என்னும் **அம்சொல் நுண்தேர்ச்சிப் புலவர்.** தமிழ் மொழிக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் இலக்கணம் வகுக்கும் தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று அதிகாரப் பகுப்புகளைக் கொண்டது. எழுத்ததிகாரம்,

நூல் மரபு
மொழிமரபு
பிறப்பியல்
புணரியல்
தொகைமரபு
உருபியல்
உயிர் மயங்கியல்
புள்ளி மயங்கியல்
குற்றியலுகரப் புணரியல்

என்னும் **ஒன்பது** இயல்களைக் கொண்டுள்ளது. இரண்டாவது அதிகாரமான சொல்லதிகாரம்,

கிளவியாக்கம்
வேற்றுமையியல்
வேற்றுமை மயங்கியல்
விளிமரபு
பெயரியல்
வினையியல்
இடையியல்
உரியியல்
எச்சவியல்

என்னும் **ஒன்பது** இயல்களைக் கொண்டு விளங்குகிறது. இலக்கண உலகில் தனிச்சிறப்புக்குரிய பொருளதிகாரம்,

அகத்திணையியல்
புறத்திணையியல்
களவியல்
கற்பியல்
பொருளியல்

மெய்ப்பாட்டியல்
உவமவியல்
செய்யுளியல்
மரபியல்

என்னும் ஒன்பது இயல்களாகப் பிரிந்துள்ளது. இவ்வாறு ஒவ்வோர் அதிகாரமும் ஒன்பது ஒன்பது இயல்களாக (எண்ணிக்கைச் சமநிலை உடையனவாக)ப் பகுக்கப் பட்டுள்ளது வியப்பிற்குரிய ஒன்றே எனலாம்.




படம் : 13

வாகைத் திணைக்குரிய துறைகளாகப் பதினெட்டுத் துறைகளைச் சுட்டுகின்றது தொல்காப்பியம். அவற்றுள்,

கூதிர் வேனில் என்றிரு பாசறைக்
காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும்,
ஏரோர் களவழி அன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும், தேரோர்
வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்,
பெரும்பகை தாங்கும் வேலி னானும்,
அரும்பகை தாங்கும் ஆற்ற லானும்,
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்,
ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்ந்து
தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி யானும்

(தொல். 1022:1–12)

எனவரும் ஒன்பது துறைகளும் மறவாகைக்கு உரியன;

பகட்டி னானும் ஆவி னானும்
துகள்தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்,
கடிமனை நீத்த பாலி னானும்,
எட்டுவகை நுதலிய அவையத் தானும்,
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்,
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்,
பிழைத்தோர்த் தாங்கும் காவ லானும்,
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்,
அருளொடு புணர்ந்த அகற்சி யானும்,
காமம் நீத்த பாலி னானும் (தொல். 1022:14-22)

எனவரும் ஒன்பது துறைகளும் அறவாகைக்கு உரியன. இவ்வாறு வாகையின் துறைகளை இரு கூறாக்கி, **மறவாகைக்கு ஒன்பதும் அறவாகைக்கு ஒன்பதுமாகப்** பகுக்கும் எண்ணிக்கைச் சமநிலை நோக்கைத் தொல்காப் பியத்தில் அறிகின்றோம். தொல்காப்பியமே,

இருபாற் பட்ட ஒன்பதின் துறைத்தே (தொல். 1022:23)

எனத் துறைப்பகுப்பின் ஈற்றில் குறிப்பிடுகின்றது.

மெய்ப்பாட்டியலில் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என மெய்ப்பாடு எட்டெனச் சுட்டிய தொல்காப்பியம், அதனையடுத்து ஒவ் வொரு மெய்ப்பாடும் தோன்றுதற்குரிய ஏதுக்களை வரை யறுக்கையில்,

எள்ளல் இளமை பேதைமை மடனென்
றுள்ளப் பட்ட **நகைநான் கென்ப** (தொல். 1198)

இளிவே இழவே அசைவே வறுமையென
விளிவில் கொள்கை **அழுகை நான்கே** (தொல். 1199)

மூப்பே பிணியே வருத்தம் மென்மையொடு
யாப்புற வந்த **இளிவரல் நான்கே** (தொல். 1200)

புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
மதிமை சாலா **மருட்கை நான்கே** (தொல். 1201)

அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்
பிணங்கல் சாலா **அச்சம் நான்கே** (தொல். 1202)

கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
சொல்லப் பட்ட **பெருமிதம் நான்கே** (தொல். 1203)

உறுப்பறை குடிகோள் அலைகொலை என்ற
வெறுப்ப வந்த வெகுளி **நான்கே** (தொல். 1204)

செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டென்
றல்லல் நீத்த உவகை **நான்கே** (தொல். 1205)

என **நான்கு நான்காகக்** குறிப்பிடுகின்றது. அதே போன்று களவிற்குரிய 24 மெய்ப்பாடுகளைக் குறிப்பிடுகையில், அவற்றை ஆறு பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றையும் **நான்கு நான்காகப்** பகுக்கின்றது (தொல். 1207-1212).

உவமவியலில் 36 உவம உருபுகளை 1232-ஆம் நூற்பாவில் தொகுத்தளிக்கிறது தொல்காப்பியம். அந்த 36 உவம உருபுகளுள் ஆறு உவம உருபுகளை (என்ற, ஒன்ற, நடுங்க, நாட, பொற்ப, மாற்ற) நீக்கம் செய்து, புதியனவாக இரு உவம உருபுகளைச் (நோக்க, நேர) சேர்த்து 32 உருபுகளாக்கி வினை, பயன், மெய், உரு என்னும் ஒவ்வொரு வகைக்கும் **எட்டு எட்டு** உருபுகளாகக் குறிப்பிடுகிறது (தொல். 1233-1237).

மரபியலில் உயிர்வகைப் பாகுபாடுகளைக் குறித்து, அதன்பின் ஒவ்வொரு வகைக்கும் எடுத்துக்காட்டுகள் தரும்போது ஓரறிவு முதல் ஐந்தறிவுள்ள உயிரினங்களுக்கு **இரண்டு இரண்டு** எடுத்துக்காட்டுகள் தந்து,

பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (தொல். 1527-1532)

என ஒவ்வொரு நூற்பாவையும் முடிக்கின்றது.

மெய்ப்பாட்டியலில் எட்டுவகை மெய்ப்பாடுகளுக்கும் 32 நிலைக்களன்களைக் குறிப்பிடும் தொல்காப்பியம், அவற்றின் வேறான மெய்ப்பாடுகளைக் குறிப்பிடும்போது,

ஆங்கவை ஒருபால் ஆக, ஒருபால்
உடைமை இன்புறல் நடுவுநிலை அருளல்
தன்மை அடக்கம் வரைதல் அன்பெனாஅக்,
கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்
நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவெனாஅ,
முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை
கருதல் ஆராய்ச்சி விரைவுயிர்ப் பெனாஅக்,
கையா றிடுக்கண் பொச்சாப்புப் பொறாமை
வியர்த்தல் ஐயம் மிகைநடுக் கெனாஅ
இவையும் உளவே அவையலங் கடையே (தொல். 1206)

என மற்றுமொரு 32 நிலைக்களன்களைக் குறிப்பிடுகின்றது. இங்கு எட்டு எட்டாகப் பகுக்கப்பட்டிருப்பதையும் காணலாம். உவமவியலில் வினை, பயன், மெய், உரு உவமங்களுக்குரிய உருபுகளை வகைதொகை செய்கையில் ஒவ்வொரு வகைக்கும் எட்டு எட்டாக 32 உருபுகள் சுட்டப்படுகின்றன எனவும் கண்டோம்.

மரபியலில்,இலக்கண நூல்கள் கைக்கொள்ள வேண்டிய உத்தி வகைகளைக் குறிப்பிடும் தொல்காப்பியம், அவை முப்பத்திரண்டு எனக் குறிப்பிடுகின்றது (தொல். 1610).

இதுவரை கண்டவற்றை நோக்கின், தொல்காப்பியத்தில் முப்பத்திரண்டு முப்பத்திரண்டாகவும் ($2^5$) எட்டு எட்டாகவும் ($2^3$), நான்கு நான்காகவும் ($2^2$), இரண்டு இரண்டாகவும் ($2^1$) நோக்கும் எண்ணிக்கைச் சம நோக்குகள் காணப்படுகின்றன என்பது தெளிவு (வேறு வகையான எண்ணிக்கைச் சம நோக்குகளும் காணப்படுகின்றன.).

## 4.3 பத்துப் பத்தாக நோக்கல்

எவற்றையும் பத்துப் பத்தாக நோக்கும் போக்குச் சங்கச் சான்றோர்களிடம் ஒரு தனிச் சிறப்பைப் பெற்றிருக்கின்றது எனக் கொள்ளலாம்.

தொல்காப்பியத்தில் பத்து என்னும் பகுப்புப் பல இடங்களில் வருகிறது. அவற்றுள் சில வருமாறு :

காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்என வருஉம்
ஆயீ ரைந்து (தொல். 541:1-4)

இன்றில உடைய என்னுங் கிளவியும்
அன்றுடைத் தல்ல என்னுங் கிளவியும்
பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்பொடு வருஉம் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்தும் குறிப்பொடு கொள்ளும் (தொல். 705)

தெய்வம் அஞ்சல், புரையறந் தெளிதல்,
இல்லது காய்தல், உள்ளது உவர்த்தல்,

புணர்ந்துழி உண்மை, பொழுதுமறுப் பாக்கம்,
அருள்மிக உடைமை, அன்புதொக நிற்றல்,
பிரிவாற் றாமை, மறைந்தவை உரைத்தல்,
புறஞ்சொல் மானாக் கிளவியொடு தொகைஇச்
சிறந்த பத்தும் செப்பிய பொருளே (தொல். 1218)

பிறப்பே, குடிமை, ஆண்மை, ஆண்டொடு,
உருவு நிறுத்த காம வாயில்,
நிறையே, அருளே, உணர்வொடு, திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே (தொல். 1219)

ஒத்த சூத்திரம் உரைப்பின் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி,
ஈரைங் குற்றமும் இன்று நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூல்என மொழிப நுணங்குமொழிப் புலவர் (தொல். 1598)

தொல்காப்பியத்தில் காணும் மேற்சுட்டிய இடங்களை/ நூற்பாக்களை நோக்கின் எவற்றையும் பத்துப் பத்தாக நோக்குவதில் தொல்காப்பியர் / அவருக்கு முந்திய சான்றோர்கள் ஒரு சிறப்பு ஆர்வம் காட்டியிருப்பரோ என எண்ணத் தோன்றுகின்றது.

சங்கத் தொகை நூல்களின் பாடல் எண்ணிக்கைகள் எல்லாமுமே பத்தின் மடங்குகளாகவோ பெருக்கிகளாகவோ இருப்பதைக் காண முடிகின்றது.

| | | | |
|---|---|---|---|
| பத்துப் பாட்டு | $= 10$ | $= 10 \times 1$ | $= 1 \times 10^1$ |
| அகநானூறு | $= 400$ | $= 4 \times 10 \times 10$ | $= 4 \times 10^2$ |
| குறுந்தொகை | $= 400$ | $= 4 \times 10 \times 10$ | $= 4 \times 10^2$ |
| நற்றிணை | $= 400$ | $= 4 \times 10 \times 10$ | $= 4 \times 10^2$ |
| புறநானூறு | $= 400$ | $= 4 \times 10 \times 10$ | $= 4 \times 10^2$ |
| ஐங்குறுநூறு | $= 500$ | $= 5 \times 10 \times 10$ | $= 5 \times 10^2$ |
| பதிற்றுப்பத்து | $= 100$ | $= 1 \times 10 \times 10$ | $= 1 \times 10^2$ |
| கலித்தொகை | $= 150$ | $= 15 \times 10$ | $= 15 \times 10^1$ |
| பரிபாடல் | $= 70$ | $= 7 \times 10$ | $= 7 \times 10^1$ |

மேற்சுட்டிய புள்ளி விவரங்கள் பத்தின் அடிப்படையில் தொகை செய்ய வேண்டும் எனக் கருதிய தமிழ்ச் சான்றோர்களின் உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டுகின்றன எனலாம். இத்தொகை நூல்களுள் அகநானூறு, நற்றிணை,

ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து என்பனவற்றின் அமைப்பு நயங்கள் சிலவும் ஆராய்தற்குரியன.

### 4.3.1 அகநானூறும் அமைப்பு நயமும்

அகநானூறு 400 பாடல்களைக் கொண்டது. அதில் காணும் அமைப்பு நிலையை — நயத்தை நோக்கின், தொகுத்தவர்கள் ஒவ்வொரு பத்தாகக் கருத்தில் கொண்டு தொகுத்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

$$400 = 10 \times 40$$

நாற்பது பத்துகளுள் ஒரு பத்தை மட்டும் எடுத்துக் கொள்வோம். இப்பத்துப் பாடல்களுள், 1, 3, 5, 7, 9 என்னும் எண்ணுள்ள (ஒற்றைப்படை எண்ணுள்ள) பாடல்கள் பாலைத் திணைக்குரியவை; 2, 8 என்னும் எண்ணுள்ள பாடல்கள் குறிஞ்சித் திணைக்கு உரியவை; 4 என்னும் எண் கொண்ட பாடல் முல்லைத் திணைக்கு உரியது; 6 என்னும் எண் கொண்ட பாடல் மருதத் திணைக்கு உரியது; 10 என்னும் எண்ணுடைய பாடல் நெய்தல் திணைக்கு உரியது. இவ்வாறு முதற்பத்துப் பாடல்களை ஒழுங்கு செய்த பின்னர், மற்ற 39 பத்துப் பாடல்களையும் (39×10) அதே ஒழுங்குபட முறையே அமைத்திருக்க வேண்டும் என்று தோன்றுகின்றது. அமைப்பு முறை நயம் வருமாறு:

| | | |
|---|---|---|
| பாலை | = | 1, 3, 5, 7, 9, 11, 13, 15, 17, 19, ...... |
| குறிஞ்சி | = | 2, 8, 12, 18, 22, 28, 32, 38, 42, ...... |
| முல்லை | = | 4, 14, 24, 34, 44, 54, 64, 74, 84, .. ... |
| மருதம் | = | 6, 16, 26, 36, 46, 56, 66, 76, 86, ...... |
| நெய்தல் | = | 10, 20, 30, 40, 50, 60, 70, 80, 90,...... |

மேற்சுட்டிய ஒழுங்கு நயத்தைக் கீழ்வரும் கணிதக் குறியீடுகளாகவும் கூறலாம்:

பாலை $= (2n-1)$

குறிஞ்சி $= 5n - 5/2 - \frac{(-1)^{n-1}}{2}$

முல்லை $= 2\,(5n-3)$

மருதம் $= 2\,(5n-2)$

நெய்தல் $= 10n$

[n = ஏதேனும் முழு எண்]

பாலைத் திணையில் இரண்டு அடுத்தடுத்த எண்களுக்குரிய வேறுபாடு 2; குறிஞ்சித் திணையில் முதலில் 6, அடுத்து 4; முல்லை, மருதம், நெய்தல் ஆகிய மூன்றிலும் 10; இந்த அமைப்பு நயத்தை வரைபடம் வழியாகவும் தெளிவுறலாம் (காண்க : படம் : 14).

அகநானூறு மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1. களிற்றியானை நிரை, 2. மணிமிடை பவளம், 3. நித்திலக் கோவை.

களிற்றியானை நிரையில் முதல் 120 பாடல்கள் உள்ளன (12×10). மணிமிடை பவளத்தில் 121 முதல் 300 முடிய 180 பாடல்கள் உள்ளன (18×10). நித்திலக் கோவையில் 301 முதல் 400 முடிய 100 பாடல்கள் உள்ளன ($10\times10 = 10^2$). ஆக, இந்தப் பகுப்புகளிலும் பத்தின் பெருக்குத் தொகையும் மடங்குமே கருதப்பட்டுள்ளன என்பது மிகத் தெளிவு.

### 4.3.2 நற்றிணை

இந்நூலில் உள்ள 400 பாடல்களும் ஒரு நிரல்பட அமையவில்லையாயினும் மருதத்திணைப் பாடல்கள் மட்டும் ஒரு நிரல்பட அமைந்துள்ளன என்லாம். மருதத் திணைப் பாடல்கள் அமைந்துள்ள எண்கள் வருமாறு :

20, 30, 40, 50, 60, 70, 80, 90, 100, 120, 150, 170, 180, 200, 210, 216, 230, 250, 260, 280, 290, 300, 310, 320, 330, 340, 350, 360, 370, 380, 390, 400.

இவற்றுள் 216-வது பாடல் தவிர ஏனைய பாடல்கள் பத்தின் பெருக்கிகளாகவே அமைந்துள்ளன. 216-வது பாடல் 220-வது மருதத்திணையாக அமைந்து இருக்க வேண்டும் என்பார் புலவர் சுந்தர சண்முகனார் அவர்கள்.[7]

### 4.3.3 ஐங்குறுநூறும் அமைப்பு நயமும்

ஒவ்வொரு திணைக்கும் நூறு நூறு பாடல்களாக ஐந்நூறு பாடல்களைக் கொண்டது ஐங்குறுநூறு எனக்


அகநானூற்றில் பாடல் / திணை
வைப்பு முறை ஒழுங்கு
y¹
40
38
36
34
32
30
28
26
24
22
20
18
16
14
12
10
8
6
4
2
x
O
y
1
2
3
4
5
6
7
8
9
10
11
x¹
பாடல் எண்
இட எண்ணிக்கை.
நெய்தல்
முல்லை
மருதம்
குறிஞ்சி
பாலை
அளவு கோல்
x-அச்சு—1 செ.மீ. = ஒரு முறை
y-அச்சு—1 செ.மீ. = 2 பாடல்கள்
25 JUL 1981

படம் . 14

குறிப்பிட்டோம். ஒவ்வொரு திணையும் (நூறு பாடல்களும்) பத்துப் பத்துப் பாடல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது; ஒவ்வொரு பத்துப் பாடல்களுக்கும் ஒரு தலைப்புத் தரப்பட்டுள்ளது. அதாவது, பத்துப் பாடல்கள் கொண்ட பத்துத் தொகுதிகள் ஒரு திணைக்குக் கருதப்பட்டுள்ளன என அறிகிறோம்.




படம் : 15

ஒவ்வோர் பத்துப் பாடலுக்கும் கொடுக்கப்பட்டிருக்கும் தலைப்புகள் அனைத்தும் பத்து என்றே முடிவு பெறுகின்றன. **வேட்கைப் பத்து** என்பது முதற்தலைப்பு; **வரவுச் சிறப்புரைத்த பத்து** என்பது ஐம்பதாவது தலைப்பு.

ஐம்பது பத்துகளைக் கொண்ட ஐங்குறுநூற்றில் பதினான்கு பத்துகளில் இருசீர்கள், முச்சீர்கள், ஓரடி, ஈரடி ஒத்துவருகின்றன. சான்றாக, முதல் பத்துப் பாடல்களின் முதல் அடிகள் எல்லாம்

வாழி ஆதன் வாழி அவினி

என்றே தொடங்குகின்றன. முழு விவரங்கள் வருமாறு :

| வரிசை எண் | ஒத்து வரும் சீர்/அடி எண்ணிக்கை | ஒத்து வரும் தொடர் | பாடல் எண்கள் |
|---|---|---|---|
| 1 | 2 சீர் | எக்கர் ஞாழல் | 141-150 |
| | | குன்றக் குறவன் | 251-260 |
| 2 | 3 சீர் | அம்ம வாழி தோழி | 31-40 |
| | | | 111-120 |
| | | | 221-230 |
| | | | 331-340 |
| | | அன்னை வாழிவேண் டன்னை | 101-110 |
| | | அன்னாய் வாழிவேண் டன்னை | 201-210 |
| 3 | ஓரடி | வாழி ஆதன் வாழி அவினி | 1-10 |
| | | கண்டிகு மல்லமோ கொண்க நின் கேளே | 121-130 |
| | | பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை | 161-170 |
| | | அவ்ரோ வாரார் தான்வந் தன்றே | 341-350 |
| | | நன்றே காதலர் சென்ற வாறே | 431-440 |
| 4 | ஈரடி | வெள்ளாங் குறுகின் பிள்ளை செத்தெனக் காணிய சென்ற மடநடை நாரை | 151-160 |

பதினெட்டாவது பத்தாக அமைந்துள்ள தொண்டிப் பத்தில் வரும் பத்துப் பாடல்களும் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. அதாவது 171-ஆம் பாடலின் ஈற்றடி 172-ஆம் பாடலின் தொடக்க அடியாகவும், 172-ஆம் பாடலின்ஈற்றடி 173-ஆம் பாடலின் தொடக்க அடியாகவும் அமைந்துள்ளன; இவ்வாறே தொடர்ந்து 180-ஆம் பாடல் முடிய அமைந்துள்ளன.

### 4.3.4 பதிற்றுப்பத்தும் அமைப்பு நயமும்

நூலின் பெயர் 10×10 என்றே அமைந்து உள்ளது. பத்துப் புலவர்கள் பத்து அரசர்களைப் பற்றிப் பாடி யிருக்கலாம் என்பர். தற்போது எட்டுப் பத்துகள் மட்டுமே கிடைத்துள்ளன.

ஐங்குறுநூற்றில் பதினெட்டாவது பத்து முழுவதும் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளது போலவே பதிற்றுப்பத்தின் நான்காவது பத்தும் அந்தாதித் தொடை யில் அமைந்துள்ளது. இந்தப் பத்தில் முதற்பாட்டின் இறுதி 'மாண்டனை பலவே' என்பதாகும்; இரண்டாம் பாட்டின் தொடக்கம் 'மாண்டனை பலவே' என்பதே; இரண்டாம் பாட்டின் இறுதி, 'இறும்பூதாற் பெரிதே' என்பதாகும்; மூன்றாவது பாட்டின் தொடக்கம் 'இறும் பூதாற் பெரிதே' என்பதே; இவ்வாறே பத்துப் பாட் டளவும் தொடர்ந்து செல்கிறது.

## 4.4 எண்ணிக்கைச் சமநோக்கும் திருக்குறளும்

சங்க நூல்களில் காணும் எண்ணிக்கைச் சமநோக்கு களில் பத்துப் பத்தாகப் பாகுபாடு செய்யும் போக்கு ஓர் தனிச்சிறப்புப் பெற்றிருக்கக் கண்டோம். குறிப்பாக, அகநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து ஆகிய நூல் களில் இச் சிறப்புப் போக்குப் பல வழிகளில் வெளிப்படு வதையும் கண்டோம். இவ்வாறு பத்துப் பத்தாகப் பாகு பாடு செய்யும் மரபு குறளிலும் தனிச்சிறப்புப் பெற் றுள்ளது. 1330 குறள்வெண் பாட்டுகள் பத்துப்பத்தாக வகைதொகை செய்யப்பட்டு, ஒவ்வோர் அதிகாரத்திற்கும் பத்துப் பாடல்கள் என்ற முறையில் 133 அதிகாரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றுள்,

| | | | |
|---|---|---|---|
| அறத்துப்பால் | 38 அதிகாரங்கள் | = 38×10 | பாடல்கள் |
| பொருட்பால் | 70 ,, | = 70×10 | ,, |
| காமத்துப்பால் | 25 ,, | = 25×10 | ,, |

ஐங்குறுநூற்றில் சில பத்துகளில் ஈற்று இருசீர்கள் அல்லது ஈற்றுச்சீர் ஒத்து வருகின்றன. வேட்கைப் பத்தில் வரும் பத்துப் பாடல்களும் 'எனவேட் டேமே' என்று முடிகின்றன; களவன் பத்தில் வரும் பத்துப் பாடல்களும்

'அன்னாய்' என முடிகின்றன; அதே போன்று, அன்னாய்ப் பத்தில் வரும் பாடல்கள் பத்தும் 'அன்னாய்' என்றே முடிகின்றன; தெய்யோப் பத்தில் வரும் பாடல்கள் பத்தும் 'தெய்யோ' என்றும், இளவேனிற் பத்தில் வரும் பாடல்கள் பத்தும் 'பொழுதே' என்றும், புறவணிப் பத்தில் வரும் பாடல்கள் பத்தும் 'உடைத்தே' என்றும் முடிகின்றன. இவ்வாறு பத்துப் பாடல்களின் ஈற்றுச் சீர்கள் ஒத்துவரும் அமைப்புநிலை குறளில் இல்லை; எனினும், **அரண்** என்னும் அதிகாரத்தில் வரும் 8 குறள்கள் 'அரண்' என்றும், **நாடு** என்னும் அதிகாரத்தில் வரும் 7 குறள்கள் 'நாடு' என்றும், **அறிவுடைமை** என்னும் அதிகாரத்தில் வரும் 5 குறள்கள் 'அறிவு' என்றும் முடியக் காண்கின்றோம்.

ஐங்குறுநூற்றில் காண்பது போன்ற முதல் ஈரடி ஒத்தல், ஓரடி ஒத்தல், மூன்று சீர் ஒத்தல், இரு சீர் ஒத்தல் போன்ற அமைப்புகள் குறள் அதிகாரங்களில் இடம் பெற வில்லை; அது போன்றே, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து ஆகியவற்றில் காணும் அந்தாதி அமைப்புகளும் குறள் அதிகாரங்களில் இடம் பெறவில்லை.

### 4.4.1 நிறைவும் நெகிழ்ச்சியும்

#### 4.4.1.1 நிறைவு

திருக்குறளில் ஒவ்வோர் அதிகாரத்திற்கும் பத்துப் பத்துப் பாடல்கள் என்னும் எண்ணிக்கைச் சம நோக்கால் பல்வேறு பயன்கள் உண்டு. அவற்றுள் குறிப்பிடத் தக்கவை வருமாறு :

1. எண்ணிக்கைச் சமநோக்கினதாகத் திருக்குறள் அமைந்துள்ளதே, இந்நூலைக் கற்பவர் இதன்பால் தனி ஈடுபாடு கொள்வதற்கு ஒருவகையில் வழி வகுக்கின்றது; இவ்வீடுபாடு உளவியலை அடிப்படையாகக் கொண்ட தாகும்.

2. கணக்கீட்டு முறையில் ஓர் எளிமையை இந்த எண்ணிக்கைச் சமநோக்கு வழங்குகின்றது. எளிமையைக் கருத்தில் கொண்டே இன்று மெட்ரிக் முறைகள் இந்திய அரசாலும் — உலகின் பல பகுதி வாழ் மக்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

3. குறட்பாக்களை நினைவு கொள்வதற்கு இவ் வெண்ணிக்கைச் சமநோக்குப் பேரளவு துணை செய்கின்றது.

### 4.4.1.2 நெகிழ்ச்சிகள்

ஒவ்வோர் அதிகாரத்திற்கும் பத்துப் பத்துக் குறள்களாகக் கொள்ளும் எண்ணிக்கைச் சமநோக்கால் சில பயன்கள் உண்டு என்றாலும், ஒரு சில நெகிழ்ச்சிகளும் (!) காணப்படுவதாகக் கருத இடமுளது.

இந்நோக்கில் திருக்குறளை ஆராய்ந்த அறிஞர் செல்வக் கேசவராய முதலியார் அவர்கள் குறளில் ஒரு சில நெகிழ்ச்சிகள் இருப்பதை ஏற்றுக் கொள்கின்றார்கள்.[8] இவர் கூற்றை ஏற்றுக்கொள்ளும் திரு. மு. சண்முகம் பிள்ளை அவர்கள் தம்முடைய **திருக்குறள் அமைப்பும் முறையும்** என்னும் நூலில், திருக்குறளில் காணும் நெகிழ்ச்சிகளுக்கு மேலும் ஒரு சில சான்றுகளும் தருகின்றார்கள்.[9] ஆகவே, குறளில் காணும் எண்ணிக்கைச் சமநோக்கால் ஒருசில நெகிழ்ச்சிகள் உள்ளனவாகத் தமிழுலகம் உணர்ந்துள்ளது என்பது தெளிவு. இந் நெகிழ்ச்சிகள் எவ்வெவ்வாறு குறளில் காணப்படுகின்றன என்பதைக் காணலாம்:

1. ஒரே கருத்து அடிப்படையாக அமைய, உணர்த்து முறையிலும் அமைப்பிலும் வேறுபட வரும் குறட்பாக்கள் சில குறள்களில் காணப்படுகின்றன. அவை, ஒரே அதிகாரத்துள்ளும் அமைந்துள்ளன; வெவ்வேறு அதிகாரங்களுள்ளும் அமைந்துள்ளன.

ஒரே அதிகாரத்தில் வருவதற்குச் சான்று:

> அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
> தீதின்றி வந்த பொருள் (குறள். 754)
>
> ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க் கெண்பொருள்
> ஏனை இரண்டும் ஒருங்கு (குறள். 760)

இவ்விரு குறள்களும் பொருள்செயல்வகை என்னும் அதிகாரத்தில் இடம் பெற்றுள்ளன.

வெவ்வேறு அதிகாரங்களில் பெரிதும் ஒத்த கருத்துடைய குறள்கள் வருவதற்குச் சான்றுகள் :

உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார் (குறள். 140)

எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
டவ்வ துறைவ தறிவு (குறள். 426)

முன்னது ஒழுக்கமுடைமை என்னும் அதிகாரத்தில் வரும் குறள்; பின்னது அறிவுடைமை என்னும் அதிகாரத்தில் வரும் குறள். இவற்றைப் போன்றே முறையே கூடா ஒழுக்கம், தெரிந்து வினையாடல் என்னும் அதிகாரங்களில் வரும்,

கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலால் கொளல் (குறள். 279)

எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகும் மாந்தர் பலர் (குறள். 514)

என்னும் குறள்களும் ஒரே அடிப்படையான கருத்தில் முகிழ்த்த, ஆனால் சொல்லும் முறைமை வேறுபட்ட குறள்கள் எனலாம்.

2. ஓரதிகாரத்தில் ஒரு குறளில் கூறப்பட்ட ஒரு கருத்தே, மீண்டும் உவமையுடன் சேர்ந்து விளக்கம் பெறுவதையும் திருக்குறளில் காண்கின்றோம். ஒரு சில சான்றுகள் வருமாறு:

அ) எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும் (குறள். 207)

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா தடியுறைந் தற்று (குறள். 208)

ஆ) தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள் (குறள். 251)

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு (குறள். 252)

இ) உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண் (குறள். 574)

பண்ணென்னாம் பாடற் கியைபின்றேல் கண்ணென்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண் (குறள். 573)

3. ஒரு தலைப்பிற்கு உட்பட்ட ஒருசில கருத்துகள் ஓர் அதிகாரத்திற்குள் அடங்காமையால், அவற்றை

உவமைகளின் வழி வெளிப்படுத்துகின்றாரோ என்றுகூடக் கருத இடமுள்ளது. ஏனென்றால், வள்ளுவர் அதிகாரத் திற்குள் கூறாத சில அறக்கருத்துகளும் உவமைவழி வெளிப்பட்டுள்ளன.

சான்றாக,

> அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
> களவறிந்தார் நெஞ்சில் கரவு (குறள். 288)

என்னும் குறளில் வரும் உவமையைக் குறிப்பிடலாம்.

4. திருக்குறளில் 180-க்கும் மேற்பட்ட உவமைகள் இடம் பெற்றுள்ளன. ஓரதிகாரத்தில் இடம்பெறும் கருத்தைப் பொலிவும் வலிவும் உடையதாக்கவும் எளிமை செய்ய வும் இவ்வுவமைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆனால்,

> இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
> உழத்தொறூஉம் காதற் றுயிர் (குறள். 940)

என்னும் குறளில் வரும் உவமை விதிவிலக்காக அமைந் துள்ளது. இக்குறள் சூது என்னும் அதிகாரத்தில் அமைந்துள்ளது. அதிகாரப் பொருளே உவமையாகி, அதிகாரத்தொடு தொடர்பு அற்ற வேறொரு கருத்து இதில் பொருளாகி வந்துள்ளது. இவ்வாறு பொருளே உவமை யாகி வருவதற்கு இலக்கணிகள் இலக்கணம் வகுத்து இருப்பினும், வேறோர் அதிகாரத்தில் வரவேண்டிய குறளை, எண்ணிக்கைச் சமநோக்கினைக் கருதிச் சூது என்னும் அதிகாரத்தில் சேர்த்திருக்கலாமோ என்றும் தோன்றுகின்றது.

திருக்குறளில் ஓர் அதிகாரத்தில் காணும் குறள் மற் றோர் அதிகாரத்திலும் வரலாம் எனக் கருதத்தக்க சூழ் நிலையும் தென்படுகின்றது. ஒரு சிலவற்றை இங்குக் காணலாம்:

> நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
> நாடொறும் நாடு கெடும் (குறள். 553)

> எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
> தண்பதத்தான் தானே கெடும் (குறள். 548)

என்னும் இரு குறள்களும் முறைசெய்யா மன்னவன் அடையும் கேடுகளை எடுத்துரைக்கின்றன; அதாவது

கொடுங்கோன்மையின் விளைவுகளைத் தெளிவு செய்கின்றன; ஆகவே, கொடுங்கோன்மை என்னும் அதிகாரத்தில் வரத்தக்கவை எனக் கருதலாம். ஆனால், முதற் குறள் கொடுங்கோன்மை என்னும் அதிகாரத்திலும், இரண்டாவது குறள் செங்கோன்மை என்னும் அதிகாரத்திலும் இடம்பெற்றுள்ளன. இஃது எண்ணிக்கைச் சம நோக்கால் விளைந்த விளைவு எனக் கருதலாம்.

பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து (குறள். 978)

பெருமை பெருமிதம் இன்மை; சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல் (குறள். 979)

அற்றம் மறைக்கும் பெருமை; சிறுமைதான்
குற்றமே கூறி விடும் (குறள். 980)

சிற்றினம் அஞ்சும் பெருமை; சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும் (குறள். 451)

என வரும் நான்கு குறள்களும் பெருமை சிறுமை ஆகியவற்றின் இயல்புகளை எடுத்துரைக்கின்றன. இவற்றுள் முதல் மூன்று குறள்களும் பெருமை என்னும் அதிகாரத்திலும் நான்காவது குறள் சிற்றினம் சேராமை என்னும் அதிகாரத்திலும் இடம்பெற்றுள்ளன. ஒத்த அமைப்புடைய இவை வெவ்வேறு அதிகாரங்களில்/இயல்களில் இடம் பெற்றுள்ளதும் எண்ணிக்கைச் சமநோக்கின் விளைவோ என ஐயுற இடமுளது.

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர் (குறள். 174)

அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும் (குறள். 176)

பொருள்தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர் (குறள். 199)

என, இல்லறவியலில் வரும் குறள்கள், 'புலம் வென்ற புன்மையில் காட்சியவர்', 'அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான்', 'மருள்தீர்ந்த மாசறு காட்சியவர்' என்னும் தொடர்களைப் பெற்று விளங்குவதால், இவை துறவறவியலில் வருதற்குரியனவோ என ஐயுற இடமுளது.

மேலும், துறவறவியலில் இடம்பெறும்,

> இறந்தார் இறந்தார் அனையர்; சினத்தைத்
> துறந்தார் துறந்தார் துணை (குறள். 310)

என்னும் குறள் இல்லறவியலில் இடம்பெறத்தக்கதாகக் கருத இடமுளது. இல்லறவியலில் இடம்பெறும் அதிகாரங்களைத் துறவறவியலிலும், துறவறவியலில் வரும் சில அதிகாரங்களை இல்லறவியலிலும் மணக்குடவர் மாற்றி அமைத்திருப்பதும் நாம் இங்குக் கருதவேண்டியனவே.[10] மணக்குடவர் இல்லறவியல் துறவறவியல் ஆகியவற்றுள் மாற்றியமைக்கும் அதிகாரங்கள் வருமாறு:

துறவறவியல் → இல்லறவியல்

வாய்மையுடைமை
வெகுளாமை
இன்னா செய்யாமை
கொல்லாமை
புலால் மறுத்தல்
கள்ளாமை

இல்லறவியல் → துறவறவியல்

இனியவை கூறல்
அடக்கமுடைமை
அழுக்காறாமை
வெ.:காமை
புறங்கூறாமை
பயனில சொல்லாமை.

## 4.5 ஆய்வு முடிவுகள்

1. சங்க இலக்கியங்களின் தொகுப்பில் நானூறு நானூறாக நோக்கல், நூறு நூறாக நோக்கல், பத்துப் பத்தாக நோக்கல் முதலிய எண்ணிக்கைச் சமநோக்குகள் காணப்படுகின்றன. தொல்காப்பியத்தில், முப்பத்திரண்டு முப்பத்திரண்டாக நோக்கல், பத்துப்பத்தாக நோக்கல், ஒன்பது ஒன்பதாக நோக்கல், எட்டு எட்டாக நோக்கல், நான்கு நான்காக நோக்கல், இரண்டு இரண்டாக நோக்கல் முதலிய எண்ணிக்கைச் சமநோக்குகள் காணப்படுகின்றன. இவை, சங்கப் புலவர்கள் ஓரளவு எண்ணிக்கைச் சமநோக்கினர் என்பதை உறுதியாக்குகின்றன.

2. சங்க நூல்களில், பத்துப் பத்தாக நோக்கும் எண்ணிக்கைச் சமநோக்கு ஒரு மரபாகவே பின்பற்றப்பட்டுள்ளது எனத் துணியலாம். சங்க நூல்களில் காணும் இம்மரபு குறளிலும் பின்பற்றப்பட்டுள்ளது (அல்லது போற்றப்பட்டுள்ளது) எனலாம்.

3. குறளில், காணும் எண்ணிக்கைச் சம நோக்கில் நிறைகளும் உண்டு; நெகிழ்ச்சிகளும் சில உண்டு.

## குறிப்புகள்

1. 'இந்த நூலுக்கு நெடுந்தொகை என்னும் பெயர் உண்மையை, இறையனார் அகப்பொருள் உரையாலும், ''நெடுந்தொகை முதலாகிய தொகையெட்டும் என்றவாறு''—என்னும் பேராசிரியர் (செய்யுளியல் - 236) உரைப் பகுதியாலும், ''அவை நெடுந்தொகை முதலிய தொகை எட்டுமாம்''—என்னும் நச்சினார்க்கினியரின் (செய்யுளியல்—236) உரைப்பகுதியாலும் அறியலாம் ...தொல்காப்பியம் - அகத்திணையியலில் 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்' என்று தொடங்கும் (53 ஆம்) நூற்பாவின்கீழ், நச்சினார்க்கினியர்எழுதியுள்ள,

''ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம் புறம் என்னும் இரண்டிற்கும் பொதுவாய் வருமாறு **நெடுந்தொகையும்** புறமும் கீழ்க்கணக்கும் மதுரைக் காஞ்சியும் பட்டினப்பாலையும் என்பனவற்றுட் காண்க''—

இந்த உரைப்பகுதியில், புறநானூற்றைப் 'புறம்' எனவும் அகநானூற்றை 'நெடுந்தொகை' எனவும் நச்சினார்க்கினியர் குறிப்பிட்டிருப்பது காண்க ..'நின்ற நீதி' என்று தொடங்கும் நீளமான பாயிரப் பாடலின் இடையேயுள்ள,

'முன்னினர் தொகுத்த நன்**னெடுந் தொகைக்குத்**
கருத்தெனப் பண்பினோர் உரைத்தவை நாடின்'

என்னும் பகுதியில், 'நெடுந்தொகை' என்னும் பெயர் அறிமுகப்படுத்தப் பட்டிருப்பது காண்க. மற்றும், 'வியமெல்லாம்' என்று தொடங்கும் பாயிரப் பாடலின் இறுதியிலுள்ள,

'தொகையில் நெடியதனைத் தோலாச் செவியான்
வகையி னெடியதனை வைப்பு'

என்னும் பகுதியிலுள்ள 'தொகையில் நெடியதனை' என்பதில், 'நெடுந்தொகை' என்னும் பெயர் மாற்றுருவத்தில் மறைந்து கொண்டிருப்பது காண்க. இந்த நெடுந்தொகை என்னும் பெயர், நீண்ட நாளாக மக்களிடையேயும் ஆட்சி

யில் இருந்திருக்கிறது. இதனை, அகநானூற்று ஓலைச் சுவடி ஒன்றின் இறுதியில் எழுதப்பட்டுள்ள,

'ஆறு நாட்டுக்குச் சேர்ந்த பெரும் பழனையில் இருக்கும் நல்லையப் புலவர் மகன் பொன்னையன் **நெடுந் தொகை.**' என்னும் பகுதியால் அறியலாம் ... அகநானூற்றின் இறுதியிலுள்ள பாயிரச் செய்யுளை அடுத்திருக்கிற உரைப்பகுதியிலும் கூறப்பட்டுள்ளது :

''நெடுந்தொகை நானூறும் கருத்தினோடு முடிந்தன: இவை பாடின கவிகள் நூற்று நாற்பத்தைவர்''—

என்பது அந்தப் பகுதி. 'நெடுந்தொகை நானூறு' என்னும் பெயர் பரவலாக வழக்காற்றில் இருந்தது என்பதற்கு இஃது ஓர் எடுத்துக் காட்டாகும்'

— புலவர் சுந்தர சண்முகனார், ***தமிழ் நூல் தொகுப்புக் கலை***, பாரி நிலையம், சென்னை, 1972, பக். 235-237.

2. டாக்டர் உ. வே. சாமிநாதையர், ***குறுந்தொகை***, கேஸரி அச்சுக்கூடம், சென்னை, 1937, ப. 5.

3. ஷை

4. புலவர் சுந்தர சண்முகனார், மு. நூ., பக். 264-265.

5. இறையனார், ***இறையனார் அகப்பொருள் உரை***, கழக வெளியீடு, சென்னை, 1969, ப. 6.

6. ஷை

7. புலவர் சுந்தர சண்முகனார், மு. நூ., பக். 268-269.

8. 'இனி

அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவ தெவன்

எனக் கூறிப் பின்னே,

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்

எனக் கூறியதும்,

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்

எனக் கூறிப் பின்னே,

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்

எனக் கூறியதும் முரண்படக் கூறலாம்;

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு

என்றும்,

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை

என்றும் கூறியது, கூறியது கூறலாம்; வலியறிதல் என்னும் அதிகாரத்தில் உரைத்த

ஆற்றின் அளவறிந் தீக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி

ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்

உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்

என்னும் நான்கு பாக்களும் பொருள்செயல் வகையிலோ குடிசெயல் வகையிலோ உரைக்கத்தக்கவை; அவைகளை வலியறிதலில் உரைத்தது இடப்பிறழ்வாம்; நட்பு அதிகாரப்பட்ட விடத்தில் தூது மருந்து என்பனவற்றை விரித்துரைத்தது மற்றொன்று விரித்தலாம் எனின், மேற்கூறியாங்கு நூலினை முற்றக்கற்று நூலின் நோக்கத்தைத் தொகுத்துப் பார்த்து நுனித்தறிவார்க்கு இவைகளும் இவை போல்வன பிறவும் அக்குற்றங்களாகாமை தேற்றமாம்'

எனக் கூறியிருப்பினும் அவரே,

'வள்ளுவனார் ஒவ்வோரதிகாரத்தையும் பப்பத்துக் குற ளாகக் கூறுவதென்று வரையறுத்துக் கொண்டதில் இரண்டு விதமான இடர்பாடுண்டு. அதிகாரப்பட்ட பொருள் பத்துக் குறட்குக் குறைவதாயின், கூறியது கூறல் மற்றொன்று விரித்தல், மிகைபடக் கூறல் முதலான குற்றங் களுக்கு இடமுண்டாகும்; அதிகாரப்பட்ட பொருள் பத்துக் குறளின் மிகுவதாயின், குன்றக் கூறல் முதலான குற்றங்களுக்கிடமுண்டாகும்; அன்றியும் விதிமுகத் தானும் மறைமுகத்தானும் பல அதிகாரங்கள் கூறவேண்டு வதுமாகும். கடவுள் வாழ்த்து அதிகாரப்பட்டவிடத்தில், நீடுவாழ்வார் இன்னார் என்பது இரண்டு குறளால் உணர்த் தினார். அவ்விரண்டு குறளையும் ஒன்றாக இணைத் திருக்கலாம்.

அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது

என்ற குறளையும்,

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்

என்ற குறளையும் ஒரு முடிபாக முடிப்பது நன்றாகும். இல்வாழ்க்கை அதிகாரப்பட்ட இடத்தில், துறவறத்தினும் இல்லறம் ஏற்புடையது என்பதற்கு,

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவ தெவன்

என்றும்,

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை

என்றும்,

ஆற்றின் ஒழுக்கி யறனிழுக்கா யில்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து

என்றும் மூன்று குறள் கூறினார். நட்பு அதிகாரப்பட்ட விடத்தில் கூறவேண்டுவனவெல்லாம் ஓரதிகாரத்தில் அடங்காமையால், அதனைப் பலவதிகாரங்களாக வகுத்துக் கொண்டார் '

– செல்வக் கேசவராய முதலியார், *திருவள்ளுவர்*, கழக வெளியீடு, சென்னை, 1934, பக். 39-40 & 43-44.

9. மு. சண்முகம் பிள்ளை, *திருக்குறள் அமைப்பும் முறையும்*, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1972, பக். 206-207.

10. மணக்குடவர், *திருக்குறள் மணக்குடவர் உரை - அறத்துப் பால்*, வ. உ. சிதம்பரம்பிள்ளை (பதி.), K. R. பிரஸ், சென்னை, 1917.

# 5

# முன்னோர் மொழிபொருள் போற்றும் மரபு

## 5.1 *மரபும் உள்ளமும்*

*இலக்கணப் புலவர் அல்லது இலக்கியப் புலவர், தம் காலத்திற்கு முன்னர் வாழ்ந்த புலவர்கள் சொல்லிய கருத்துகளையோ, தம் காலத்தே வாழும் புலவர்களுள் ஒரு கருத்தை ஒருவர் தமக்கு முன்னர்ச் சொல்லி இருந்தால் அக்கருத்தையோ ஏற்புக் கருதித் தம் இலக்கண நூலில் அல்லது இலக்கியத்தில் பயன்படுத்துவதை ஒரு மரபாகப் பின்பற்றியுள்ளனர். இதனையே **முன்னோர் மொழி பொருள் போற்றும் மரபு** எனலாம்.*

*பொதுவாக, முன்னோர் மொழிபொருள் போற்றும் புலவர்களிடம் காணும் நோக்குகள் பல. அவற்றுள் சில வருமாறு :*

1. *முன்னோர்பால் கொண்ட ஈடுபாட்டின் காரணமாக, அவர் கூறியனவற்றைத் தம் நூலில் எடுத்து ஆள்தல் என்பது ஒருவகை. இவ்வகைப் போக்குப் பெரும்பான்மையும் இலக்கியங்களிலேயே அமையும். இப்போக்கை அவ்வளவு எளிதாகப் பிரித்தறிய இயலாது.*

2. *முன்னோர் கொண்ட கருத்துகள் இவை, தம் காலத்தில் வளர்ச்சி பெற்ற கருத்துகள் இவை என்பதைத் தெளிவுபடுத்த முயலும் புலவர் பெருமக்கள், முன்னோர் சுட்டிய கருத்துகளை அப்படியே எடுத்துரைப்பது மற்றொரு போக்கு. இப்போக்குப் பெரும்பான்மையும் இலக்கண நூல்களிலும், ஒரு சிறிது அற இலக்கியங் களிலும் காணப்படும். இவ்வகையில், புலவர்கள் முன்னோரின் கருத்துகள் இவை என்பதையும் தம் காலக் கருத்துகள் இவை என்பதையும் ஒளிவு மறைவு இல்லாமல் தெளிவு படுத்துகின்றார்கள். கரந்து வாழும்*

கயமை உணர்வு அற்று வாழும் புலவர்களின் தெளிந்த நிலையை இப்போக்கு வெளிப்படுத்தும்.

3. வரையறுத்த நிலையில் நிரல்பட இலக்கணம் எழுத முனையும் இலக்கணி, இலக்கண வரையறைகள் தரும்போது அல்லது விளக்கங்கள் தரும்போது, தொடர்புடைய கருத்துகளில் முன்னோர் கருத்துகள் இருப்பின் அல்லது முன்னோர் கருத்துகளைச் சுட்டும் வாய்ப்புகள் ஏற்படும் வேளைகளில், அவற்றை அம்முன்னோர்களின் கருத்துகளாகவே எடுத்து மொழிவதுண்டு. இப்போக்குத் தொல்காப்பியத்தில் பெரிதும் காணப்படுகின்றது.

4. புலவர்கள் தம் கருத்துகளுக்கு வலிமையூட்ட முன்னோரின் கருத்துகளைச் சான்று கொள்வதும் உண்டு. இவ்வகையில் முன்னோர்க்குச் சிறப்புச் செய்தலொடு தம் கருத்துகளுக்கு உரம் ஊட்டுகின்றனர் எனலாம்.

5. முன்னோர் கொண்ட கருத்தை மறுத்துரைக்கும் போது, அவர் கருத்தைக் கூறி மறுத்தலும், மறுத்துத் தம் கருத்தை நிலைநாட்டலும் இம்மரபில் மற்றும் ஒரு போக்கு. சங்கப் புலவர்கள் பெரும்பான்மையும், தமக்கு மாறுபட்ட கருத்துகள் இருப்பின் இலக்கிய அளவில் அவற்றைப் பெரிதுபடுத்தாமல் விட்டுவிடும் இயல்பினர் போலும்! ஆகவேதான் இப்போக்குச் சங்க நூல்களில் மிக அருகி விளங்குகின்றது.

## 5.2 இலக்கண இலக்கியங்களில் முன்னோர் மொழிபொருள்

தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களாயின் முன்னோர் கூறிய இலக்கணக் கருத்துகளை ஒரு தனி நூற்பாவாகவோ, ஒரு நூற்பாவின் பகுதியாகவோ எடுத்துரைக்கும் வாய்ப்புகள் நிறைய உண்டு; ஆகவேதான், தொல்காப்பியத்தில் ஏறத்தாழ $\frac{1}{4}$ பங்கு நூற்பாக்களில் (1610 -இல் 400) முன்னோரின் கருத்துகள் இடம் பெற்றுள்ளன.

திருக்குறள் போன்ற அறநூல்களாயினும் முன்னோர்-தம் கருத்துகளை எடுத்துரைப்பதற்கான வாய்ப்புகள் உண்டு; எனினும், முன்னதினும் வாய்ப்புகள் ஓரளவு குறைவே.

இலக்கியங்களில், புறப்பொருள் பாடல்களாயின் அறத்தை வெளிப்படுத்த வேண்டிய சூழல்களும் உண்டு; அச் சூழல்களில் முன்னோர்தம் கருத்துகள் குறிக்கப்படு வதற்கும் வாய்ப்புகள் உண்டு; இதற்கான வாய்ப்புகள் அற நூல்களில் வாய்க்கும் வாய்ப்புகளைவிடக் குறைவு எனலாம்.

புறப்பொருள் பாடல்களை விட, அகப்பொருள் பாடல்களில் இவ்வாறு முன்னோர்தம் கருத்துகளைப் போற்றியுரைக்கும் வாய்ப்புகள் குறைவு. அகப்பொருள் பாடல்களில் கவிஞர்கள், தலைமகன் தலைமகள் தோழி முதலிய பாத்திரங்களைப் படைத்து அவர்கள்வழி நடை பெறும் நிகழ்ச்சிகளையும் உள்ள உணர்ச்சிகளையும் வெளிப்படுத்துகின்றார்கள். இவ்வகையில் அறத்தை எடுத் துரைக்க வேண்டிய சூழல்கள் குறைவே. அகத்திணைக்கு உரிய துறைகளுள் அறத்தை வெளிப்படுத்துதற்கான சூழல்களை வெளிப்படுத்தும் துறைகளும் குறைவே என்பதும் இங்குக் கருதத் தக்க ஒன்றாகும்.

அறத்தை எடுத்துரைக்க வேண்டும் என்னும் சூழல் ஏற்படுகின்றபோதும் தலைமகன், தலைமகள், தோழி ஆகியோர் தாமே அறக்கருத்துகளை [முன்னோர் கூறியவை இவை என்பது போல் கூறாமல்] எடுத்துரைப் பதுபோல் வரும் போக்கே அகப்பாடல்களில் மிகுந்து காணப்படுகின்றது:

நயனும் நண்பும் நாணும்நன் குடைமையும்
பயனும் பண்பும் பாடறிந் தொழுகலும்
நும்மினும் உடையேன் மன்னே (நற். 160:1-3)

இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்
அசையுடன் இருந்தோர்க் கரும்புணர் வின்மென
வினைவயிற் பிரிந்த வேறுபடு கொள்கை (நற். 214:1-3)

திறம்புரி கொள்கையொடு இறந்துசெயின் அல்ல
தரும்பொருள் கூட்டம் இருந்தோர்க் கில்லென
வலியா நெஞ்சம் வலிப்ப (நற். 252:3-5)

இவை, கூற்றாளர்களே அறத்தைக் குறிப்பிடுவனவாக வரும் பகுதிகளாகும். இவ்வாறில்லாமல், முன்னோர் கருத்திவை அல்லது உலகோர் கருத்திவை என்று எடுத் துரைக்கும் முன்னோர் மொழிபொருள் போற்றும்

வாய்ப்பும் அமைதல் உண்டு; இஃது, மிக அருகிய வழக்காகவே சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றது.

பல்வகைப்பட்ட நூல்களுள் முன்னோர் மொழி பொருள் போற்றும் மரபு இடம்பெறுதற்கான வாய்ப்புகளைப் பின்வருமாறு இறங்குமுகத்தான் [Descending order] குறிக்கலாம்:




படம் : 16

## 5.3 போக்கும் நோக்கும்

### 5.3.1 போக்குகள்

அமைத்தனர், ஆசிரியர்க்க, என்ப, என்மனார், என்றிசின், எனப்பட்ட, எனப்படுப, எனப்படுமே, எனப்படுவது, என மொழிப, என மொழிமனார், கிளப்ப, கூறுப முதலாய சொற்களையும் தொடர்களையும் பயன்படுத்தி, முன்னோர் மொழிபொருள் இவையிவை எனத் தொல்காப்பியம் வெளிப்படுத்துகின்றது (காண்க: இணைப்பு : 5/1).

சங்க இலக்கியங்கள் என்ப, என்பது, என்போர், எனப்படுவது, எனும் என்னும் சொற்களைப் பயன் படுத்தி, முன்னோர் மொழிபொருள் இவையிவை என வெளிப்படுத்துகின்றன. எடுத்துக் காட்டுகள் வருமாறு:

புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி
எய்துப **என்ப** (புறம். 27:7-9)

நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்
செல்வம் அன்றுதன் செய்வினைப் பயனே
சான்றோர் செல்வம் **என்பது** சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கண் செல்வம் செல்வமென் பதுவே (நற். 210:5-9)

நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை **என்போர்** (புறம். 29:11-12)

பொறையெனப் **படுவது** போற்றாரைப் பொறுத்தல்
(கலி. 133:14)

இம்மைச் செய்தது மறுமைக் காம்**எனும்**
அறவிலை வணிகன் ஆய்அலன் (புறம். 134:1-2)

திருக்குறளில் என்ப, என்பர் என்னும் சொற்கள் முன்னோர் மொழிபொருள் இவையிவை எனக் குறிப் பிடப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

அறிவினுள் எல்லாம் தலைய**என்ப** தீய
செறுவார்க்கும் செய்யா விடல் (குறள். 203)

பொருள்நீங்கிப் பொச்சாந்தார் **என்பர்** அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார் (குறள். 246)

கிளவார், வரையார் என்னும் எதிர்மறைச் சொற் களைப் பயன்படுத்தி, முன்னோர் கருத்துகளை எடுத்து ரைக்கும் போக்கும் தொல்காப்பியத்தில் காணப்படு கின்றது.

சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் **கிளவார்** (தொல். 524)

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருவுகொளல் **வரையார்** (தொல். 140)

குறிஞ்சிப் பாட்டில் என்னார் என்னும் சொல் முன்னோர் கருத்து இதுவென உரைத்தற்குப் பயன் படுத்தப்பட்டுள்ளது:

முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை
நேர்வருங் குரைய கலங்கெடின் புணரும்
சால்பும் வியப்பும் இயல்புங் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய என்னார் தொல்மருங் கறிஞர் (குறிஞ். 13-18)

'அன்ன மரபின' (தொல். 595), 'அன்ன மரபு' (தொல். 596), 'அனை மரபினவே' (தொல். 598, 1597), 'கூறலும் மரபே' (தொல். 1159), 'கெடலரும் மரபு' (தொல். 1188), 'தொன்னெறி மரபின' (தொல். 594), 'நிலைக்குரி மரபு' (தொல். 1319), 'வழக்கியல் மரபே' (தொல். 731) முதலிய தொடர்களைப் பயன்படுத்தி இன்னின்ன இலக்கண நெறிகள் மரபாகப் பயன்று வருபவை என உரைப்பதன் வழியே தொல்காப்பியம் முன்னோர் மொழிபொருள் இவை யிவை எனவும் வெளிப்படுத்துகின்றது. இப்போக்குத் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது.

**அறம்** என்னும் நூல் இவ்வாறு கூறுகிறது எனக் கூறி முன்னோர் மொழிபொருள் எடுத்துரைக்கும் பாங்கு புறநானூற்றில் காணப்படுகிறது:

ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயும் உளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி இல்லென
**அறம்**பா டிற்றே
(புறம். 34:1-7)

'பனுவல் துணிவு' (குறள். 21), 'அறம்' (குறள். 283), 'நூலோர் தொகுத்தவை' (குறள். 322), 'உலகத் தெப்பால் நூலோர்க்கும் துணிபு' (குறள். 533), 'என்றுரைக்கும் நூல்' (குறள்.743), 'நூலோர்' (குறள். 941) என்னும் சொற்களை யும் தொடர்களையும் பயன்படுத்தி முன்னோர் மொழி பொருள் உரைக்கும் போக்கைத் திருக்குறளில் காணுகின் றோம். இங்கு, 'அறம்' என்னும் சொல் அப்பெயருடைய நூலைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்; அறக்கொள்கை யைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

'நூலோர் தொகுத்தவை' என வள்ளுவர் குறிப்பிடுவன எவை என விளங்கவில்லை. வள்ளுவர் காலத்துக்கு முன்பாக அல்லது சம காலத்தில் தொகுக்கப்பட்ட இலக்கிய / அற நூல்களை வள்ளுவர் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். தமிழ் நாட்டில் சங்க இலக்கியங்கள் தொகுக்கப்பட்டுள்ளன ; சீனப் பெருநாட்டில் கன்பியூசியஸ் இலக்கிய-வரலாற்று-அற நூல்களைத் தொகுத்துள்ளார் என்பர்; (மாறுபடக் கூறுவாரும் உளர்). இவையெல்லாம் இங்கு நினைவு கொள்ளற்குரிய. முன்னரே கூறியதுபோல் **அறம்** எனச் சங்க இலக்கியமும் குறளும் குறிப்பிடுவது ஒருகால் திருக்குறளுக்கு முன்தோன்றிய அறநூலாக/அறத் தொகுப்பாக இருக்கலாமோ என்பதும் சிந்தனைக்குரியது.

'உலகத்து எப்பால் நூலோர்க்கும் துணிபு' என்னும் தொடர், வள்ளுவர் உலக அறிஞர்களின் கருத்துகளையும் அறிந்தமைக்குச் சான்றாக அமைந்து, அவர்தம் கல்வியின் விரிவைக் காட்டுகின்றது.

தொல்காப்பியர் 'மறையென மொழிதல் மறையோர் ஆறே' (தொல். 1442:4) என உரைப்பதன்வழி, அவர் மறையோர் கருத்துகளை அறிந்தவர் எனத் துணிய முடிகின்றது; மறை என்பதற்குக் **களவு நூல் வல்லார்** எனவும் பொருள் கொள்ளலாம்.

தொல்காப்பியரும் திருவள்ளுவரும் பல்துறை அறிவு பெற்றிருந்தார்கள் என்பதற்கு,

> நரம்பின் மறைய என்மனார் புலவர் (தொல். 33 : 3)

> உயர்வகலம் திண்மை அருமையிந் நான்கும்
> அமைவரண் என்றுரைக்கும் நூல் (குறள். 743)

என்பன போல்வனவே தக்க சான்றுகளாகும்.

'மாசற்றார் கோள்' இவை என உரைப்பதன் வழி, மறைமுகமாகப் பிறர் மொழிபொருள் இவை என்பதையும் குறள் வெளிப்படுத்துகின்றது:

> சிறப்பீனும் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
> செய்யாமை **மாசற்றார் கோள்** (குறள். 311)

உலகோர் கூறுவன இவை எனக் கூறி, முன்னோர் மொழிபொருள் உரைக்கும் பாங்கு நற்றிணை, திருக்குறள் ஆகியவற்றில் இடம் பெற்றுள்ளன.
எடுத்துக்காட்டுகள் :

......... ......... ......... சான்றோர்
கடனிலை குன்றலும் இலரென் றுடனமர்ந்
துலகம் கூறுவ துண்டென (நற். 327:4-6)

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்
குறைபதி என்னும் உலகு (குறள். 1015)

இன்னின்ன இயல்பினையுடைய / புலமையையுடைய முன்னோர்கள் இன்னின்ன இலக்கண நெறிகளை உரைத்துள்ளனர் எனக் குறிப்பிட்டு, முன்னோர் மொழி பொருளைத் தொல்காப்பியர் எடுத்துரைக்கின்றார். அவ்வாறு வரும் நூற்பாக்களின் இறுதி அடி / அடிகள் வருமாறு :

என்ப

1. ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே (தொல். 643 : 2)
2. ஒத்த தென்ப உணரு மோரே (தொல். 193 : 3)
3. ஒன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே (தொல். 1358 : 4)
4. கொள்ளு மென்ப குறியறிந் தோரே (தொல். 993 : 2)
5. சொல்லிய தொடையொடு வேறுபட் டியலின்
சொல்லியல் புலவரது செந்தொடை என்ப
(தொல். 1357)
6. செவ்வி தென்ப சிறந்திசி னோரே (தொல். 295 : 5)
7. புகரின் றென்மனார் புலமை யோரே (தொல். 369 : 2)
8. வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர் (தொல். 1332 : 2)

என்மனார்

9. அன்ன இயல என்மனார் புலவர் (தொல். 333 : 3, 649 : 4)
10. இசைப்பொருட் கிளவி ,, ,, (தொல். 841 : 2)
11. இயற்பெயர் வழிய ,, ,, (தொல். 521 : 4)
12. இன்மை வேண்டும் ,, ,, (தொல். 130 : 2)
13. இன்னவை நிகழும் ,, ,, (தொல். 1047 : 5)
14. எண்ணுக் குறித்தியலும் ,, ,, (தொல். 773 : 2)

15. எழுத்தியல் திரியா என்மனார் புலவர் (தொல். 53 : 2)
16. என்றிவை இன்மை ,, ,, (தொல். 1220 : 4)
17. ஏனோர் பாங்கினும் ,, ,, (தொல். 1029 : 2)
18. கலங்கலும் உரியன் ,, ,, (தொல். 1118 : 5)
19. நன்மதி நாட்டத்(து) ,, ,, (தொல். 483 : 5)
20. பின்னிலைத் தோன்றும் ,, ,, (தொல். 1113 : 2)
21. முன்னிலை மொழிய ,, ,, (தொல். 272 : 2)
22. வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே (தொல். 624 : 2)

*எனச் சொல்லினர்*

23. புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்
(தொல். 1586 : 4)

*எனமொழிதல்*

24. பொழிப்பென மொழிதல் புலவ ராறே (தொல். 1355 : 2)
25. மறையென மொழிதல் மறையோ ராறே (தொல். 1442 : 4)

*என மொழிப*

26. இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே (தொல். 950 : 2)
27. உளவென மொழிப உணர்ந்திசி னோரே (தொல். 601 : 2)
28. ஒத்தென மொழிப உயர்மொழிப் புலவர் (தொல். 1426 : 3)
29. தோலென மொழிப தொன்மொழிப் புலவர் (தொல். 1494:3)
30. நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர் (தொல். 1598:5)
31. புலன்என மொழிப புலனுணர்ந் தோரே (தொல். 1497 : 3)
32. யாப்பென மொழிப யாப்பறி புலவர் (தொல். 1335 : 3)

*என மொழிமனார்*

33. பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர்
(தொல். 904 : 2)

*பிற வெளிப்பாடுகள்*

34. ஆங்ஙனம் அறிப அறிந்திசி னோரே (தொல். 1469 : 12)
35. ஆங்ஙனம் விரிப்பின் அளவிறந் தனவே
பாங்குற உணர்ந்தோர் பண்ணுங் காலை (தொல். 1308)
36. இடையும் வரையார் தொடையுணர் வோரே
(தொல். 1326)
37. கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே (தொல். 7)

38. திரிபிட னிலவே தெரியு மோர்க்கே (தொல். 585 : 4)

39. நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே (தொல். 1259 : 14-15)

40. நிலனொருங்கு மயங்குதல் இன்றென மொழிப
புலனன் குணர்ந்த புலமை யோரே (தொல். 958 : 2-3)

41. நுனித்தகு புலவர் கூறிய நூலே (தொல். 1610 : 28)

42. விளியொடு கொள்ப தெளியு மோரே (தொல். 638 : 3)

என்ப, என்மனார் முதலிய சொற்களால் மட்டும் முன்னோர்களை உணர்த்தாமல், அவர்தம் சிறப்பிற்கு ஏற்ப சிறப்படைகள் தந்து சிறப்பிக்கும் தொடர்களை இவ்வடிகளில் காணுகின்றோம். இவ்வாறு சிறப்படைகள் கொடுத்து வழங்கும் தொடர்களுள் ஏறத்தாழ 90% (என் மனார் புலவர் எனவரும் அடிகள் தவிர்த்த) அடிகள் இவை. என்மனார் புலவர் என்னும் தொடரைப் பெற்றுவரும் அடிகளுள் 22% மட்டுமே இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளன. இங்கு எடுத்துக் காட்டிய 42 அடிகளை நோக்கின் புலனாகும் சில உண்மைகள் வருமாறு :

| | | |
|---|---|---|
| 1. பொழிப்பு மோனை மட்டும் கொண்ட அடிகள் (1—4, 6—8, 10—17, 24—32, 34, 38) | = | 26 |
| 2. ஒரூஉ மோனை கொண்ட அடிகள் (23, 41) | = | 2 |
| 3. பொழிப்பு எதுகை கொண்ட அடிகள் (9, 13, 14, 19, 20, 21, 23, 25, 26, 31, 36, 38, 42) | = | 13 |
| 4. கூழை எதுகை கொண்ட அடிகள் (12, 16) | = | 2 |
| 5. அடி எதுகை கொண்ட ஈரடிகள் (6, 35, 37, 39, 40) | = | 5 |
| 6. ஒரூஉ எதுகை கொண்ட அடிகள் (18, 33) | = | 2 |
| மொத்தம் | | 50 |
| எதுகை மோனை ஒன்றிற்கு மேலாகக் கொண்ட அடிகள் | | 8 |
| எஞ்சியவை | | 42 |

இப்புள்ளி விவரம் நமக்கு எதனைக் காட்டுகின்றது? தொல்காப்பியர் தம் முன்னோரின் புலமைகளை வெளிப் படுத்த பல்வேறு அடைத்தொடர்களைப் பயன்படுத்து கின்றார்; ஒவ்வொரு அடையும் புலமையின் பல்வேறு வெளிப்பாட்டு நிலைகள்; இலக்கியக் கொள்கைக்கு அரிய வழிகாட்டிகள்; புலமையைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுவன. ஆனால் இவ்வடைகள் எல்லாம் எதுகை மோனை என்னும் தொடையமைதியுடன் பயன்படுத்தப் பட்டுள்ளதை நோக்க, தொடை அமைதியுறவே இத்தொடர் வேறுபாடுகள் பயன்படுத்தப் பட்டிருக்கலாமோ என எண்ணத் தோன்றுகின்றது.

சங்க இலக்கியங்களும் முன்னோர்களை, உணர்ந்திசி னோர், தொல்மருங்கறிஞர், பல்புகழ் நுவலுநர், முன்னும் அறிந்தோர் எனச் சிறப்பித்து வழங்குகின்றன. இவ்வாறு வழங்குவது அருகியே வந்துள்ளது. இங்கும் ஓரளவு அடி எதுகை, கூழைமோனை அமைப்புகள் கருத்தில் கொள்ளப் பட்டுள்ளனவாகத் தோன்றுகின்றது.

செல்குவை யாயின் நல்குவன் பெரிதெனப்
பல்புகழ் நுவலுநர் கூற (புறம். 160 : 14-15)

உண்டெனு உரைப்பரால் உணர்ந்திசி னோரே
(புறம். 365 : 11)

இவை இயல்பாக அமைந்தவை என்றும் கொள்ளலாம்.

## 5.3.2 நோக்குகள்

### 5.3.2.1 தொல்காப்பியம்

1. தொல்காப்பியர் தம் நூலை 27 இயல்களாகப் பகுத்து, ஒவ்வொரு இயலுக்கும் தொடர்புடைய கருத்துகளைப் பெரும்பான்மையும் நிரல்பட உரைக் கின்றார். கருத்துகளை நிரல் முறையில் கூறுகையில், முன்னோர் கருத்துகள் இருப்பின் அவற்றை இடை யிடையே தனித்தனி நூற்பாக்களாக அமைத்துச் செல் கின்றார்.

மெய்யின் அளபே அரையென மொழிப (தொல். 11)

தொல்காப்பியர் ஒன்றுக்கு மேற்பட்ட நூற்பாக்களில் தொடர்ந்து முன்னோர் கருத்துகளைக் கூறியுமுள்ளார்.

ஏழு நூற்பாக்கள் வரை தொடர்ந்து முன்னோர் கருத்துகளைக் குறிப்பிடும் போக்கைத் தொல்காப்பியரிடத்தில் காணுகின்றோம். சான்றாக, 1291-வது நூற்பா முதல் 1297 - வது நூற்பா முடிய, ஏழு நூற்பாக்களில் முன்னோர் கருத்துகள் குறிப்பிடப்படுவதைக் கூறலாம்.

ஓரடி நூற்பாவானும் முன்னோர் கருத்துச் சுட்டப்படுகின்றது; 43 அடிகள் கொண்ட நூற்பாவானும் முன்னோர் கருத்துச் சுட்டப்படுகின்றது.

2. ஒரே நூற்பாவில் அல்லது அடுத்தடுத்து வரும் இரு நூற்பாக்களில், முன்னோர் கருத்து ஒன்றும், அக் கருத்தொடு தொடர்புடைய கருத்தொன்றும் வரும் போக்கும் தொல்காப்பியத்தில் காணப்படுகிறது. இவ்வாறு அமையும் கருத்துகளில் / இலக்கண வரையறைகளில் முன்னோர் கருத்து முன்னதாகவும் தொடர்புடைய மற்றொரு கருத்து அடுத்தும் அமைவதுண்டு; இம்முறை மாறியும் அமைவதுண்டு.

எழுத்தெனப் படுப
அகர முதல் னகர இறுவாய்
முப்ப.: தென்ப;
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே (தொல். 1)

என்னும் நூற்பாவில் முன்னோர் கருத்து முன்னரும், அதனொடு தொடர்புடைய கருத்து அடுத்தும் அமைகின்றது.

கருப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள (தொல். 885)

நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப (தொல். 856)

என அடுத்தடுத்து வரும் இரு நூற்பாக்களில் ஒரு வரையறை முன்னரும், அதனொடு தொடர்புடைய முன்னோர் மொழிபொருள் அடுத்தும் வரக்காண்கிறோம். இவ்வாறு இலக்கண வரையறைகள் தரப்படுவதால்,

(1) முன்னோர் கொண்ட கருத்தையும், தொல்காப்பியர் கால வளர்ச்சி நிலையையும் அறிந்து கொள்ள முடிகின்றது;

(2) தொல்காப்பியர் காலத்துக்கு முன்பிருந்த இலக்கணக் கொள்கைகளில் அருகி வந்துள்ளன

வற்றையும், மறைந்து விட்டனவற்றையும் அறிய முடிகின்றது.

3. ஒரே நூற்பாவில் முன்னோர் கூறுவனவற்றுள் ஒன்றை முன்னர் உரைத்து, அதனொடு தொடர்புடைய முன்னோரின் மற்றொரு கருத்தை அடுத்து உரைக்கும் போக்கும் தொல்காப்பியத்தில் காணப்படுகின்றது.

அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவெனமொழிப; இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர் (தொல். 33)

### 5.3.2.2 சங்கத் தொகை நூல்கள்

1. சங்கப் புலவர்கள் தாம் கூறும் கருத்துகளுக்கு அழுத்தம் நல்க, முன்னோர் கருத்துகளைப் பயன்படுத்தி யுள்ளனர்:

சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்
கூனுங் குறளும் ஊமுஞ் செவிடும்
மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்
கெண்பேர் எச்சம் என்றிவை யெல்லாம்
பேதைமை யல்லது ஊதியம் இல்லென
முன்னும் அறிந்தோர் கூறினர் (புறம். 28: 1-6)

2. புலவர்கள் தாம் படைத்த அகத்துறை மாந்தர் களின் புலமைத் திறத்துக்குச் சான்றாகவும் - அவர்கள் கூறும் கருத்துகளுக்கு அழுத்தம் தரவும் முன்னோர் கருத்து களைப் பயன்படுத்தியுள்ளனர்:

முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை
நேர்வருங் குரைய கலங்கெடின் புணரும்
சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய என்னார் தொல்மருங் கறிஞர் (குறிஞ். 13-18)

தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந் துணர்க என்ப (நற். 116:1-2)

3. பிறர் கூற்றை உரைத்து நயமாக மறுக்கும் நோக்கும் சங்கத் தொகை நூல்களில், மிக அருகிய நிலையில் காணப்படுகிறது:

இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆய்அலன் (புறம். 134:1-2)

4. தம்மினும் முரண்பட்ட தத்துவ வாணர்களை அரசர்கள் பேணுதல் கூடாது என அரசர்களுக்கு அறிவுறுத்தும் நோக்கும் முன்னோர் மொழிபொருள் எடுத்துரைத்தலில் காணப்படுகிறது:

நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை யென்போர்க் கினனா கிலியர் (புறம். 29:11-12)

### 5.3.2.3 திருக்குறள்

முன்னோர் மொழிபொருள் போற்றும் மரபில் திருக்குறளில் காணும் நோக்குகள் சில வருமாறு:

1. முன்னோர் கூறிய கருத்தைத் தாமும் ஏற்று உரைத்தல். இதனை **ஏற்பு நோக்கு** எனலாம்.

எடுத்துக்காட்டு :

மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க் கில்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை (குறள். 244)

2. முன்னோர் கொண்ட கருத்தைக் குறிப்பிட்டு, மறுத்துத் தம் கருத்துரைத்தல். இதனை **மறுப்பு மற்றும் தம்கோள் நாட்டும் நோக்கு** எனலாம்.

எடுத்துக்காட்டு :

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை (குறள். 76)

3. முன்னோர் கருத்தைக் குறளின் ஒரு பாதியில் உரைத்து, மறு பாதியில் தம் கருத்தையும் உரைத்தல். இதனை **ஏற்பு மற்றும் தம்கோள் உரைக்கும் நோக்கு** எனலாம்.

எடுத்துக்காட்டு :

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு (குறள். 60)

## 5.4 ஆய்வு முடிவுகள்

1. முன்னோர் மொழிபொருள் போற்றும் மரபு, இலக்கண நூலாகிய தொல்காப்பியம், இலக்கிய நூல்களான சங்கத் தொகை நூல்கள், அற நூலாகிய திருக்குறள் ஆகிய மூவகை நூல்களிலும் காணப்படுகின்றது. ஆனால் நூல்வகைக்கேற்ப, நோக்கும் போக்கும் எண்ணிக்கையும் மாறுபடுகின்றன.

2. இவை மரபு எனக் கூறி, முன்னோர் உரைத்த/ஏற்றுக் கொண்ட வழக்கை உரைத்திருப்பது தொல்காப்பியத்தின் தனிச்சிறப்பாகும்; அம்மரபைக் கெடலரும் மரபு, தொன்னெறி மரபு, நிலைக்குரி மரபு, வழக்கியல் மரபு என உரைத்துப் போற்றுகின்றது.

3. அறநூல் கூற்று இவை, உலகோர் கூற்று/நடைமுறை இவையெனக் கூறி, முன்னோர் மொழிபொருள் போற்றியுரைக்கும் நுட்பம் சங்கத் தொகை நூல்களிலும் திருக்குறளிலும் காணப்படுகின்றது. இஃது திருக்குறளில் முன்னதினும் மிகுந்து காணப்படுகின்றது.

4. பிற தேயத்து முன்னோர்தம் கருத்துகளையும் ஏற்றுரைக்கும் பொதுமையுணர்வு தொல்காப்பியம் திருக்குறள் ஆகிய இருநூல்களிலும் காணப்படுகின்றது.

5. முன்னோர்தம் கூற்றை உரைத்து மறுக்கும் நோக்குச் சங்க காலச் சான்றோர்களிடம் மிகமிக அருகியே காணப்படுகின்றது. இந்நோக்கு, தொல்காப்பியத்தில் இடம் பெறவில்லை.

6. முன்னோர்தம் இயல்புகளை-புலமைத் திறத்தைச் சுட்ட, தொல்காப்பியர் பல்வேறு அடைமொழிகளைப் பயன்படுத்துகின்றார். சங்க இலக்கியங்களிலும் ஒரு சில இடங்களில் இப்போக்கு வெளிப்படுகின்றது. கருத்துகளைச் சுருங்க உரைக்க வேண்டிய சூழலின் காரணமாகக் குறளில் இப்போக்கு இடம் பெறவில்லை.

7. முன்னோர் மொழிபொருள் போற்றும் மரபு சங்க அகப்பொருள் பாடல்களில் மிக அருகிக் காணப்படுகிறது; குறிப்பாகப் பத்துப்பாட்டில் வரும் அகப்பாடல்களைக்

குறிக்கலாம்; புறப்பொருள் பாடல்களில், அகப்பொருள் பாடல்களினும் சற்று மிகுதியாகக் காணப்படுகிறது. புறப் பொருள் பாடல்களினும் குறளில் இம்மரபு இன்னும் சற்று மிகுதி; தொல்காப்பியத்தில் ஏறத்தாழ 1/4 பங்கு நூற் பாக்களில் முன்னோர் மொழிபொருள் போற்றும் மரபு காணப்படுகிறது.

7.1 முன்னோர் மொழிபொருள் போற்றும் மரபு நூல் களில் பெற்றுள்ள இடத்தினைப் பின்வருமாறு ஏறுமுகத் தான் (ascending order) கூறலாம்:




படம்: 17

## இணைப்பு 5/1

### தொல்காப்பியம் பிறர்கூற்றை உணர்த்த பயன் படுத்தும் சொற்றொடர்களும் அவை இடம் பெறும் நூற்பாக்களும்

| வரிசை எண் | பிறர் கூற்றைச் சுட்ட தொல்காப்பியர் பயன் படுத்தும் தொடர் | நூற்பா/நூற்பாக்கள் |
|---|---|---|
| 1 | அமைத்தனர் | 1347 |
| 2 | அன்ன மரபின | 595 |
| 3 | அன்ன மரபு | 596 |
| 4 | அனைமரபினவே | 598, 1597 |
| 5 | ஆங்ஙனம் அறிப அறிந்திசி னோரே | 1469 |
| 6 | ஆசிரியர்க்க | 315, 389 |
| 7 | என்ப | 1, 3, 4, 19, 20, 21, 82, 88, 113, 117, 119, 160, 164, 194, 197, 242, 334, 434, 437, 463, 505, 511, 552, 553, 567, 572, 588, 596, 603, 610, 613, 642, 644, 661, 662, 663, 664, 692, 704, 717, 736, 737, 738, 741, 746, 752, 757, 784, 856, 882, 887, 894, 895, 902, 908, 910, 947, 956, 998, 1011, 1016, 1020, 1025, 1027, 1040, 1041, 1045, 1050, 1064, 1076, 1086, 1091, 1093, 1099, 1116, 1122, 1124, 1127, 1137, 1139, 1152, 1156, 1158, 1164, 1182, 1190, 1193, 1195, 1197, 1198, 1213, 1223, 1225, 1240, 1246, 1249, 1262, 1273, 1276, 1293, 1294, 1295, 1314, 1317, 1325, 1331, 1339, 1345, 1348, 1357, 1362, 1363, 1364, 1372, 1391, 1397, 1400, 1406, 1416, 1417, 1424, 1428, 1433, 1434, 1435, 1445, 1449, 1464, 1468, 1507, 1537, 1547, 1553, 1558, 1576, 1582, 1587, 1606 |

| வரிசை எண் | பிறர் கூற்றைச் சுட்ட தொல்காப்பியர் பயன் படுத்தும் தொடர் | நூற்பா/நூற்பாக்கள் |
|---|---|---|
| 8 | என்ப அறிந்திசினோரே | 643 |
| 9 | என்ப உணர்ந்திசினோரே | 1358 |
| 10 | என்ப உணருமோரே | 193 |
| 11 | என்ப குறியறிந்தோரே | 993 |
| 12 | என்ப சிறந்திசினோரே | 295 |
| 13 | என்ப வாய்மொழிப்புலவர் | 1332 |
| 14 | என்மனார் | 484 (2), 556, 558, 560, 562, 566 |
| 15 | என்மனார் புலமையோரே | 369 |
| 16 | என்மனார் புலவர் | 6, 33, 53, 130, 146, 158, 178, 222, 272, 283, 288, 331, 333, 353, 413, 432, 474, 478, 483, 521, 564, 569, 576, 609, 633, 641, 649, 689, 709, 716, 723, 726, 760, 773, 841, 879, 886, 952, 957, 969, 999, 1021, 1029, 1043, 1047, 1053, 1095, 1096, 1113, 1118, 1125, 1133, 1141, 1153, 1170, 1192, 1220, 1260, 1336, 1374, 1386, 1456, 1577, 1604 |
| 17 | என்மனார் வயங்கியோரே | 624 |
| 18 | என்றல் | 1563 (7) |
| 19 | என்றிசினோரே | 1261 |
| 20 | எனச் சொல்லினர் புலவர் | 1586 |
| 21 | என நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே | 1411 |
| 22 | எனப்பட்ட | 164, 170 |
| 23 | எனப்படுப | 603, 643, 734 |
| 24 | எனப்படுமே | 1289, 1292 |
| 25 | எனப்படுவது | 683, 950, 962, 1088, 1422, 1595 |
| 26 | எனப்படுவோள் | 1070 |
| 27 | எனமொழிதல் புலவராறே | 1355 |
| 28 | எனமொழிதல் மறையோ ராறே | 1442 |

| வரிசை எண் | பிறர் கூற்றைச் சுட்ட தொல்காப்பியர் பயன் படுத்தும் தொடர் | நூற்பா/நூற்பாக்கள் |
|---|---|---|
| 29 | என மொழிப | 8, 9, 11, 33, 76, 105,106, 153, 157, 159, 170, 191, 210, 224, 251, 258, 361, 368, 381, 398, 418, 455, 508, 546, 593, 684, 766, 922, 953, 961, 964, 1014, 1031, 1036, 1046, 1055, 1074, 1078, 1119, 1150, 1151, 1157, 1168, 1172, 1179, 1207, 1208, 1209, 1210, 1211, 1212, 1245, 1255, 1275, 1291, 1296, 1297, 1300, 1320, 1340, 1344, 1356, 1360, 1365, 1377, 1384, 1385, 1389, 1392, 1420, 1429, 1457, 1466, 1490, 1501, 1549, 1581, 1585 (2) |
| 30 | எனமொழிப இயல்-புணர்ந்தோரே | 950 |
| 31 | எனமொழிப உணர்ந்திசினோரே | 601 |
| 32 | எனமொழிப உயர் மொழிப் புலவர் | 1426 |
| 33 | எனமொழிப தொன் மொழிப் புலவர் | 1494 |
| 34 | எனமொழிப நுணங்கு மொழிப் புலவர் | 1598 |
| 35 | எனமொழிப புலன்நன் குணர்ந்த புலமையோரே | 958 |
| 36 | எனமொழிப புலனுணர்ந் தோரே | 1497 |
| 37 | எனமொழிப யாப்பறி புலவர் | 1335 |
| 38 | எனமொழிமனார் | 660 |
| 39 | எனமொழிமனார் புலவர் | 747, 904 |
| 40 | என யாத்தனர் புலவர் | 1600 |
| 41 | கிளப்ப | 604 |

| வரிசை எண் | பிறர் கூற்றைச் சுட்ட தொல்காப்பியர் பயன் படுத்தும் தொடர் | நூற்பா/நூற்பாக்கள் |
|---|---|---|
| 42 | கிளவார் | 524, 529, 769, 1343 |
| 43 | கூறலும் மரபே | 1159 |
| 44 | கூறுப | 1512 |
| 45 | கெடலரும் மரபு | 1188 |
| 46 | கொள்ப தெளியுமோரே | 638 |
| 47 | சொல்லிய முறை | 951 |
| 48 | சொல்லியல் புலவரது... என்ப | 1357 |
| 49 | தெரிந்தனர் | 1359 |
| 50 | தெரிப உணருமோரே | 580 |
| 51 | தெரியுமோர்க்கே | 585 |
| 52 | தெளியுமோரே | 638 |
| 53 | தொடை உணர்வோர் | 1326 |
| 54 | தொன்னெறி மரபின | 594 |
| 55 | நல்லிசைப் புலவர்... வகுத்துரைத்தனரே | 1259 |
| 56 | நாடினர் கொளினே | 1566 |
| 57 | நிலைக்குரி மரபு | 1319 |
| 58 | நுண்ணிதன் உணர்ந்தோர் கண்டவாறே | 7 |
| 59 | நுதலிய நெறியின | 1593 |
| 60 | நுனித்தகு புலவர் கூறிய நூலே | 1610 |
| 61 | நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே | 1526 |
| 62 | பாங்குற உணர்ந்தோர் | 1308 |
| 63 | வல்லோர் ஆறே | 1268 |
| 64 | வரையார் | 140, 145, 212, 265, 421, 526, 528, 587, 722, 733, 776, 885, 891, 920, 943, 1062, 1174, 1284, 1287, 1323, 1326, 1453, 1509, 1515, 1579 |
| 65 | வழக்கியல் மரபே | 731 |

## இணைப்பு: 5/2

# திருக்குறளில் முன்னோர் மொழி பொருள்கள்

### என்ப

மங்கலம் என்ப மனைமாட்சி — 60

தம்பொருள் என்பதம் மக்கள் — 63

அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு — 73

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றார் எய்தும் சிறப்பு — 75

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை — 76

அறிவினுள் எல்லாம் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல் — 203

வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின் — 238

மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க் கில்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை — 244

உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிருடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர் — 330

அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து — 361

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு — 392

மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள் — 617

கல்லா தவரின் கடையென்ப கற்றறிந்தும்
நல்லார் அவையஞ்சு வார் — 729

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் தலை — 736

பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து — 738

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு — 739

பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு — 773

இகலென்ப எல்லா உயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய் — 851

ஆயும் அறிவினர் அல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு — 918

நகையீகை இன்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு — 953

கடனென்ப நல்லவை எல்லாம் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு — 981

எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு — 991

### என்பர்

பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார் — 246

ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறென்பர் ஆய்ந்தவர் கோள் — 662

### என்பார்

அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்
அற்றாக அற்ற திலர் — 365

### எனப்படுவர்

கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார் — 722

### நூலும் நுவல்வும்

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு — 21

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும் — 183

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை — 322

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை அதுவுலகத்
தெப்பால்நூ லோர்க்கும் துணிவு — 533

உயர்வகலம் திண்மை அருமையிந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல் — 743

மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று — 941

### நல்லார் நடையியல்

சிறப்பீனும் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள் — 311

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள் — 312

வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள் — 646

ஈன்றாள் பசிகாண்பான் ஆயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை — 656

**உலகு**

கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு — 117

வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன் றுலகு — 612

எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு — 670

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும் உலகு — 809

அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதின்மை
இன்மையா வையா துலகு — 841

உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும் — 850

இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழு தேத்தும் உலகு — 970

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு — 994

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்
குறைபதி என்னும் உலகு - 1015

# 6

# பழங்கதை மரபு

## 6.1 தொல்காப்பியமும் பழங்கதை மரபும்

தொல்காப்பியம் வனப்புகள் எட்டெனக் கூறி, ஒவ்வொன்றையும் தனித்தனியே வரையறுக்கின்றது. அவற்றுள் ஒன்று **தொன்மை.** தொல்காப்பியம் தொன்மைக்கு இலக்கணம் வரையறுக்கையில்,

> தொன்மை தானே சொல்லுங் காலை
> உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே (தொல். 1493)

எனக் கூறுகிறது. தொல்காப்பிய வரையறையின்படி, தொன்மை இருவகைப் பண்புகளை உள்ளடக்கியது: 1. உரையொடு பொருந்தி வருவது; 2. பழையதாகிய பொருளை—பழங்கதைகளைச் செய்யுளாக்கிப் பாடுவது.[1] தொன்மைக்கு எடுத்துக்காட்டுகளாக இராம சரிதம், பாண்டவ சரிதம் என்னும் இரு நூல்களை இளம்பூரணர் சுட்டுவதும் இங்குக் கருதத்தக்கதே.[2] இதனால் பழங்கதைகளைச் செய்யுளாக்கிப் பாடும் மரபு, பண்டைய மரபு என்பது வெளிப்படை.

## 6.2 தொகை நூல்களும் பழங்கதை மரபும்

சங்கத் தொகை நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றுள் பழங்கதையை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்ட தனிச்செய்யுள்கள் இல்லை; பழங்கதைகளைத் தனிச் செய்யுள்களாக்கிப் பாடும் மரபு சங்க காலத்தில் வழக்கிழந்திருக்க வேண்டும்; அல்லது, தொகை செய்தவர்கள் அத்தகைய செய்யுள்களை விலக்கியும் இருக்கலாம். எனினும், கடவுளரின் சிறப்புகளை எடுத்துரைக்கும் போக்கில் திருமுருகாற்றுப்படையும் பரிபாடலில் செவ்வேள், திருமால் குறித்துவரும் பாடல்களும் இடம் பெற்றிருக்கக் காணலாம். இஃது பிற்பட்ட நிலையே.

பழங்கதைகளைத் தனிப்பாடல்களாக அமைத்துச் செய்யுள் செய்யும் மரபு சங்க இலக்கியங்களில் தொடக்கத்தில் இடம் பெறவில்லை என்றாலும், அகத்திணை புறத்திணைப் பாடல்களின் இடையிடையே பழங்கதைக் குறிப்புகள் சில இடம் பெற்றுள்ளன. அவை பெரும் பான்மையும் உவமைகளாகவே அமைந்துள்ளன.

சங்கத் தொகை நூல்களில் இடம் பெற்றுள்ள பழங் கதைக் குறிப்புகளுள் ஒரு சில வருமாறு:

### 6.2.1 பாரதக்கதை

துரியோதனன், பாண்டவர்களை அரக்கு மாளிகையுள் வைத்து எரியூட்டிய செய்தியும், வீமன் அனைவரையும் காப்பாற்றிய செய்தியும்,

வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்
ஐவரென் றுலகேத்தும் அரசர்கள் அகத்தராக்
கைபுனை அரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்கு ..
ஒள்ளுரு அரக்கில்லை வளிமகன் உடைத்துத்தன்
உள்ளத்துக் கிளைகளோ டுயப்போகு வான்போல
(கலி. 25:1-4...7-8)

எனக் கலித்தொகையில் இடம் பெற்றுள்ளன.

பாரதப்போர் பற்றிய செய்திகள் சங்கத் தொகை நூல்களில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளன எனலாம். பெரும்பாணாற்றுப் படையிலும் கலித்தொகையிலும் இச்செய்திகள் பெரிதும் இடம் பெற்றுள்ளன. சில வருமாறு:

ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தவியப்
பேரமர் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர்
ஆராச் செருவின் ஐவர் போல (பெரும். 415-417)

மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குறங்கறுத் திடுவான் போல் (கலி. 52:2-3)

அஞ்சீ ரசையியல் கூந்தற்கை நீட்டியான்
நெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவண்தன்
வஞ்சினம் வாய்த்தானும் போன்ம் (கலி. 101:18-20)

புரிபுமேற் சென்ற நூற்றுவர் மடங்க
வரிபுனை வல்வில் ஐவ ரட்ட
பொருகளம் போலும் (கலி. 104:57-59)

ஆரிரு ளென்னான் அருங்கங்குல் வந்துதன்
தாளில் கடந்தட்டுத் தந்தையைக் கொன்றானைத்
தோளிற் றிருகுவான் போன்ம் (கலி. 101:30-32)

## 6.2.2 திருமால் பற்றிய கதைகள்

அகநானூறு, புறநானூறு, கலித்தொகை ஆகிய வற்றில் திருமால் பற்றிய கதைக் குறிப்புகள் சில இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு:

வடாஅது
வண்புனற் றொழுகை வார்மணல் அகன்துறை
அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போல (அகம். 51:3-6)

அணங்குடை யவுணர் கணங்கொண் டொளித்தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணா
திருள்கண் கெடுத்த பருதி ஞாலத்
திடும்பைகொள் பருவரல் தீரக் கடுந்திறல்
அஞ்சன வுருவன் தந்து நிறுத்தாங்கு (புறம். 174:1-5)

மல்லரை மரஞ்சாய்த்த மலர்த்தண்தார் அகலத்தோன்
ஒல்லாதார் உடன்றோட உருத்துடன் எறிதலின்
கொல்யானை யணிநுதல் அழுத்திய ஆழிபோல்
(கலி. 136:1-3

## 6.2.3 இராமாயணக்கதை

குரங்குகள் சீதையின் நகைகளை மாறி அணிதலும், ஆலமரத்தின் நிழலில் இராமன் தன்னுடைய நண்பர் களுடன் ஆலோசனை நடத்தலும் ஆகிய இராமாயணக் கதைக் குறிப்புகள் முறையே புறநானூற்றிலும் அக நானூற்றிலும் இடம் பெற்றுள்ளன:

கடுந்திறல் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்கு
(புறம். 378:18-22)

வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம் போல (அகம். 70:15-16)

இவ்வாறு, கதைகளை விவரிக்காமல், மக்கள் அறிந்த கதைகளைக் குறிப்பளவில் பாடல்களில் குறிப்பிடும் மரபு திருக்குறளிலும் இடம் பெற்றுள்ளது. இக்குறிப்புகளால்,

கவிஞர்கள் சொல்ல வந்த கருத்துகள் எளிமை படுத்தப் படுகின்றன எனலாம்.

## 6.3 திருக்குறளில் பழங்கதைகள்

திருக்குறளில் உள்ள ஒவ்வொரு குறளும் $1\frac{3}{4}$ அடிகளை அல்லது ஏழு சீர்களைக் கொண்டது; குறள்களில் காணும் குறைந்த அளவு எழுத்தெண்ணிக்கை பதினெட்டு; அதிக அளவு எழுத்தெண்ணிக்கை இருபத்தைந்து. பதினெட்டு எழுத்து முதல் இருபத்தைந்து எழுத்து முடியக் கொண்ட குறட்பாக்களில் ஒரு கதையைச் சொல்லுதல் என்பது முயற்கொம்பே. எனினும், மக்கள் பெரிதும் அறிந்திருந்த கதைகளுள் சிலவற்றைக் குறிப்பாகக் காட்டும் - கோடிட்டுக் காட்டும் உத்தியைக் குறளில் காண முடிகின்றது.

திருக்குறளில் காணும் / கருதப்படும் கதைகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம்:

1. சுருக்கக் குறிப்பினால் தோன்றும் கதைகள்
2. உரை வேறுபாட்டால் தோன்றும் கதை
3. ஊகத்தினால் அறியலாகும் கதைகள்

### 6.3.1 சுருக்கக் குறிப்பினால் தோன்றும் கதைகள்

#### 6.3.1.1 இந்திரன்

நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்தில் 5-வது குறள்,

> ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
> இந்திரனே சாலுங் கரி (குறள். 25)

என்பது; இக்குறளுக்குப் பரிமேலழகர்,

> புலன்களினால் செல்கின்ற அவா ஐந்தினையும் அடக்கினானது வலிக்கு, அகன்ற வானத்துள்ளார் இறைவனாகிய இந்திரனே அமையுஞ் சான்று என்றவாறு

எனப் பொருள் கூறி,

> தான் ஐந்தவியாது சாபமெய்தி நின்று, அவித்தானது ஆற்றல் உணர்த்தினானாகலின், 'இந்திரனே சாலுங் கரி' என்றார்

எனக் குறிப்பும் தருகிறார்.

இக்குறளுக்குப் பல்வேறு கதைகள் எடுத்துக்காட்டு களாகத் தரப்படுகின்றன. அவற்றுள் ஒன்று வருமாறு:

கௌதம முனிவரின் மனைவி அகலிகை. தேவர்களின் தலைவனாகிய தேவேந்திரன் அவள் மீதுபல நாள்களாகக் காதல் கொண்டிருந்தான். தன் எண்ணத்தை நிறை வேற்றிக் கொள்ள அவன் ஒரு சூழ்ச்சி மேற்கொண்டான்.

ஒரு நாள் யாமத்தில், பொழுது விடியுங்காலத்துக் கோழி கூவுவது போலக் கௌதமரின் இருப்பிடத்திற்கு அருகே வந்து கூவினான். கோழியின் குரல் கேட்டார் முனிவர்; காலை புலர்ந்ததெனஎண்ணிக் காலைக் கடன் முடிக்க ஆற்றிற்கு விரைந்து சென்றார். அதுவே தக்க வாய்ப்பு எனக் கொண்ட இந்திரன், கௌதம முனிவரின் உருக்கொண்டான்; முனிவரின் குடிலுக்குள் சென்றான்; அகலிகையுடன் புணர்ச்சி மேற்கொண்டான். அகலிகை யும் தன்னுடன் புணர்வது முனிவர் அல்லர், இந்திரனே என்பதைத் தெளிவாக உணர்ந்தும் அவனை விலக்காது உடன்பட்டிருந்தாள்.

இந்நிகழ்ச்சியை ஞானக்கண்ணால் அறிந்தார் முனிவர்; சினத்தீயுடன் குடிலுக்கு விரைந்தார்; தம் புறக்கண்ணால் உண்மையைக் கண்டார்; அகலிகையைக் கருங்கல் ஆகு மாறு சபித்தார். இந்திரனை, ஆண்குறி இழந்து, உடல் முழுவதும் பெண்குறிகளாகவே ஆகும்படி சபித்தார்.

இக்கதை மட்டுமன்றி, மகாபாரதம் அனுசாசன பர்வதத் தில் (216) கூறப்படும் சியவன முனிவர்-இந்திரன் பற்றிய கதையும், பாரதத்தில் கூறப்படும் மருத்தன் - இந்திரன் பற்றிய கதையும், புராணத்தில் கூறப்படும் நகுடன் பற்றிய கதையும், மகாபாரதத்தில் கூறப்படும் அகத்தியர் - இந் திரன் பற்றிய கதையும் மேற்குறித்த குறளுக்குப் பொருந் தும் கதைகளாகவே அமைகின்றன. குறளில் வரும் ஒரே கதைக் குறிப்புப் பல்வேறு கதைகளையும் கருத்தில் கொண்டதாக விளங்குகிறது; அப் பல்வேறு கதைகளுள் எக்கதையை வள்ளுவர் கருத்தில் கொண்டு உரைக்கின் றார் எனத் துணிய இயலவில்லை.

### 6.3.2 நகுடன்

பெரியாரைப் பிழையாமை என்னும் அதிகாரத்தில் (பரிமேலழகரின் வைப்பு முறைப்படி) ஒன்பதாவது குறளாக அமைவது,

> ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
> வேந்தனும் வேந்து கெடும் (குறள். 899)

என்னும் குறளாகும். இக்குறளுக்குப் பரிமேலழகர், உரை விளக்கச் சிறப்புப் பகுதியில்,

> நகுடனென்பான் இந்திரன் பதம்பெற்றுச் செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியன் வெகுள்வதோர் பிழைசெய, அதனால் சாபமெய்தி, அப்பதம் இடையே இழந்தான் என்பதனை உட்கொண்டு, இவ்வாறு கூறினார்

என்பார்.[2] அக்கதை வருமாறு:

நகுடன் என்பவன் சந்திர குலத்து அரசன்; நூறு அசுவமேத யாகங்கள் செய்து இந்திரப் பதவி பெற்றான். அப்பதவியில் அமர்வதற்காகச் சிவிகையில் ஏறிச் சென்றான். சிவிகையை அகத்தியர் உள்ளிட்ட ஏழு முனிவர்கள் சுமந்து சென்றனர். நகுடனுக்கு இந்திராணி மேல் காதல் மிகுந்தது; காமம் காழ்க் கொண்டது; அகத்தியரோ குள்ளமானவர்; ஆகையால் சிவிகையைச் சுமந்து கொண்டு மெல்ல நடந்து வந்தார்; காமம் மிக்க நகுடன் அகத்தியரை நோக்கி விரைவில் செல்க என்பான் 'ஸர்ப்ப ஸர்ப்ப' (ஓடு ஓடு) என்றான். அகத்தியர் உண்மை உணர்ந்தார்; வெகுண்டார்; 'நீ ஸர்ப்பமாவாயாக' எனச் சபித்தார். உடனே நகுடன் இந்திரப் பதவி இழந்தான்: பாம்புருவானான்; நிலத்தில் கிடந்தான் என்பது புராணக்கதை.

### 6.3.3 அடியளந்தான்

பொருட்பாலில் மடியின்மை என்னும் அதிகாரத்தில்,

> மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
> தாஅய தெல்லாம் ஒருங்கு (குறள். 610)

என்னும் குறள் இடம் பெற்றுள்ளது. இக்குறளில் வரும் 'அடியளந்தான் தாஅய தெல்லாம்' எனவரும் தொடர்,

திருமாலின் குறுவடிவப் பிறப்பைக் குறிப்பிடுகின்றது என்பர். அக்கதைச் சுருக்கம் வருமாறு :

மாவலி என்னும் ஓர் அரசன் விண்ணுலகையும் மண்ணுலகையும் தன் வயப்படுத்திக் கொண்டு ஒரு பெரிய வேள்வி செய்தான்; அவ்வேள்வியின்போது வருவார் போவார்க்கெல்லாம் வரையாது தானங்களை வாரி வழங்கினான். அப்போது திருமால், காசிப முனிவருக்கும் அதிதி என்பாளுக்கும் குறுகிய உருவம் கொண்ட பிள்ளையாகப் பிறந்து, அம் மாவலி இடத்துச் சென்றான்; மூன்றடி மண்ணை இரவலாகக் கேட்டான். மாவலியும் இசைந்து, 'பெற்றுக்கொள்' என்றான். திருமால் நெடிய உருவம் கொண்டு, விண்ணுலகை ஓரடியாலும் மண்ணுலகை ஓரடியாலும் அளந்து, மற்றோர் அடியை அம் மாவலியின் தலையில் வைத்து அழுத்தி, அவனைக் கீழ் உலகுக்குப் போகும்படி செய்தான்.

இவ்வாறு, சுருக்கக் குறிப்பினைப் பெற்றுவரும் குறள்கள் ஒரு சிலவே.

## 6.4 உரை வேறுபாட்டால் தோன்றும் கதை

நீத்தார் பெருமையில் வரும்,

> ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
> இந்திரனே சாலுங் கரி (குறள். 25)

என்னும் குறட்பாவிற்குப் பரிமேலழகர் கூறிய உரையையும் அதற்கொப்ப வழங்கும் கதையையும் முன்னர் அறிந்தோம். இக்குறட்பாவிற்கு,

> ஐம்பொறிகள்வழி எழும் ஐவகை உணர்ச்சிகளையும் பயன்படுத்தியவனுடைய வலிமைக்கு, இத்தகைய பண்பினால் அகன்ற வானுலகத்தாரின் தலைவனாக இருக்கின்ற இந்திரனே எடுத்துக்காட்டு ஆவான்

எனப் பொருள் கொள்வாரும் உளர்.[3] இவ்வாறு பொருள் கொள்பவர்கள் பெரும்பான்மையும் சமணச் சமயத் தொடர்புடையவர்களே. இவ்வுரைக்கு ஏற்ப வழங்கப் படும் கதையின் சுருக்கம் வருமாறு :

இறைவன் ஞானப் பேரொளியாய் நின்றான்; இந்திரன் அவனைக் கண்டான்; பெருமகிழ்வு கொண்டான். இறைவனின் பேரொளியை முழுமையாகக் காணத் தனக்கு இருகண்கள் போதாவென உணர்ந்தான்; ஆயிரங் கண்களால் அவனுடைய பேரொளியைக் கண்டு மகிழ வேண்டும் என விழைந்தான். எண்ணிய எண்ணியவாறு எய்தும் ஆற்றல் வாய்க்கப் பெற்ற இந்திரன், தன் உடலெங்கும் கண்களை உண்டாக்கிக் கொண்டான்; இறைவனை உளங்குளிரக் கண்டு மகிழ்ந்தான். இக் காட்சியைக் கண்ட புலவர் பெருமக்கள் இந்திரனை ஆயிரம் கண்ணுடையான் எனப் புகழ்ந்து வாழ்த்தினர். ஐந்தவித்தானாகிய இந்திரனின் ஆற்றலுக்கு இந்நிகழ்ச்சி ஓர் அரிய சான்றாக அமைகின்றது.[4]

இக்கதை முன்னர்க் கூறிய கதையொடு மாறுபட அமைந்திருப்பது நோக்கத்தக்கது.

## 6.5 ஊகத்தினால் அறியலாகும் கதைகள்

குறளில் எவ்விதக் கதைக் குறிப்புகளும் இல்லா நிலையிலும், வள்ளுவர் ஒரு சில பழங்கதைகளை/நிகழ்ச்சிகளை நினைவு கொண்டு, அவற்றின் அடிப்படையில் ஒருசில அறக்கருத்துகளை வகுத்திருக்கலாம் என்று ஊகிக்கவும் இடமுளது.

சான்றாக,

...... ...... ...... அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு (குறள். 72)

என்னும் குறள் தொடருக்கு உரை விளக்கம் தருகையில்,

> என்பும் உரியராதல், "தன்னகம் புக்க குறுநடைப் புறவின், தபுதி யஞ்சிச் சீரை புக்கோன்" முதலா யினார்கட் காண்க

என்பார் பரிமேலழகர். இங்குப் பேரரசர் சிபியின் கதை கருத்தில் கொள்ளப்பட்டுள்ளதாகக் கருதுகின்றார் பரிமேலழகர். இக்குறள் தொடருக்குத் ததீசி முனிவர் கதையையும், தன்னுடன் பிறந்த குண்டலங்களை இந்திரனுக்கு ஈந்த கர்ணன் கதையையும் எடுத்துக் காட்டுகளாகக் கொள்ளலாம்.

திருக்குறளில் வரும் பல குறள்களுக்கு இவ்வாறு ஊகக்கதைகள் கொள்ளலாம். ஆனால், அக்கதைகளை வள்ளுவர் கருத்தில் கொண்டிருப்பாரா எனத் துணிந் துரைக்க இயலாது.

## 6.6 ஆய்வு முடிவுகள்

1. தொல்காப்பியர் காலத்தில் பழங்கதைகளைச் செய்யுளாக்கிப் பாடும் மரபு இருந்துள்ளது. வனப்புகளுள் ஒன்றான 'தொன்மை' தக்க சான்றாக அமைகின்றது.

2. சங்க இலக்கியங்களில் முற்பட்டனவாகக் கருதப் படும் நூல்களில் பழங்கதைகளைத் தனிப்பாடல்களாக அமைத்துச் செய்யுள் செய்யும் மரபு காணப்படவில்லை. தொகை செய்தவர்கள் அவ்வகைப் பாடல்களை விலக்கி யும் இருக்கலாம். பெரிதும் உவமை வழியே பழங்கதை களை அல்லது கதைக் குறிப்புகளைக் குறிப்பிடும் மரபே அவற்றுள் காணப்படுகின்றது. பாரதம், பாகவதம், இராமாயணம் ஆகியவற்றுள் இடம் பெறும் கதைகளின் குறிப்புகள் சங்க இலக்கியங்களில் வெளிப்படுகின்றன. சங்க நூல்களில் அருகிய வழக்காக விளங்கிய இம்மரபு குறளிலும் அருகிய நிலையில் பின்பற்றப்பட்டுள்ளது.

3. குறள் வழியே பெறப்படும் கதைகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1) கதைக் குறிப்பினால் கிடைக்கும் கதைகள் 2) குறளுக்குரிய உரை வேறு பாட்டால் கிடைக்கும் கதைகள் 3) ஊகத்தினால் அறிய லாகும் கதைகள். மொத்தத்தில் கருத்துகளில் எளிமை யூட்டும் நோக்கொடு ஒருசில கதைக் குறிப்புகளை வள்ளுவர் குறளிடை வழங்கி, பழைய மரபிற்கு வழிவிடு கின்றார் எனலாம். திருக்குறள் கருத்திற்குத் துணை நிற்கவே இக்கதைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## குறிப்புகள்

1. காண்க : இணைப்பு 6/1

2. 'சொன்ன தவமும் ஞானமும் முதலியவற்றான் மிக்க கோட்பாட்டை உடைய பெரியோர் சீறுவர் ஆயின், அரசனும் தனது வாழ்க்கை இடையே முரிந்து கெட்டு விடும் என்றவாறு. வேந்தனும் என்ற உம்மை சிறப்பும்மை. ஆகலான் [மேற்சொன்ன] நாடும் பொருளும் பெரும்படையும் உடையவர் [எனினும்] கெட்டுவிடும் என்றவாறு.'

   — காலிங்கர், *திருக்குறள் உரைக்கொத்து, பொருட்பால்*, ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள், 1959, ப. 184.

3. ஜீவபந்து T. S. ஸ்ரீபால், *திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதி பகவன்*, திருத்தக்க தேவர் இலக்கிய மன்றம், சென்னை, 1959, ப. 14.

4. 'தவரூபஸ்ய சௌந்தர்யம் திருஷ்டியாதிருப்திம் ஆனாயிவான் ஹய க்ஷ: சக்ர சஹஸ்ரீக்ஷ: பபூப பஹூ விஸ்வமய:

   (இ - ள்) இறைவனே ! தவத்தாலுயர்ந்து ஞான ஒளி வீசும் நினது பேரழகினைத் தனது இரு கண்களால் பருகியும் திருப்தியடையாத இந்திரன், பலரும் வியக்கத்தக்க முறையில் ஆயிரங் கண்களை யுண்டாக்கிக் கொண்டு உன்னைப் போற்றி வழிபடுகிறான்.'

   — ஜீவபந்து T. S. ஸ்ரீபால், மு. நூ., ப. 15.

## இணைப்பு 6/1

### இந்திரன் தொடர்பான கதைகள்

**கதை : 1**

ஒரு சமயம் சியவனர் என்னும் முனிவர் அசுவினீ தேவதைகளுக்குச் சோம யாகத்தில் பங்கு தருவதாகக் கூறினார். இந்திரன் அதை மறுத்தான். முனிவர் இந்திரனைப் பொருட்படுத்தாமல் தேவதைகள் இருவரையும் நோக்கி மந்திரப் பூர்வமாக சோமத்தைத் தந்தார்; வெகுண்ட இந்திரன், பெரிய மலையுடனும் வச்சிராயுதத்துடனும் வேள்வியின்கண் தோன்றினான்; முனிவர், நீரைத் தெளித்து மலையை அசைவு அற்று இருக்கச் செய்து, இந்திரனைக் கொல்ல மந்திர சக்தியால் மதன் என்னும் ஒருவனை உண்டாக்கினார்; அவனைப் பார்த்து தேவர்கள் எல்லாரும் அஞ்சினர்; இந்திரனிடம் சென்று முறையீடு செய்து சினம் தணிய வேண்டினர். இந்திரன் அசுவினீ தேவதைகளுக்கும் வேள்வியில் பங்குண்டு என்பதை ஒத்துக் கொண்டான். முனிவரின் ஆற்றல் வெளிப்பட்டது. இவ்வாறு மகாபாரதம், அனுசாசன பர்வ தத்தில் (261) கூறப்படுகிறது.

**கதை : 2**

ஒரு சமயம், மருத்தன் என்ற அரசன் பிரககுபதியின் தம்பியாகிய சம்வர்த்தரைக் கொண்டு வேள்வி செய்யத் தொடங்கினான்; அதைக் கேள்வியுற்ற இந்திரன், சம்வர்த்தரை விட்டுவிட்டு பிரககுபதியையே கொண்டு வேள்வி செய்ய வேண்டும் என மருத்தனுக்கு தூதனுப்பினான். மருத்தன் அதற்கு இணங்கவில்லை; சம்வர்த் தரைக் கொண்டே வேள்வியைத் தொடர்ந்தான். தன் சொல்லை மீறி மருத்தன் வேள்வி இயற்றுவதால் வெகுண்ட இந்திரன் பல்வேறு இடையூறுகளைச் செய் தான்; இறுதியில் சம்வர்த்த முனிவரின் ஆற்றலால் இந்திரன் சினம் தணிந்து தேவர்களுடன் வந்து வேள்வி யுணவைப் பெற்றுக் கொண்டான் என்பது பாரதம்.

**கதை : 3**

ஆற்றலில் மிக்கவரான அகத்தியர் பன்னிரண்டு ஆண்டுகளில் முடியக் கூடிய வேள்வி ஒன்றைத் தொடங்கினார்; அவருக்கு இடையூறு செய்யக் கருதிய இந்திரன், உலகில் மழை பெய்யாதிருக்கும்படிச் செய்தான்.

> தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
> வானம் வழங்கா தெனின் (குறள். 19)

என்பது வள்ளுவம் அன்றோ? இந்திரனின் வஞ்சனையைக் கண்ட அகத்தியர், தம்முடைய தவத்தின் ஆற்றலால் தாமே இந்திரன் ஆவதாகக் கூறினார்; அது கண்டு அஞ்சிய இந்திரன், தேவர்களொடு நேரில் வந்து, மழையைப் பெய்யச் செய்து, வேள்வியை நடத்தினான் என்பது மகாபாரதம்.

**இணைப்பு :** 6/2

## ஊகத்தினால் அறியலாகும் கதைகள்

**சிபி**

சூரிய குலத்தில் பிறந்தவர் சிபி சக்கரவர்த்தி. ஒரு நாள் பூஞ்சோலை ஒன்றில் உலாவிக் கொண்டிருந்தார். அவருடைய மேன்மை குணத்தைச் சோதிக்க எண்ணினான் இந்திரன்; இந்திரன் பருந்தாகவும், எமன் சிறு புறாவாகவும் உருக் கொண்டனர்; பருந்து புறாவைத் துரத்தியது; துரத்தப்பட்ட புறா சிபியைச் சரணடைந்தது. சிபியும் அதற்குப் பாதுகாப்பு அளித்தார். பின்னால் பறந்துவந்த பருந்து சிபியை அணுகி, 'என்னால் துரத்தப்பட்ட இரை எனக்கே உரியது; அதை எனக்குக் கொடுத்துவிடு' என்றது. மன்னவர் மறுத்தார் ; 'அடைக்கலம் அடைந்தாரை ஆதரியாமல் விடுவது அறமன்று; இதையன்றி வேறு என்ன கேட்பினும் இதற்கு ஈடாகத் தருகிறேன்' என்றார். உடனே பருந்து, 'இந்தப் புறாவின் எடையளவான தசையை உன் உடலில் இருந்து அரிந்து தர வேண்டும்' என்றது; வேந்தரும் ஒப்புக் கொண்டார். உடலில் ஒவ்வொரு பகுதியாக அரிந்து, துலாக்கோலில் வைத்தும் எடை குறைந்தது. அதனால்,. இறுதியாகத் தாமே துலாக்கோலில் ஏறி அமர்ந்து கொண்டார்.

எடை சரியாயிற்று. உடனே பருந்தாக உருவேற்றிருந்த இந்திரனும் சிறிய புறாவாக உருவேற்றிருந்த எமனும் தம் பழைய உருக்கொண்டனர். சிபியின் பெருந் தன்மையைக் கண்டு வியந்தனர்; வாழ்த்தினர்; வேண்டும் வரமளித்து நீங்கினர் என்பது புராணக்கதை. இக்கதை,

அன்புடையார், என்பும் உரியர் பிறர்க்கு (குறள். 72)

என்னும் தொடர்க்கருத்துள் உணர்த்தப் பெறுகின்றது எனக் கருத இடமுளது.

### ததீசி முனிவர்

மேற்சுட்டிய குறள் தொடர்க் கருத்திற்கு மற்றொரு கதையையும் கருத இடமுளது. அக்கதை வருமாறு :

ஒரு சமயத்தில் தேவர்களும் அசுரர்களும் ஒன்றுகூடி அமுதம் பெறும் பொருட்டுத் திருப்பாற்கடலைக் கடையச் சென்றார்கள். அப்போது திருமாலின் கட்டளைப்படி, அவர்கள் தங்கள் படைக்கலன்களையெல்லாம் கங்கை ஆற்றங்கரையில் தவம் செய்து கொண்டிருந்த ததீசி என்னும் முனிவரிடத்தில் அடைக்களமாக வைத்துவிட்டுப் போனார்கள். சந்திரனை நடுத்தறியாகவும், மந்தர மலையை மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பைக் கயிறாக வும் பூட்டிக் கடலைக் கடைந்தார்கள்; தேவர்களுக்கு மட்டும் அமிர்தம் கிடைத்தது. அமிர்தம் கிடைத்ததால் தேவர்கள் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர்; அமிர்தம் கிடைக்காததால் அசுரர்கள் துன்பக் கடலில் மூழ்கினர். தேவர்கள் தாம் பெற்ற மகிழ்ச்சியாலும், அசுரர்கள் தாம் பெற்ற வருத்தத்தாலும் முனிவரிடம் அடைக் கலமாகக் கொடுத்த படைக்கலன்களைத் திரும்பப் பெறாமலேயே திரும்பி விட்டனர். ததீசி முனிவர் சில ஆண்டுகள் வரை அடைக்கலப் பொருள்களுடன் காத் திருந்தார்; ஒருவரும் வரவில்லை. பின்னர் அந்தப் படைக்கலன்களை எல்லாம் தவ வலிமையால் ஒன்றாக விழுங்கித் தவம் செய்யத் தொடங்கினார். அவருடைய தவப் பெருமையினால் எல்லாப் படைக்கலங்களும் உருகி அவர் முதுகெலும்போடு பிணைந்து கலந்து விட்டன.

வெகு காலத்திற்குப் பின், இந்திரன் விருத்திரன் என்னும் கொடிய அரசனுடன் சண்டையிட்டுத் தோல்வி

யடையவே, அவனைக் கொல்வதற்குப் புதிய 'வஜ்ராயுதம்' ஒன்றைச் செய்ய விரும்பினான். ததீசி முனிவரின் முதுகெலும்பினால் அப்படைக்கலம் செய்யப்பட்டால், விருத்திரனை எளிதில் கொன்றுவிட முடியும் என்று திருமால் இந்திரனுக்குக் கூறினான்.

உடனே இந்திரன் ததீசி முனிவரின் குடிலுக்கு வந்தான்; அவரைப் பணிந்து நடந்ததைக் கூறினான். முனிவரும் அகம் மகிழ்ந்து, தம் உடம்பிலிருக்கும் முதுகெலும்பை எடுத்துக் கொள்ளுமாறு இந்திரனிடம் கூறிவிட்டுத் தம் உயிர் நீத்தார்.

இந்திரனும் அம்முனிவருடைய முதுகெலும்பை எடுத்துப் படைக்கலம் செய்து, விருத்திரனைக் கொன்றான் என்பது பாகவதக் கதை.

# 7
# உவம மரபு

## 7.1 உவமம்

புலவர்கள் தாம் கூறக் கருதிய கருத்துகளையும் உணர்ச்சிகளையும் தெளிவுற/எளிமையுற வெளிப்படுத்துவதற்குப் பயன்படுத்தும் பல்வேறு உத்திகளுள் ஒன்று உவமம் ஆகும்.

உவமம் என்பது உவமை, உவம உருபு, பொதுத் தன்மை, பொருள் என்னும் நான்கு உறுப்புகளைக் கொண்டது.

பவளம் போல் செந்துவர் வாய்

என்னும் உவமத்தை எடுத்துக் கொள்வோம். இதில்,

பவளம் — உவமை

போல் — உவம உருபு

செம்மை — பொதுத் தன்மை

வாய் — பொருள்

உவம உறுப்புகள் நான்கனுள் இடையிரண்டும் அல்லது அவற்றுள் ஏதேனும் ஒன்று வராமல் உவமம் அமைவதும் உண்டு:

| | | |
|---|---|---|
| பவளச் செவ்வாய் | — | உவம உருபு இடம்பெறவில்லை |
| பவள வாய் | — | உவம உருபும் பொதுத்தன்மையும் இடம்பெறவில்லை |
| பவளம் போன்ற வாய் | — | பொதுத்தன்மை குறிக்கப்படவில்லை |

மேற்சுட்டிய நான்கு உறுப்புகளின் முறைவைப்பு மாறி வருவதும் உண்டு:

செம்பவள வாய்

வாய்ப் பவளம்

இவ்வுவமம், வினை பயன் மெய் உரு என்னும் நான்கு வகைப்படும் (தொல். 1222). இவற்றுள் வினை என்பது வினை, வினைக்குறிப்பு என இருவகைப்படும்; பயன் என்பது நன்மை, தீமை என இருவகைப்படும்; மெய் என்பது வடிவம், அளவு என இருவகைப்படும்; உரு என்பது வண்ணம், பண்பு என இருவகைப்படும். சிறப்பு, நலன், காதல், வலி, கிழக்கிடு பொருள் என்னும் ஐந்தையும் நிலைக்களங்களாகக் கொண்டு உவமங்கள் தோன்றுகின்றன என்பார் தொல்காப்பியர் (தொல். 1225, 1226)[1].

## 7.2 உவமமும் நோக்கமும்

புலவர்கள் உவமங்களைப் பயன்படுத்துவதில் பல்வேறு நோக்குகள் உள்ளனவாகக் கொள்ளலாம். இந் நோக்குகள் புலவர்களின் உள்ளங்களில் இருந்தனவா என்பதைத் துணிய இயலாது; என்றாலும், ஒரு சிலர் கீழே கூறும் நோக்கு / நோக்குகள் உடையவர்களாக இருந்திருக்கலாம் என்பதை முழுவதும் விலக்கி விடவும் முடியாது. சான்றாக, வள்ளுவரிடம் காணும் உவமைகளைத் தொகுத்து ஆராயின், சங்க இலக்கியங்களில் இல்லாத அளவு அவர் அறக்கருத்துகளுக்கு ஒரு தனியிடம்-சிறப்பிடம் கொடுத்து இருப்பதை உணரமுடிகின்றது. அறக் கருத்துகளிலேயே நாட்டம் உடையவராக விளங்கிய அவர் அக்கருத்துகளை உவமைகளின் வழியாகவும் வெளிப்படுத்தும் நோக்கு உடையவராக இருந்திருக்கலாம் என்பது முழுமையும் தவறுடைய கூற்று ஆகாது.

சங்கப் புலவர்களிடம் (வள்ளுவர் உட்பட) காணப் படுவனவாகக் கருதத்தக்க நோக்குகள் வருமாறு :

1. பெரும்பாலோர் அறியாத ஒன்றினைத் தெளிவு செய்ய வேண்டிப் புலவர்கள் உவமைகளைப் பயன்படுத்தி இருக்கலாம்.

2. பல்வேறு உணர்ச்சிகளைத் தெளிவுற வெளிப் படுத்துவதற்காக உவமைகளைப் பயன்படுத்தி இருக்கலாம்.

3. கவிதையில் கவிநயம் மிகுவிக்க வேண்டும் என்னும் நோக்கில் உவமங்களைப் பயன்படுத்தி இருக்கலாம்.

4. புலவர்கள் தம் புலமைத் திறத்தை வெளிப்படுத்த உவமங்களைப் பயன்படுத்தி இருக்கலாம்.

5. புலவர்கள், தாம் பெற்ற பல்துறை அறிவுகளை வெளிப்படுத்துவதற்குரிய ஒரு கொள்கலமாக உவமங்களைப் பயன்படுத்தி இருக்கலாம்.

6. இயற்கையில் தோய்ந்த புலவர்கள், தாம் கொண்ட ஈடுபாடுகளை — இயற்கையில் கொண்ட பிணைப்பை உவமங்கள்வழி வெளிப்படுத்த நினைத்து வெளிப்படுத்தி இருக்கலாம்.

7. தமிழர் நாகரிகம் பண்பாடு ஆகியவற்றைப் பெரிதாக மதித்த புலவர்கள்-அல்லது ஒருசில நாகரிகம் பண்பாடுகளைச் சிறப்பிற்கு உரியனவாக மதித்த புலவர்கள், அந்த மதிப்பின் நினைவாக அவற்றிக்கு *உவமவழி நினைவகங்கள்* எழுப்பி இருக்கலாம்.

8. புலவர்கள் தமக்குப் பிடித்த அல்லது தாம் அறிந்த அரசர் சிற்றரசர் வள்ளல்களின் சிறப்புகள், நிகழ்ச்சிகள், நாடு ஊர் பற்றிய சிறப்புகள் ஆகிய வரலாற்றுச் செய்திகளை நெஞ்சில் பெரிதும் போற்றியிருக்கக்கூடும்; பின்பு அவற்றிற்குரிய *பதிவுக் களமாக* அவர்கள் உவமங்களைக் கருதியிருக்கலாம்.

9. புலவர்கள், வள்ளுவரைப் போல அறவுணர்வுடைய அறவாணர்களாக இருப்பின், அவ்வறக் கருத்துகளைப் பொதித்து வைக்கும் புகலிடமாக உவமங்களைக் கருதியும் இருக்கலாம்.

10. சமய உணர்வுடைய புலவர்களாயிருப்பின், சமயக் கருத்துகளையும் புராணச் செய்திகளையும் வெளிபடுத்தும் ஒரு கருவியாக உவமங்களைக் கருதியிருக்கலாம்.

*மேற்கூறிய எல்லாவகை வெளிப்பாடுகளும் பண்டை இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன எனலாம். ஆனால் ஓரளவு, காலத்துக்குக் காலம் மாறுபட்டும் பெருகியும் அருகியும் வந்துள்ளனவாக உய்த்துணர முடிகின்றது; என்றாலும், உறுதியாகக் கூற முடியவில்லை.*

## 7.3 ஒப்புடைய உவமங்கள்

*உவமம் என்பது உவமை, உவம உருபு, பொதுத் தன்மை, பொருள் என்னும் நான்கு உறுப்புகளை*

உடையது எனக் கண்டோம். இவற்றுள் உவமையும் பொருளும் பொதுத்தன்மையும் (பெரும்பான்மை) ஒத்து வரும் உவமங்கள் சங்க நூல்களில் மிகக் குறைவே. ஒத்துவரும் உவமங்களுள்ளும் மகளிர் வருணனையாக அமையும் உவமங்களே பெரும்பகுதி.

மகளிர் வருணனையாக வரும் உவமங்களுள்,

முறுவலுக்கு முத்தையும்,
முகத்திற்கு மதியையும்,
கண்களுக்கு மலர்கள் மானின்பார்வை வேல் ஆகிய வற்றையும்,
மேனிக்குத் தளிரையும்,
தோளுக்கு மூங்கிலையும்,
மணத்திற்கு இயற்கை மணத்தையும்

ஒப்பிடும் உவமங்களே ஒப்புடையனவாக வருகின்றன.

சங்கத் தொகை நூல்களில் அகப்பாடல்களுக்கே சிறப் பாக உரிய இவ்வகை உவமங்கள், குறளில் காமத்துப் பாலில் மட்டுமே இடம்பெற்றுள்ளன என்பதும் குறிப்பிடத் தக்கதாகும். மரபை ஒட்டி அமைந்த ஒருபாலில் மரபை ஒட்டிய உவமங்கள்! — மரபுப் பொருத்தமே.

### 7.3.1 முறுவலும் முத்தும்

வண்ணம், வடிவம் என்னும் இரண்டின் அடிப்படையில் முகை, முத்து, முருந்து, முள், முளை ஆகியவை மகளிரின் பல்லுக்கு (முறுவலுக்கு) உவமையாக்கப்பட்டுள்ளன. சிறப்பு நிலையில் குல்லை, நொச்சி, மவ்வல், முல்லை ஆகியவை உவமையாக்கப்பட்டுள்ளன.[2]

மகளிரின் முறுவலுக்கு முத்தை உவமிக்கும் மரபு மட்டுமே சங்க இலக்கியங்களிலும் திருக்குறளிலும் ஒன்றி வருகின்றது.

| | |
|---|---|
| பலவுறு முத்தின் பழிதீர் வெண்பல் | (பொருந. 28) |
| முத்தின் தகையேய்க்கும் முறுவலாய் | (கலி. 131 : 22) |
| முத்துறழ் முறுவல் | (நெடு. 37) |
| முத்தேர் முறுவலாய் | (கலி. 64:30, 93:11, 97:6) |
| முத்தேர் வெண்பல் | (ஐங். 380:2) |
| முத்தம் முறுவல் | (குறள். 1113) |

திருக்குறள் இவ்வகையில் மரபை அப்படியே பின்பற்றிச் செல்கின்றது.

சங்கத் தொகைநூல்களில், கொற்கை முத்துச் சிறப்பு நிலையில் முறுவலுக்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

கொற்கை முன்றுறை
இலங்குமுத் துரைக்கும் எயிறு (ஐங். 185-2)

கொற்கையம் பெருந்துறை முத்தி னன்ன
நகை (அகம். 27:9-10)

குறளில் இச்சிறப்பு நிலை இடம்பெறவில்லை; இதற்கு அடிப்படைக் காரணம் 1. பொதுமையுறக் கூறல்; 2. சுருங்கக் கூறல் எனலாம்.

### 7.3.2 முகமும் மதியும்

சங்கத் தொகை நூல்களில் மகளிர் முகம் முழுமதி, தாமரை மலர், குவளை மலர் (மிக அருகிய வழக்கு) ஆகியவற்றொடு ஒப்பிடப்பட்டுள்ளது.[3] அகநானூறு, கலித்தொகை, சிறுபாணாற்றுப்படை ஆகிய நூல்களில் மட்டும் மகளிரின் முகத்திற்கு முழுமதி உவமையாக்கப்பட்டுள்ளது; இங்கு வடிவமும் ஒளியும் பொதுத்தன்மைகள். இம்மரபு கலித்தொகையிலேயே ஓரளவு மிகுந்து (7 இடங்கள்) விளங்குகிறது.

திருக்குறளில், மகளிரின் முகத்திற்கு முழுமதியை உவமிக்கும் மரபு மட்டும் இடம்பெற்றுள்ளது.

சங்க இலக்கியங்களில்,

திங்கள் அன்னநின் திருமுகத்து (அகம். 253:25)

அணிமுகம் மதியேய்ப்ப (கலி. 64:1)

எனவும்,

மதிமருள் வாண்முகம் (கலி. 126:21)

தீங்கதிர் மதியேய்க்கும் திருமுகம் (கலி. 15:16)

அகன்மதி
தீங்கதிர் விட்டது போல முகன் (கலி. 56:4-5)

எனவும்,

பெயல்சேர் மதிபோல வாண்முகம் தோன்ற (கலி. 145:6)

எனவும், உணர்த்துமுறை சற்றே வேறுபட வரும் உவமங்கள், முகத்தையும் மதியையும் ஒப்பவே நோக்குகின்றன. முகத்தையும் மதியையும் ஒப்பிடும்போது மதியைவிட முகத்துக்குள்ள சிறப்பை எடுத்துரைக்கும் வகையிலும் மூன்று உவமங்கள் அமைந்துள்ளன:

மையில் மதியின் விளங்கு முகத்தார் (கலி. 52:14)

மதியேக் கறூஉ மாசறு திருமுகம் (சிறு. 158)

நுதலும் முகனும் தோளும் கண்ணும்
இயலும் சொல்லும் நோக்குபு நினைஇ
ஐதேய்ந் தன்று பிறையு மன்று
மைதீர்ந் தன்று மதியு மன்று (கலி. 55:7-10)

இம் மூன்று உவமங்களிலும் மதிக்குக் களங்கம் உண்டு என்பதும், அக்களங்கம் மகளிர் முகத்துக்கு இல்லை என்பதும் வெளிப்படுத்தப்படுகின்றன. இங்கு முருகியலுணர்வு மேலோங்கி நிற்கின்றது:

திருக்குறளில் நான்கு இடங்களில் மகளிர் முகத்துக்கு முழுமதி உவமையாக்கப்பட்டுள்ளது:

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியில் கலங்கிய மீன் (குறள். 1116)

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து (குறள். 1117)

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி (குறள். 1118)

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி (குறள். 1119)

இவற்றுள், 1116-ஆம் குறள், மடந்தை முகனும் மதியும் வடிவால் பொலிவால் ஒப்புடையன என்பதைக் குறிப்பிடுகின்றது; 1117-ஆம் குறள், மதிக்கு மறுவுண்டு, மாதர் முகத்து மறுவில்லை என ஒற்றுமையிடையேயும் உள்ள வேற்றுமையையும் புலப்படுத்துகின்றது. இவ்விரு உவமங்களிலும் முருகியலுணர்வு மேம்பட்டு விளங்குவதை-காதலனின் காதல் வெளிப்பாட்டை உணர முடிகின்றது. ஆனால், 1118-ஆம் குறளில், காதலன் மதியை நோக்கி “மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்..’ என எழுப்பும்

ஐயம் புறநிலை ஒளியைப் பற்றியது அன்று என்பது ஊன்றி அறிவார் உய்த்துணர முடியும். தலைமகள் முகத்திலும் ஒளி உண்டு; மதியிலும் ஒளியுண்டு; இரண்டும் புறவொளிகள்; ஒப்புமை உடையவை. ஆனால், தலை மகளிடம் புறவொளியோடு மற்றொரு ஒளியும் உண்டு; அதுதான் அகவொளி - உள்ளத்தில் கொண்ட உயர்ந்த எண்ணங்களால் / உயர்ந்த பண்புகளால் உயர்ந்து தோன்றும் ஒளி. இவ்வொளி மதிக்கு இல்லை ஆகவே தான், 'மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்' என அவன் துணிந்துரைக்கின்றான்.

அதேபோன்று, 1119-ஆம் குறளில், 'பலர்காண தோன்றல் மதி' எனக் கூறும் போதும், தமிழ்ப் பண்-பாட்டை - ஒருவன் ஒருத்தி என்னும் வாழ்வியல் குறிக் கோளைக் குழைய வைக்கும் நிலையில் உவமம் வெளிப் படக் காண்கின்றோம்.

சங்க இலக்கியங்கள் முருகியலுணர்வு காதலுணர்வு களுக்கு மட்டுமே முதன்மை தந்து மகளிரின் முகத்துக்கு மதியை உவமிக்க, வள்ளுவம் ஒருபடி மேலே சென்று அதே உவமத்தின் வழி உயர்ந்த தமிழ்ப் பண்பாட்டை வெளிப்படுத்துகின்றது என்க. அதாவது உவமக் கலவை யில் தமிழ்ப்பண்பாட்டு மணம் வீசக் காண்கிறோம்.

### 7.3.3 கண்ணும் உவமைகளும்

#### 7.3.3.1 கண்களும் மலர்களும்

வடிவம், நிறம் என்னும் இரண்டின் அடிப்படையில் மகளிரின் கண்களுக்கு மலர்களையும், அவற்றின் இதழ் களையும் ஒப்பிடுவது சங்க இலக்கிய மரபு. ஆயிதழ், நிரையிதழ், பயிலிதழ், பல்லிதழ் என இதழ்கள் கண் களுக்கு உவமை ஆயின. கண்களுக்கு உவமையாக மலர் எனப் பொதுநிலையில் சுட்டுவதே பெருகிய வழக்கு. கருவிளை, குவளை, செங்கழுநீர், தாமரை, நீலம், நெய்தல் முதலிய நீர்மலர்களைக் கண்களுக்கு உவமை யாக்கியது சிறப்பு வழக்காகும். வாட்டமுற்ற மகளிரின் கண்களுக்குக் கொன்றை, நறவம், பித்திகம், பீர் முதலிய நீர்மலர்களை உவமைகளாக்கியுள்ளனர். சில சான்றுகள் :

ஆயிதழ் உண்கண் (கலி. 112 : 24)

பயிலிதழ் மலருண்கண் (கலி. 103 : 60)

பல்லிதழ் உண்கண் (ஐங். 170 : 4)

குவளை யுண்கண் (ஐங். 72 : 3)

ஒண்செங் கழுநீர்க்கண் (அகம். 48 : 8)

தாமரைக் கண் (கலி. 39 : 2)

எழில்நீலத் தேந்தெழில் மலருண்கண் (கலி. 13 : 2)

நெய்தல் உண்கண் (ஐங். 181 : 1)

கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண் (ஐங். 500 : 1)

நயவரு நறவிதழ் மலருண்கண் (பரி. 8 : 75)

மலிபெயற் கலித்த மாரிப் பித்திகத்துக்
கொயலரு நிலைஇய பெயலேர் மணமுகைச்
செவ்வரி நுறமுங் கொழுங்கடை மழைக்கண்
(அகம். 42 : 1-3)

பீரலர் போலப் பெரிய பசந்தன...கண்
(கலி. 143 : 48 . 51)

கண்களுக்கு மலர்களை ஒப்பிடுவதில் குவளையும் நெய்தலுமே பெருவழக்கினவாகக் காணப்படுகின்றன.

திருக்குறளில் மலர் எனப் பொது நிலையிலும் குவளை எனச் சிறப்பு நிலையிலும் கண்களுக்கு மலர்கள் உவமிக்கப்பட்டுள்ளன.

சான்றுகள் :

மலரன்ன கண்ணாள் (குறள்கள். 1119, 1142)

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வேம் என்று (குறள். 1114)

### 7.3.3.2 கண்ணும் பெண்மான் கண்ணும்

பெண்மானின் கண் வடிவையும் மருட்சியையும் பெண்களின் கண்களொடு ஒப்பிடுவது சங்க மரபு:

மானமர் நோக்கம் (குறிஞ். 25)

மயிலியல் மானோக்கின் (பட். 149)

மாதர்கொள் மானோக்கின் மடந்தை (கலி. 69 : 4)

இம்மரபு திருக்குறளிலும் காணப்படுகிறது:

பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாள்
(குறள். 1089)

### 7.3.3.3 கண்ணும் வேலும்

கண்டாரை வாட்டும் கண்ணின் செயலுக்கு வேலினை உவமையாக்கியது சங்க இலக்கியங்களுள் காணும் மரபாகும்:

நுதிவேல் நோக்கின் நுளைமகள் (சிறு. 158)

வேத்தமர்க் கடந்த வென்றி நல்வேல்
குருதியொடு துயல்வந் தன்னநின்
அரிவேய் உண்கண் அமர்த்த நோக்கே
(அகம். 27: 15-17)

இவ்வழக்கு அருகிய வழக்கு; குறளிலும் ஓரிடத்தில் மட்டும் இவ்வுவமம் இடம் பெற்றுள்ளது:

வேலுண்கண் (குறள். 1113)

### 7.3.4 தோளும் வேயும்

மகளிரின் தோளுக்கு வேயினை உவமிக்கும் மரபு சங்க இலக்கியங்களில் பெருகிய வழக்காகக் காணப்படுகிறது:

வேய்புரை மென்தோள் (குறிஞ். 242)

இம்மரபு, குறளில் ஓரிடத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளது:

வேய்த்தோள் (குறள். 1113)

### 7.3.5 மேனியும் தளிரும்

மகளிர் மேனியின் நிறம், பொலிவு ஆகியவற்றிற்குத் தளிரை உவமிப்பது சங்க இலக்கிய மரபு; ஈங்கை, செயலை, மா, யா ஆகியவற்றின் தளிர்கள் சிறப்பு நிலையில் உவமிக்கப்பட்டுள்ளன:

முறிபுரை எழினலம் (அகம். 242 : 8)

தளிர்மேனி (ஐங். 176 : 4)

இம்மரபும் குறளில் ஓரிடத்தில் காணப்படுகிறது:

முறிமேனி (குறள். 1113)

கண், தோள், மேனி ஆகியவற்றிற்கு உவமைகள் கூறுவதில் வள்ளுவம் சங்க இலக்கிய மரபை உள்ளவாறே

பின்பற்றுகின்றது; குறிப்பிடத்தக்க உவமை நுட்ப / மாற்ற நிலைகள் இல்லை. எனினும்,

> முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
> வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு (குறள். 1113)

எனவரும் ஒரு குறளிலேயே 5 உவமங்களை அமைத்திருப்பது (மரபு வழித்தாயினும்) வள்ளுவரின் புலமைக்கோர் அரிய சான்றாக அமைகிறது.

## 7.4 ஒப்பும் நுட்பமும்

சங்கத் தொகை நூல்களிலும் திருக்குறளிலும் ஒத்து வரும் உவமங்களுள் மகளிர் வருணனை இடம் பெறும் உவமங்களே பெருவழக்கு; ஏனைய உவமங்கள் ஒரு சிலவே இடம் பெற்றுள்ளன. இவற்றை, உவமையும் பொருளும் (பொருளளவில்) ஒத்துவரும் உவமம்; உவமையில் ஒத்துப் பொருளில் நுட்ப வேறுபாடு பெற்றுவரும் உவமம்; உவமையும் பொருளும் நுட்ப வேறுபாடுகளுடன் வரும் உவமம் எனப் பிரிக்கலாம்.

### 7.4.1 உவமையும் பொருளும் ஒத்துவரும் உவமம்

கேளிர்க்குக் கண்ணை உவமையாக்கும் மரபு சங்க இலக்கியத்தில் ஓரிடத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளது:

> கண்போல் நண்பின் கேளிர் (புறம். 71 : 15)

இம்மரபு (அருகிய மரபு) குறளிலும் இடம் பெற்றுள்ளது:

> கண்ணன்ன கேளிர் (குறள். 1267)

### 7.4.2 உவமையில் ஒத்துப் பொருளில் நுட்ப வேறுபாடு பெற்றுவரும் உவமம்

நடுவுநிலைமைக்குத் துலாக்கோலை உவமையாக்கும் மரபு சங்க இலக்கியங்களில் நான்கு இடங்களில் காணப் படுகின்றது. அவை வருமாறு:

> ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகி (மது. 491)

> ஞெமன்ன்
> தெரிகோல் அன்ன செயிர்தீர் செம்மொழி
> (அகம். 349 : 3-4)

> ஓர்வுற் றொருதிறம் ஒல்காத நேர்கோல்
> அறம்புரி நெஞ்சத் தவன் (கலி. 42 : 14-15)

தெரிகோல் ஞெமன் போல ஒருதிறம்
பற்ற லிலியரோ (புறம். 6 : 9-10)

இம்மரபு திருக்குறளிலும் ஓரிடத்தில் வந்துள்ளது:

சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி (குறள். 118)

மேற்சுட்டிய ஐந்து உவமங்களிலும் இடம்பெறும் உவமைகள் உணர்த்துமுறை வேறுபாடு பெற்றுப் பொருள்நோக்கு ஒன்றேயாகி உள்ளன. ஆனால் உவமங்களில் இடம்பெறும் பொருள்களில் நுட்ப வேறுபாடுகள் அமைந்துள்ளன.

அகநானூற்றில் வரும் உவமம் தவிர்த்த, பிற உவமங்களில் (மனம் மொழி மெய்களால்) திரிபுபடாமல் நடுநிலை நிற்றல் உணர்த்தப்படுகின்றது. அகநானூற்றில் 'செயிர் தீர் செம்மொழி'யில் திரிபு படாமை குறிக்கப்படுகின்றது. மனம் திரியா நிலையில்தான் மொழி திரியாதாகலின் அங்கும் 'மனம்' மறைமுகமாக உணர்த்தப்படுகின்றது என்றும் கொள்ளலாம்.

### 7.4.3 உவமையும் பொருளும் நுட்ப வேறுபாடுகளுடன் வரும் உவமங்கள்

சங்கத் தொகை நூல்களிலும் குறளிலும் இவ்வகையில் மூன்று உவமங்கள் இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு:

**1. பொறுமைக்கு நிலம் உவமை**

மண்திணிந்த நிலனும்......
போற்றார்ப் பொறுத்தலும் (புறம். 2:1..7)

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை (குறள். 151)

புறநானூற்றில் வரும் உவமத்தில் பொருள் 'போற்றார்ப் பொறுத்தல்'; குறளில் வரும் உவமத்தில் பொருள் 'இகழ்வார்ப் பொறுத்தல்'. போற்றாரைப் பொறுத்தலை விட இகழ்வாரைப் பொறுத்தல் அரியது; பெரியது; பொறுமையுள் பொறுமையாக விளங்குவது.

புறநானூற்றில் வரும் உவமை 'மண்திணிந்த நிலன்'; குறளில் வரும் உவமை 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்'. முதல் நோக்கு அறிவியல்; இரண்டாவது நோக்கு

அறவியல்; இரண்டிலும் அடிப்படை நோக்கு அறவியலே. 'பொருள்'களுக்கு ஏற்ற நிலையில் உவமைகள் மாற்றப் பட்டுள்ளன.

2. உறுதுயர் அஞ்சா உள்ள உரத்தினுக்குப் பகடு உவமை

கானற்
கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்
ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகட் டன்ன எங்கோன்
(புறம். 60 : 6-9)

அச்சொடு தாக்கிப் பாருற் றியங்கிய
பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய
வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ
(புறம். 90 : 6-9)

மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பா டுடைத்து (குறள். 624)

புறநானூற்றின் 60-ஆம் பாடலில் வரும் உவமை ஒரு சிறப்புச் சூழலை (அதாவது கடற்கரையினிடத்துக் கழனியில் விளைந்த உப்பை முகந்து கொண்டு மலை நாட்டை நோக்கிச் செல்லும் வண்டியினை இழுத்துச் செல் கின்ற பகட்டின் உரனை) விளக்குகின்றது. புறநானூற் றின் 90-ஆம் பாடலில் வரும் உவமையில் இச் சிறப்பு நிலை பொதுமை ஆக்கப்பட்டுள்ளது. இந்தப் பொதுமை நிலையே குறளில் மிகச் சுருக்கம் பெறுகின்றது. குறளில் வரும் உவமைக்குப் புறநானூற்றில் வரும் இரு உவமைகளும் தக்க விளக்கங்களாக அமைந்துள்ளன.

புறநானூற்றில் வரும் உவமைப் பொருள்கள் இரண் டும் எத்தகைய இடரையும் வெற்றிக் கொள்ளும் உள்ளத் திண்மையை மறைமுகமாகக் குறிப்பிடுகின்றன. குறள், பகடன்னான் உற்ற துன்பமே துன்பப்படும் என நய மாகக் கூறிக் கருத்திற்கு வலிமையும் பொலிவும் சேர்க் கின்றது.

3. ஒப்புரவாளனிடம் செல்வம் சேர்வதற்கு ஊர் நடுவே பயன் மரம் பழுத்தல் உவமை

முன்னூர்ப் பழுனிய கோளி யாலத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே என்மகன்
வளனும் செம்மலும் எமக்கு (புறம். 254 : 7-9)

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின் (குறள். 216)

புறநானூற்றில் உவமையும் பொருளும் ஒரு சிறப்புச் சூழலை உள்ளடக்கியுள்ளன; குறளில் அவ்விரண்டும் பொதுமையான சூழலைப் பெற்றுள்ளன.

## 7.5 'பொருள்' வேறுபடும் உவமங்கள்

### 7.5.1 *மதி*

திங்கள் புலவர்களைக் கவர்ந்த ஓர் உவமைப் பொருளாகும். அதன் பல்வகை வடிவங்களும் இயல்புகளும் சங்க இலக்கியங்களில் உவமைகளாக எடுத்துக்காட்டப் பட்டுள்ளன.[5] அவற்றுள் வளர்பிறை, தேய்மதி, அரவு சேர் மதி ஆகியவை உவமைகளாக இடம் பெற்றுள்ள உவமங்கள் ஒப்பு நோக்கற்குரியவை.

#### 7.5.1.1 *வளர்பிறை*

மாங்குடி மருதனார், தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை வாழ்த்தும்போது,

வியன்கண் முதுபொழின் மண்டிலம் முற்றி
அரசியல் பிழையா தறநெறி காட்டிப்
பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது
குடமுதல் தோன்றிய தொன்றுதொழு பிறையின்
வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்
(மது. 190 – 194)

என வாழ்த்துகின்றார். இந்த வாழ்த்துப் பகுதியில் பிறை நாள்தோறும் வளர்வது போல, நெடுஞ்செழியனின் கொற்றம் வழிவழியாகச் சிறக்க வேண்டும் என ஒப்பிட்டுக் கூறுகின்றார் புலவர்.

குறுந்தொகை 289-ஆம் பாடலில் நாள்தோறும் வளரும் பிறை, துன்பத்தைத் தரும் காமநோய் நாள்தோறும் வளர்ந்து பெருகுவதற்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

வளர்பிறை போல வழிவழிப் பெருகி
இறைவளை நெகிழ்த்த எவ்வ நோய்
(குறுந். 289 : 1-2)

என்பது அவ்வுவமம்.

கொற்றம் வழிவழியாகச் சிறப்பதற்கும், காமநோய் நாள்தோறும் வளர்ந்து பெருகுவதற்கும் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ள வளர்பிறை, திருக்குறளில் நல்லவர்களின் நட்பு நாள்தோறும் வளர்வதற்கு உவமையாக்கப் பட்டுள்ளது:

நிறைநீர நீரவர் கேண்மை பிறை (குறள். 782)

என்பது குறள்.

### 7.5.1.2 தேய்பிறை

மதுரைக் காஞ்சியில், பகைவரின் ஆக்கம் நாள் தொறும் தேய்ந்து கெட வேண்டும் என்பதற்குத் தேய் பிறை நாள்தொறும் தேய்ந்து கெடுவது உவமையாக்கப் பட்டுள்ளது:

குணமுதல் தோன்றிய ஆரிருள் மதியின்
தேய்வன கெடுகநின் தெவ்வ ராக்கம்
(மது. 195-196)

கலித்தொகையில் இவ்வுவமை, தலைமகனைப் பிரிவதால் நாள்தொறும் தலைமகளின் அழகு கெடுவதற்கு உவமை யாக்கப்பட்டுள்ளது:

நீள்கதிர் அவிர்மதி நிறைவுபோல் நிலையாது
நாளினும் நெகிழ்போடு நலனுடன் நிலையுமோ
(கலி. 17 : 7-8)

திருக்குறளில் இவ்வுவமை, பேதையார் நட்பு நாள்தொறும் தேய்ந்து கெடுவதற்கு உவமையாக்கப்பட்டுள்ளது:

மதி, பின்னீர பேதையார் நட்பு (குறள். 782)

### 7.5.1.3 மதிசேர் அரவு

திங்களைப் பாம்பு விழுங்கும் செய்தி - நம்பிக்கை, சங்க இலக்கியங்களில் ஒருசில வேறுபாடுகளோடு மகளிரின் நெற்றிக்கு உவமையாக்கப்பட்டுள்ளது:

சிறுகோட்டுக்
குழவித் திங்கள் கோள்நேர்ந்தாங்குச்
சுறவுவா யமைத்த சுரும்புசூழ் சுடர்நுதல்

எனவரும் பெரும்பாணாற்றுப்படை (383-385) உவமத்தில், சுறவுவாய் என்னும் தலைக்கோலமும் கரிய சுரும்பு

களும் சூழ்ந்து தோன்றும் நெற்றிக்குப் பாம்பு விழுங்கும் திங்கள் உவமையாக்கப்பட்டுள்ளது.

நற்றிணை 377-ஆம் பாடலில், ஒளி பொருந்திய கரிய கூந்தல் சேர்ந்த தலைமகளின் நெற்றிக்கு அரவினால் சிறிது விழுங்கப்பட்ட மதி உவமையாக்கப்பட்டுள்ளது.

இரவும் எல்லையும் படரட வருந்தி
அரவுநுங்கு மதியின் நுதலொளி கரப்ப (அகம். 313:6-7)

பாம்பூர் மதியின் நுதலொளி கரப்ப (நற். 128 : 2)

எனவரும் உவமங்களில், தலைவனைப் பிரிந்த தலைமகளின் ஒளி இழக்கும் நெற்றிக்குப் பாம்பூர் மதி உவமையாக்கப்பட்டுள்ளது.

வண்டினங்கள் ஒன்று சேர்ந்து வெண்டாமரை மலரில் தேனுண்ண அணுகுவது, மதிசேர் அரவினைப் போல் தோன்றுவதாக அரிய இயற்கைக் காட்சியைப் படைக்கின்றார் சிறுபாணாற்றுப்படை ஆசிரியர் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார். அவ்வுவமம் வருமாறு :

முள்ளரைத் தாமரை முகிழ்விரி நாட்போது
கொங்குகவர் நீலச் செங்கட் சேவல்
மதிசேர் அரவின் மானத் தோன்றும் (சிறு. 183-185)

சங்க இலக்கியப் புலவர்கள் கொண்ட பார்வைகளிலிருந்து முற்றிலும் வேறுபடுகின்றார் வள்ளுவர். உவமை பழையது; வள்ளுவர் பார்வை புதியது.

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று (குறள். 1146)

என்பது வள்ளுவர் பார்வை. அலர் விரைந்து பலரும் அறியப் பரவுவதற்கு இவ்வுவமையைப் பயன்படுத்துகின்றார் வள்ளுவர்.

இதுவரை கண்டவற்றால், வளர்பிறை, தேய்பிறை, மதிசேர் அரவு ஆகியவற்றைப் பல்வேறு பொருள்களுக்குச் சங்கப் புலவர்கள் உவமையாக்கியுள்ளனர் என்பதும், வள்ளுவர் அவர்களினும் முற்றிலும் புதிய பார்வையில் இவ்வுவமைகளைப் பயன்படுத்துகின்றார் என்பதும் தெளிவாகின்றன.

### 7.5.2 உவமையும் பார்வையும்

ஒரே பொருள் உவமையில் பயன்படுத்தப்பட்டிருப்பினும், புலவர்கள் அப்பொருளின் வெவ்வேறு இயல்புகளை நோக்குகின்றனர்; அவ்வாறு பார்வை வேறுபடும் போது உவமையின் சூழல் மாறுபடுகின்றது; அதற்கு ஏற்ப உவமத்தில் வரும் பொருள் வேறுபடுகின்றது எனலாம்.

உவமைக்குக்
கொண்ட
பொருள்



பார்வை வேறுபடல்  உவமத்தில் பொருள் வேறுபடல்

சங்க இலக்கியங்களிலும் குறளிலும் ஒத்த உவமைப் பொருள் கொண்ட உவமங்கள் ஒருசில காணப்படுகின்றன. அவற்றுள், கள்வர் என்னும் பொருளை உவமையில் கொண்டு வரும் உவமங்களில் காணும் புலவர்களின் பார்வை வேறுபாடுகள் வருமாறு:

கள்வர்போல் நோக்கினும் — நோக்கு
(கலி. 61 : 26)

(பாணர்) கள்வர் போல்வர் — அச்சம்
(குறுந். 127–6)

கள்வர் போலக் கொடியன் மாதோ — கொடுமை
(நற். 28 : 4)

நள்ளென் கங்குற் கள்வன் போல
அகன்துறை யூரனும் வந்தனன் — கரத்தல்
(நற். 40 : 10-11)

சங்கப் புலவர்களின் பார்வைகளிலிருந்து வள்ளுவர் வேறுபடுகின்றார்.

உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர் (குறள். 813)

என்னும் குறட்பாவில், கள்வர்கள் பொருளையே தம் நோக்காகக் கொள்ளும் பண்பை உவமையில் அமைத்துள்ளார்.

இவ்வாறே உவமையில் இடம் பெறும் மலை, குன்று, பாவை முதலியவை புலவர்களின் பார்வை வேறுபாடு களால் உவமையின் பொருள்கோள்நிலை வேறுபட்டு, தொகை நூல்களிலும் குறளிலும் வெவ்வேறு பொருள் களுக்கு உவமையாகியுள்ளன:

| பொருள் (உவமையில் வருவது) | புலவர்பார்வை | |
|---|---|---|
| மலை | பரப்பு | (நற். 119 : 11) |
| | நிலை குலையாமை | (குறள். 124) |
| குன்று | தோற்றம் | (நெடு. 108; பொருந. 244; புறம். 125:9, 307:2, 387:22) |
| | நிலை குலையாமை | (குறள்கள் 898, 965) |
| பார்வை | அழகு | (ஐங். 221:2; குறுந். 195:6-7; குறள். 407) |
| | நடை | (அகம். 142:21-22; நற். 362:1) |
| | இயக்கம் | (குறுந். 8:3-6; குறள். 1020) |

படம் : 18

இவ்வாறு, உவமை பெரும்பான்மையும் ஒத்துப் பொருள் வேறுபட வரும் பிற உவமங்களின் அடைவு வருமாறு :

| வரிசை எண் | உவமையில் வரும் பொருள் | சங்கத் தொகை நூல்களில் வரும் உவமம் | திருக்குறளில் வரும் உவமம் |
|---|---|---|---|
| 1 | அமிழ்து | அமிழ்தத் தன்ன அந்தீங் கிளவி (குறு. 206 : 1) | அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள் சிறுகை அளாவிய கூழ் (குறள். 64) |
| | | அரும்பெறல் அமிழ்தம் அன்ன கரும்பு (புறம். 392 : 20-21) | உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக் |
| | | நல்லமிழ் தாகநீ நயந்துண்ணு நறவே (புறம். 125 : 8) | கமிழ்தின் இயன்றன தோள் (குறள். 1106) |
| 2 | அறைபறை | பறையறைந் தன்ன அலர் (அகம். 281 : 13) | அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட மறைபிறர்க் குய்த்துரைக்க லான் (குறள். 1076) |
| | | | அறைபறை கண்ணார் (குறள். 1180) |
| 3 | கடல் | கடல்போல் தானை (அகம். 204 : 2) | இன்பம் கடல் (குறள். 1166)<br>பிறவிப் பெருங்கடல் (குறள். 10) |
| | — கடலினும் பெரிது | கங்குல் வெள்ளம் கடலினும் பெரிதே (குறுந். 387 : 5) | |
| | | கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே (ஐங். 184 : 4) | பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின் நன்மை கடலிற் பெரிது (குறள். 103) |

| | | | |
|---|---|---|---|
| 4 | களித்தொறும் கள்ளுண்ணல் | மகிழ்ந்ததன் தலையும் நறவுண் டாங்கு<br>விழைந்ததன் தலையும் நீவெய் துற்றனை<br>(குறுந். 165 : 1-2) | களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்<br>வெளிப்படுந் தோறும் இனிது (குறள். 1145) |
| 5 | துஞ்சுவது | துஞ்சுவது போல இருளி<br>(அகம். 139 : 1) | உறங்கு வதுபோலும் சாக்காடு<br>(குறள். 339) |
| 6 | நிலம்<br>— நிலத்தினும் பெரிது | நிலத்தினும் பெரிதே ...<br>பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே<br>(குறுந். 3 : 1...4) | காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்<br>ஞாலத்தின் மாணப் பெரிது<br>(குறள். 102) |
| 7 | நிழல் | செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழற் போல<br>(தலைமகன் தலைமகளைத் தொடர்தல்)<br>(அகம். 49 : 15)<br>நின்னின் விடாஅ நிழல்போல் திரிதருவாய்<br>(கலி. 61 : 8) | தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை<br>வீயா தடியுறைந் தற்று<br>(குறள். 208) |
| 8 | பளிங்கு | பளிங்கு சொரிவன்ன பாய்சுனை<br>(குறிஞ். 57)<br>பளிங்குவகுத் தன்ன தீநீர்<br>(புறம். 150 : 27) | அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்<br>கடுத்தது காட்டும் முகம் (குறள். 706) |
| 9 | யாழ் | நரம்பார்த் தன்ன தீங்கிள வியளே<br>(ஐங். 185 : 4) | குழலினி தியாழினி தென்பதம் மக்கள்<br>மழலைச்சொல் கேளா தவர் (குறள். 66) |

| வரிசை எண் | உவமையில் வரும் பொருள் | சங்கத் தொகை நூல்களில் வரும் உவமம் | திருக்குறளில் வரும் உவமம் |
|---|---|---|---|
| 10 | வாள் | தோள்தோய் கல்லதர் பிரிக்கும்<br>வாள்போல் வைகறை<br>(குறுந். 157 : 4)<br>வாள்போல் வாய கொழுமடல் தாழை<br>(குறுந். 245 : 3) | வாள்போல் பகைவர் (குறள். 882) |
| 11 | வையகமும் வானகமும்<br>— இரண்டினும் பெரிது | விரிதிரைப் பெருங்கடல் வளைஇய<br>உலகமும்<br>அரிதுபெரு சிறப்பின் புத்தேள் நாடும்<br>இரண்டும் சீர்தூக்கின் சீர்சா லாவே ...<br>தோள்மாறு படூஉம் வைகலோ டெமக்கே<br>(குறுந். 101 : 1—3...6) | செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்<br>வானகமும் ஆற்ற லரிது<br>(குறள். 101) |

## 7.6 நுட்ப வேறுபாடு உடைய உவமைகள்

### 7.6.1 நிலமும் நீரும்

ஒருவரையொருவர் முன்னம் அறியாத தலைமக்கள் எதிர்ப்படுகின்றனர்; ஒருவரையொருவர் அறியும் முன்னமே அவர்தம் நெஞ்சங்கள் ஒன்றிவிடுகின்றன; அவள் அவன் என்னும் வேறுபாடு நீங்குகின்றது; இருதலைப் புள்ளின் ஓர் உயிர் அன்ன நீர்மையர் ஆகின்றனர்; தம் அன்பு நெஞ்சங்கள் ஒன்றையொன்று கலந்ததைப் பற்றிக் குறுந்தொகைத் தலைமகன் கூறுகையில்,

செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே (குறுந். 40:4-5)

என உவமையுறக் கூறுகின்றான். அன்பு நெஞ்சங்கள் ஒன்றையொன்று வேறுபாடற்றுப் பிரித்தறிய முடியாதபடி கலந்துவிட்டமைக்குச் செம்மண் நிலத்தில் பெய்த நீர் அச் செம்மைத் தன்மையை ஏற்றுப் பிரித்தறிய முடியாத வண்ணம் விளங்குவது உவமையாகியுள்ளது.

இதே நோக்கினதான உவமை ஒன்று குறளிலும் இடம் பெற்றுள்ளது. மாந்தர்தம் இனத்தின் இயல்பால் அறிவு திரிந்து, அவ்வினத்தின் அளவினதாவதற்கு

நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் (குறள். 452)

என்னும் உவமை குறிக்கப்படுகிறது.

குறுந்தொகைப் பாடலிலும் குறளிலும் வரும் உவமைகள் இரண்டும் ஒரே பொருள் நோக்கின; எனினும் இரண்டிலும் நுட்ப வேறுபாடு அமைந்துள்ளது. குறுந்தொகை உவமை செம்புலத்தை (அதாவது ஒரு நிலத்தைக் குறிப்பாக)க் குறிக்கிறது; குறள் 'நிலம்' எனப் பொதுவாகக் குறிக்கிறது. அதாவது சிறப்பு நிலை, பொது நிலை ஆக்கப்பட்டுள்ளது.

சிறப்பு(ப் பொருள்)→பொதுமை (ப்பொருள்)

இஃது குறளில் வரும் உவமைகளுக்குள்ள ஒரு சிறப்பு என்லாம்.

## 7.6.2 வானமும் வாழ்க்கையும்

வையத்து வாழும் உயிர்களை வானம் பொழிந்து வாழ்விக்கும் வகைமை சங்கத் தொகைநூல்களில் நான்கிடங்களிலும் குறளில் ஓரிடத்தும் உவமையாக்கப்பட்டுள்ளது. அவ்வுவமைத் தொடர்கள் வருமாறு:

1. வறங்கூர் வானத்து வள்ளுறைக் கலமரும்
புள்ளிற் கதுபொழிந் தாங்கு (கலி. 146:52–53)

2. வானம்
துளிமாறு பொழுதினிவ் வுலகம் போலும்
(கலி. 25:27-28)

3. உலகம்
கயங்கண் அற்ற பைதறு காலைப்
பீளொடு திரங்கிய நெல்லிற்கு
நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே
(நற். 22:8-11)

4. கல்கண் பொடியக் கானம் வெம்ப
மல்குநீர் வரைப்பிற் கயம்பல வுணங்கக்
கோடை நீடிய பைதறு காலை
இருநிலம் நெளிய வீண்டி
உருமுரறு கருவிய மழைபொழிந் தாங்கே
(புறம். 174:24-28)

5. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் (குறள். 1192)

இவ்வுவமைகள் ஐந்திலும் வானம் மழை பொழிந்து வாழ்வித்தல் என்பது பொதுவாக இடம் பெறுவதாகும். அடுத்து, யாரை வாழ்வித்தது அல்லது யாருக்கு மழை பொழிந்தது என வினா தொடுக்கும் போது, அதற்கான விடைகள் மேற்சுட்டிய உவமைகளில் வேறுபடுகின்றன. கலித்தொகைப் பாடல் 146-இல் புள்ளும், நற்றிணைப் பாடல் 22-இல் புல்லும், கலித்தொகைப் பாடல் 25-லும் புறநானூற்றுப்பாடல் 174-லும் உலக மக்களும், குறளில் வாழ்வாரும் வானம் மழைபொழியப் பயன்பெறும் உயிரினங்களாகக் குறிப்பிடப்படுகின்றன. புள்ளும், புல்லும் அஃறிணைப் பொருள்கள்; குறளில் வரும் வாழ்வார் உயர்திணைப் பொருள். இவ்வகையில், சங்க இலக்கிய உவமை அமைப்பையும் குறள் உவமை அமைப்பையும் ஒப்பிட்டு நோக்கின், அஃறிணைப் பெயர் → உயர்திணைப் பெயர் எனலாம். உவமையில் ‘உலகம்’ பயன்பெறுவதாக வரும்

இரு பாடல்களையும் குறளையும் ஒப்பிட்டு நோக்கின், பொதுமைப் பெயர் சிறப்புப் பெயராக மாற்றம் பெறுகின்றது எனலாம். அதாவது,




படம் : 19

### 7.6.3 உண்ணலும் பகுத்துண்ணலும்

இன்பம் என்பது ஒரு மன நிறைவு; இவ்வின்பம் அறத்தாலும் கிடைக்கலாம். பொருளாலும் கிடைக்கலாம்; காமத்தாலும் கிடைக்கலாம் எனக் கண்டோம். பலவகை இன்பங்களுள் ஒன்று, ஒருவன் தான் தன் முயற்சியால் ஈட்டிய பொருளைக் கொண்டு, தம்மில்லத்திலிருந்து உணவு உண்பது. இவ்வகை இன்பத்திற்கு ஒப்பானவன் தலைமகன் என்கிறாள் குறுந்தொகைத் தலைவி ஒருத்தி.

தம்மில் தமதுண் டன்ன
... ஓங்குமலை நாடன் (குறுந். 83:3...5)

என்பது அவள் கூற்று. இதில் இடம்பெறும் உவமை 'தம்மில் தமதுண் டன்ன' என்பது.

திருக்குறளில் இவ்வுவமை, மேலும் ஒரு புதுவகைச் செயலொடு சேர்ந்து விரிவும் பொலிவும் பெறுகின்றது. குறள் காட்டும் தலைமகன் தன் தலைமகளின் முயக்கால் பெறும் இன்பத்திற்குத் தம் இல்லிலிருந்து தமது பாத்துண்டலை உவமையாக்குகின்றான். 'தம்மில்

தமதுண்டல்' குறுந்தொகை உவமை; 'தம்மிலிருந்து தமது பாத்துண்டல்' குறள் உவமை. 'பகுத்தல்' ஆகிய அறச் செயல் குறளில் சேர்க்கப்பட்டு உவமைக்கு மேலும் இன்பம் (இரு பொருள்களிலும்) சேர்க்கின்றது. தம்மில் லிருந்து தமதுண்டால் மட்டும் போதாது; அதனைப் பகுத்தும் உண்ண வேண்டும் என்னும் வள்ளுவரின் அற நெஞ்சம் அவர்தம் உவமையில் பொதிந்து நிற்பதைக் காணலாம்.

## 7.7 பொதுத்தன்மை ஒத்துவரும் வேறுபட்ட உவமைகள்

பொதுத்தன்மை பெரும்பான்மையும் ஒத்த உவமங்கள் சிலவற்றில், சங்கத் தொகை நூல்கள் ஒருவகை உவமையைப் பயன்படுத்த, திருக்குறள் மற்றொரு வகை உவமையைப் பயன்படுத்தும் போக்கு ஒரு தனிச் சிறப்பிற் குரியது ஆகும். இவ்வகை உவமங்களில், உவமைகள் வேறுபட்டுத் தோன்றினும், அவை தத்தமக்குரிய பொருள் நோக்கில் பெரும்பான்மையும் ஒத்து வருகின்றன. அவற் றுள் சில வருமாறு:

1. சினைஇய வேந்தன் செல்சமம் கடுப்பத்
துணைஇய மாலை துன்னுதல் காணூஉ
(குறிஞ். 229-230)

காதலர் இல்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும் (குறள். 1224)

2. கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர் (பட். 205-207)

சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி (குறள். 118)

3. தீயுறு மெழுகின் ஞெகிழ்வனர் விரைந்தே
(ஐங். 32 : 4)

நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார் (குறள். 1260)

4. கன்றும் உண்ணாது கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துக் காஅங்கு
(குறுந். 27 : 1-2)

அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் (குறள். 720)

5. கண்ணுறு விழுமம் கைபோல் உதவி (நற். 216:3)
உடுக்கை இழந்தவன் கைபோல (குறள். 788)

6. விழவிற்
கோடியர் நீர்மை போல முறைமுறை
ஆடுநர் கழியுமிவ் வுலகு (புறம். 29:22-24)

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று (குறள். 332)

## 7.8 *அகத்தில் புறம்*

*'எல்லா உயிர்க்கும் இன்பம்'* (தொல். 1169 : 1) *என்பது பண்டைத் தமிழர் கண்ட இலக்கிய நெறியாக விளங்கியது. அகப்பாடல்களைப் பாடும்போது, அஃது ஒரு குறிப்பிட்ட தலைமகனையும் தலைமகளையும் உட்படுத்தியதாக அமையாமல் நாடு, மொழி, இனம் கடந்த பொது உணர்ச்சிகளின் வெளிப்பாடாக விளங்க வேண்டும் என்னும் பேரவா தமிழ்ச் சான்றோர்களிடம் முகிழ்த்திருந்துள்ளது. அதன் எதிரொலியே*

மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி யொருவர்ப் பெயர்கொளப் பெறாஅர் (தொல். 1000)

*என இலக்கண வரம்பு ஏற்றது என்க. இலக்கியப் படைப்பில்தான் எத்தனை பரந்த மனப்பான்மை!*

*புலவர்கள் உணர்ச்சி மிக்கவர்கள்; நாட்டுணர்வும் ஓரளவு வரலாற்று உணர்வும் உடையவர்கள். ஆகவே, அவர்களின் பாடல்களில் இவை இடம்பெறுவது இயல்பே. நாட்டு உணர்வை—வரலாற்று உணர்வை அகப்பாடல்களில் வெளிப்படுத்தவும் வேண்டும்; அதே நேரத்தில் சான்றோர் கண்ட வரம்பிற்கும் உட்பட வேண்டும்; இந்தச் சிக்கலைத் தீர்க்க, சங்கப் புலவர்கள் கைக்கொண்ட மாபெரும் உத்தியே உவமைகளின் வழியே நாட்டுணர்வையும் வரலாற்றுணர்வையும் பொதித்து வைப்பது. இம்மரபு சங்க இலக்கியங்களில் பெரிதும் பின்பற்றப்பட்டுள்ளது. இதனால், அகப்பாடல்கள்கூட வரலாற்றுப் பேழைகளாக விளங்குகின்றன.*

*அகப்பாடல்களில் புறப்பொருள் செய்திகளைப் பொதித்து வைக்கும் மரபின் இயல்புகளைப் பின்வருமாறு சுருங்க உரைக்கலாம்:*

1. *நாட்டில் நடைபெற்று மக்களிடையே இயல்பாக வழங்கிவரும் வாழ்வியல் நிகழ்ச்சிகளை உவமையாக்கல்:*

மந்தி
பனிவார் கண்ணள் பலபுலந்து உறையக்
கடுந்திறல் அத்தி ஆடணி நசைஇ
நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்கு
(அகம். *396:11-14*)

*இவ்வகையில், ஆதிமந்தி ஆட்டனத்தியின் காதல் வாழ்வும் அவல வாழ்வும் 8 அகப்பாடல்களில் உவமைகளாக்கப்பட்டுள்ளன. அன்றியும் பெண் கொலை புரிந்த நன்னன், பொய்கரி சொன்ன புலையன் ஒருவன், தலைவனைப் பிரிந்து வருந்திய வெள்ளி வீதியார், பழிக்குப் பழி வாங்கிய அன்னி மிஞிலி முதலியோர் செய்திகளும் அகப்பாடல்களில் உவமைவழி வெளிப்படுத்தப்பட்டுள்ள புறப்பொருள் செய்திகளாகும்.*

2. *மகளிரின் நலம், அழகு ஆகியவற்றிற்குப் பண்டைய நகர்களையும் துறைமுகங்களையும் அகப் பாடல்களில் உவமையாக்கல் :*

காவிரிப்
பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த
ஏந்துகோட் டியானைச் சேந்தன் தந்தை
அரியலம் புகவின் அந்தோட்டு வேட்டை
நிரைய ஒள்வாள் இளையர் பெருமகன்
அழிசி **ஆர்க்கா**(டு) அன்ன இவள்
பழிதீர் மாணலம் (குறுந். 258:2-8)

3. *அலர் எழுவதற்குப் போர் ஆரவாரச் செய்திகளையும் நகரத் தெருக்களில் மக்கள் கூடி எழுப்பும் ஆரவாரச் செய்திகளையும் உவமையாக்கல்:*

அலரே
யன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்
தொன்னிலை முழுமுத றுமியப் பண்ணிப்
புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்
இன்னிசை யார்ப்பினும் பெரிதே (அகம். 45:8-12)

4. *மகளிரின் உறுப்புகளை ஊர்ப்பெயருடன் கூடிய முத்து, மூங்கில் முதலியவைகளுக்கு உவமையாக்கல்:*

**கொற்கை முன்றுறை**
இலங்குமுத் துறைக்கும் எயிறு (ஐங். 185:1-2)

5. *மகளிரின் உறுப்புகளுக்குப் போர்க்களப் பொருள்களை உவமையாக்கல்:*

நுதிவேல் நோக்கு (சிறு. 158)

*திருக்குறள் உலகப் பொதுநோக்கொடு எழுதப்பட்டதாகலின் எவ்வகை வரலாற்றுச் செய்தியும் காமத்துப்பாலில் உவமையாக அமையவில்லை. மகளிரின் உறுப்புகளுக்குப் போர்க்களப் பொருள்களை உவமையாக்கும் மரபு மட்டும் காணப்படுகிறது.*

*நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதலுக்குத் தாக்கணங்கு தானை கொண்டு தாக்குதல் உவமையாக்கப்பட்டு உள்ளது (குறள். 1082); மாதர் மார்பில் அணிந்துள்ள துகிலுக்கு மதம் பொருந்திய யானையின் கட்படாம் உவமையாக்கப்பட்டு உள்ளது (குறள். 1087); கணவரைப் பிரிந்த மகளிரை வருத்தும் மாலைக்காலம் பகைவர் உயிருண்ணும் வேலாக உவமிக்கப்பட்டு உள்ளது (குறள். 1221); அதே மாலைக்காலம், கொலைக்களத்து ஏதிலராகவும் உவமிக்கப்பட்டு உள்ளது (குறள். 1224).*

*இம்மரபு சங்கத் தொகைநூல்களில் பெருவழக்கு; திருக்குறளில் அருகிய வழக்கே.*

## 7.9 *புறத்தில் அகம்*

*அகப்பாடல்களில் புறப்பொருள் செய்திகளை உவமையாக்குவதுபோல், புறப்பாடல்களில் அகப்பொருள் செய்திகளை உவமையாக்குவதும் சங்க இலக்கிய மரபாகக் காணப்படுகிறது. இஃது அருகிய வழக்கே.*

இவளினும் சிறந்தன்று ஈதல் (அகம். 131:3-5)

கொலையேற்றுக் கோட்டிடைத் தாம்வீழ்வார் மார்பின்
முலையிடைப் போலப் புகின் (கலி. 103:72-73)

ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்
இரவலர் புண்கண் அஞ்சும் புரவு (பதி. 57:12-15)

*புறப்பாடல்களில் அகப்பொருள் செய்திகளை உவமையாக்கும் மரபு குறளிலும் காணப்படுகிறது:*

கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று (குறள். 402)

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று (குறள். 1007)

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்
தில்லாளின் ஊடி விடும் (குறள். 1039)

## 7.10 புராணச் செய்திகளை உவமையாக்கும் மரபு

சங்கத்தொகைநூல்களில் அருந்ததி, இந்திரன், உமை, உரோகிணி, திருமகள், திருமால், பலராமன், முக்கண் பெருமான், முருகன், வள்ளி ஆகியோரைப் பற்றிய புராணச் செய்திகள் உவமையாக்கப்பட்டுள்ளன:

பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையும் கற்பு (பெரும். 302-303)

பாரதக் கதையில் வரும் அருச்சுனன், கண்ணன், வீமன் பற்றிய செய்திகளும், ஒருசில இராமாயண நிகழ்ச்சிகளும் சங்கத் தொகைநூல்களில் உவமைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன:

மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குறங்கறுத் திடுவான்போல் (கலி. 52:2-3)

இம்மரபு திருக்குறளில் பொதுமை பெற்றுள்ளது; தெய்வம், பேய் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன:

தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான் (குறள். 1073)

அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து (குறள். 565)

கொடுமை விளைவிப்பனவற்றைக் கூற்றுவனாக உருவகித்தல் சங்க மரபு:

உயிர்செகு மரபிற் கூற்றத் தன்ன
வரும்விசை (மலை. 209-210)

இம்மரபு, குறளிலும் இடம்பெற்றுள்ளது:

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்றும் உடைத்து (குறள். 1085)

திங்களைப் பாம்பு கவ்வுவதாகவரும் புராணச் செய்தி சங்கத் தொகை நூல்களில் பல இடங்களில் உவமையாக்கப் பட்டுள்ளது:

அரவுநுங்கு மதியின் நுதலொளி கரப்ப (அகம். 313:7)

அரவின்வாய்க் கோட்பட்டுப்
போதரும் பான்மதியும் போன்ம் (கலி. 105:55-56)

இம்மரபு, திருக்குறளிலும் காணப்படுகிறது:

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
**திங்களைப் பாம்புகொண் டற்று** (குறள். 1146)

## 7.11 அறக்கருத்துகளை உவமையாக்கும் மரபு

இலக்கியம் இலக்கியத்திற்காக என்றில்லாமல், இலக்கியம் மக்கள் வாழ்க்கைக்காக எனக் கொண்டவர்கள் சங்கச் சான்றோர்கள். தொல்பழம் நூலாகிய தொல்காப்பியம் இலக்கியங்கள் அறம், பொருள், இன்பம் என்னும் மூவகைக் குறிக்கோள்களை வலியுறுத்துவனவாக இருக்க வேண்டும் என எதிர்பார்ப்பதை,

அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப (தொல். 1363)

என்னும் நூற்பாவழி அறிய முடிகின்றது. இ∴து, தொல்காப்பியருக்கும் முந்திய சான்றோர்கள் கொண்ட நெறியுமாம்.

புறநானூறு போன்ற நூல்கள் ஒருவாறு அறக்கருத்துகளை வெளிப்படையாக உரைத்துள்ளன; பிற நூலாசிரியர்கள் அறக்கருத்துகளையே தனிப்பாடலாக அமைக்கவில்லை; என்றாலும் சமுதாயத்திற்கு அறம் கூறவேண்டும் என்னும் சூழல்கள் ஏற்படும்போது, அறக்கருத்துகளைத் தம் பாடல்களுக்கிடையே மறைத்து வைக்கும் உத்தியைக் கையாண்டுள்ளனர். அதற்கு, அவர்களுக்குப் பயன்பட்ட கருவியே உவமை எனலாம்.

அற உவமைகள் பாடல்களில் இடம் பெற்றமைக்குப் பல்வேறு காரணங்கள் கூறலாம்:

1. அறவுணர்வுடைய புலவர்கள் கவிதை இயற்றும்போது, அறந்தொடர்பான கருத்துகள் இடம் பெறுவது இயற்கையே.

2. சமுதாயத்தில் அல்லது அரசியல் வாழ்வில் தோன்றிய ஒரு நிகழ்ச்சியைச் சாடும் வகையில் அல்லது போற்றும் வகையில் அறக்கருத்துகளைப் பயன்படுத்தி யிருக்கலாம்.

3. அறக்கருத்துகளை மக்களுக்கு அறிவுறுத்த வேண்டிய காலக் கட்டங்கள் ஏற்பட்டபோது, அவற்றை எடுத்துரைக்க வேண்டிய பொறுப்பு சமுதாயச் சான் றோர்களாகிய புலவர்களையே சாரும் ஆகலின், அதற் காகவும் அற உவமைகளைப் பயன்படுத்தியிருக்கலாம்.

4. உவமைகளைக் கையாளும் பொருள்முறைப் போக்கில் புதுமையை உண்டாக்க வேண்டும் எனக் கருதி யும் அற உவமைகளைப் பயன்படுத்தியிருக்கலாம்.

5. அறக்கருத்துகளை உவமையாக்குவது ஓர் இலக்கிய நயமாகவும் கருதிப் பயன்படுத்தியிருக்கலாம்.

### 7.11.1 சங்கத் தொகைநூல்களில் அற உவமைகள்

பத்துப்பாட்டுப் பாடல்களில் அறக்கருத்துகளைக் கொண்ட உவமைகள் மிக அருகியே காணப்படுகின்றன. எட்டுத்தொகை நூல்களில் (பத்துப்பாட்டொடு ஒப்பிட) ஓரளவு அறக்கருத்துகளைக் கொண்ட உவமைகள் மிகுந்தே காணப்படுகின்றன. குறிப்பாகக் கலித்தொகை யில் அற உவமைகள் மற்றெல்லாவற்றினும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

அறக்கருத்துடைய உவமைகள் பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, பெரும்பாணாற்றுப் படை, பொருநராற்றுப்படை ஆகியவற்றில் இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு (ஒவ்வொரு பாட்டுக்கும் ஒவ்வோர் எடுத்துக்காட்டு):

1. இகன்மீக் கடவும் இருபெரு வேந்தர்
வினையிடை நின்ற சான்றோர் போல (குறிஞ். 27-28)

2. அவன், கோலினுந் தண்ணிய (பட். 300-301)

3. பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையும் (பெரும். 302-303)

4. ஒன்றிய, கேளிர் போல (பொருந. 73-74)

எட்டுத்தொகையில் உள்ள எல்லா நூல்களிலும் அற உவமைகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒவ்வொரு நூலுக்கும் ஒவ்வோர் எடுத்துக்காட்டு வருமாறு:

1. ஆர்வுற்
றிரந்தோர்க் கீயா தீட்டியோன் பொருள்போல் (அகம். 276:12-13)

2. அறம்புரி செங்கோல் மன்னனின் தானனி
சிறந்தன போலும் (ஐங். 290:1-2)

3. ஈதலிற் குறைகாட்டா தறனறிந் தொழுகிய
தீதிலான் செல்வம் போல் (கலி. 27:1-2)

4. பண்டும்,
தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட
கடனறி மாக்கள் போல (குறுந். 265:2-4)

5. இசைபட வாழ்பவர் செல்வம் போல (நற். 217:1)

6. மன்பதை காப்ப அறிவுவலி யுறுத்து
நன்றறி யுள்ளத்துச் சான்றோர் அன்ன (பதிற். 72:5-6)

7. அறம்பெரி தாற்றி அதன்பயன் கொண்மார்
சிறந்தோர் உலகம் படருநர் போல (பரி. 19:10-11)

8. சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல (புறம். 31:1-2)

மேலும், அடக்கம் உடைமை (கலி. 32: 8), உயிர்க் கொலை செய்யாமை (கலி. 120: 10-12, 143: 10-13; நற். 304: 8-10), எளியோரை இகழாமை (கலி. 120:15-16, 18-19), சான்றாண்மை (குறுந். 265: 2-6), செய்ந்நன்றி மறவாமை (கலி. 34: 1–7, குறுந். 225: 3-5), புறங்கூறாமை (கலி. 25 : 13-16, 19-20, 23-24), பொய்ச்சான்று பகராமை (கலி. 34:10) ஆகிய பொது அறங்களும், சிறப்பாக அரசியலறங்களும் (கலி. 5: 12, 10: 5-7, 34: 14, 118: 1-8, 225:3-5) சங்கத் தொகைநூல்களில் உவமைகளின் வழி வலியுறுத்தப்படுகின்றன.[5]

### 7.11.2 திருக்குறளில் அற உவமைகள்

சங்கத் தொகைநூல்களில் காணும் அற உவமை மரபு திருக்குறளிலும் காணப்படுகிறது.

திருக்குறளில் பத்து அற உவமைகள் இடம் பெற்றுள்ளன; அவற்றுள், 3 உவமைகள் அறத்துப் பாலிலும், 5 உவமைகள் பொருட்பாலிலும், 2 உவமைகள் காமத்துப்பாலிலும் இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு:

**அறத்துப்பாலில் அற உவமைகள்**

அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை (குறள்.135)

இன்மையுள் இன்மை விருந்தொரால் (குறள். 153)

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும் (குறள். 288)

**பொருட்பாலில் அற உவமைகள்**

ஆற்றின் நிலைதளர்ந் தற்றே (குறள். 716)

நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் (குறள். 960)

ஒருமை மகளிரே போல (குறள். 974)

கொல்லா நலத்தது நோன்மை (குறள். 984)

குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் (குறள். 1019)

**காமத்துப்பாலில் அற உவமைகள்**

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால் (குறள். 1107)

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் (குறள். 1303)

மேற்சுட்டிய உவமைகளுள் 288 என்னும் எண்ணுள்ள உவமை 'அறன் வலியுறுத்தல்' என்னும் அதிகாரத்தொடு தொடர்பு உடையது; ஆனால், அதிகாரத்தில் இடம் பெறாத கருத்து; 1107 என்னும் எண்ணுள்ள குறளில் வரும் உவமை 'இல்வாழ்க்கை' என்னும் அதிகாரத்திற் குரியது. இவ்வகையில் 10 உவமைகளும் அவை இடம் பெறத்தக்க-தொடர்புடையதாகக் கருதத் தக்க அதிகாரங் களும் வருமாறு :

| அற உவமை இடம் பெற்றுள்ள குறள் எண் | உவமையின் கருத்து இடம் பெறத்தக்க/தொடர் புடைய அதிகாரம் |
|---|---|
| 288 | அறன் வலியுறுத்தல் |
| 1107 | இல்வாழ்க்கை |
| 974 | வாழ்க்கைத் துணை நலம் |
| 153 | விருந்தோம்பல் |
| 716 | ஒழுக்கமுடைமை |
| 1019 | ,, |
| 760 | ,, |
| 135 | அழுக்காறாமை |
| 984 | தவம் |
| 1303 | இன்னா செய்யாமை |

ஒழுக்கம் உடையவர்களாக மக்கள் வாழ வேண்டும் என்னும் வள்ளுவர் உள்ளமே அற உவமைகளில் பெரிதும் இடம்பெற்றுள்ளது.

மேற்சுட்டிய எட்டு அதிகாரங்களுக்கும் தனித்தனியே பத்துக்குறள்கள் அமைத்தும் அவற்றொடு அமையாமல், மேலும் அவை தொடர்பான கருத்துகளை வலியுறுத்த வேண்டும் என்னும் வள்ளுவரின் உள்ள விழைபே இப் பத்து உவமைகளின் வழியாக வெளிப்படுகின்றது எனலாம்.

## 7.12 ஆய்வு முடிவுகள்

1. சங்கத் தொகைநூல்களில் இடம்பெறும் உவமங்கள் எல்லாமும் குறளில் இடம்பெறவில்லை; ஒரு சிலவே இடம்பெற்று உள்ளன. குறளில் வரும் உவமங்கள் எல்லாமும் சங்கத் தொகைநூல்களில் இடம்பெற்றவையும் அல்ல; புதிய உவமங்கள் பல இடம் பெற்றுள்ளன.

2. சங்கத் தொகைநூல்களில் அரசர், ஊர் முதலிய சிறப்புப் பெயர்களை உள்ளடக்கிவரும் உவமைகள் உண்டு; குறளில் அத்தகை உவமைகள் இடம் பெற

21

வில்லை. இதற்கு அடிப்படைக் காரணங்களுள் இரண்டு: 1. குறளின் சுருக்கம்; 2. பொதுமை நோக்கு.

3. மகளிர் உறுப்புகளுக்கு உவமை கூறும்போது குறள் பெரும்பான்மையும் சங்க மரபையே ஒட்டிச் செல்கின்றது. எனினும், சங்கத் தொகைநூல்களில் காணாத நயங்களை அமைக்கும் பாங்கு, தமிழ்ப் பண்பாட்டை உவமையிடைக் குழைத்து வைக்கும் பாங்கு ஆகியவற்றைக் குறளில் காணமுடிகின்றது.

4. மகளிர் வருணனை தவிர்த்து, ஒத்துவரும் பிற உவமங்களில் மூவகைப் போக்குகள் காணப்படுகின்றன. அவை வருமாறு:

உவமையும் பொருளும் ஒத்தல்;

உவமை ஒத்துப் பொருள் நுட்ப வேறுபாடு உடையதாதல்;

உவமையும் பொருளும் நுட்ப வேறுபாடு உடையனவாதல்.

சங்கத் தொகைநூல்களிலும் குறளிலும் வரும் பல உவமங்களில் உவமைகள் ஒத்துவரினும் பொருள்கள் வேறுபட்டு வருகின்றன. ஒரே வகையான உவமைகளிலும் சங்கத் தொகைநூல்கள், குறள் ஆகியவற்றுள் நுட்பவேறுபாடுகள் காணப்படுகின்றன.

5. ஒரே உணர்ச்சிக்கு அல்லது பொருளுக்கு வேறு வேறு உவமைகள் சங்கத் தொகைநூல்களிலும் குறளிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

6. சங்கத் தொகைநூல்களில் காணும் கீழ்வரும் மரபுகள் குறளிலும் காணப்படுகின்றன:

அகப்பாடலில் புறப்பொருள் உவமை;

புறப்பாடலில் அகப்பொருள் உவமை;

புராணச் செய்திகளை உவமையாக்கல்;

அறக்கருத்துகளை உவமையாக்கல்.

இவற்றுள் அறக்கருத்துகளை உவமையாக்கும் மரபு குறளில் தனிச்சிறப்புப் பெற்றுள்ளது.

## குறிப்புகள்

1. விரிவான விளக்கத்திற்கு இந்நூலாசிரியனின் 'தொல்காப் பியமும் திருக்குறளும் — ஓர் ஒப்பாய்வு' என்னும் ஆய்வு நூலைக் காண்க.
2. டாக்டர் ரா. சீனிவாசன், *சங்க இலக்கியத்தில் உவமைகள்*, அணியகம், சென்னை, 1973, ப. 185.
3. காண்க: இணைப்பு 7/1.
4. டாக்டர் ரா. சீனிவாசன், மு. நூ., பக். 181-182.
5. ஷை, ப. 173.
6. ஷை, பக். 212-213.

## இணைப்பு: 7/1

### கண்ணும் மலரும்

ஆய்மலர் உண்கண் (அகம். 52:14; ஐங். 242:4, 423:4)
ஆய்மலர் மழைக்கண் (நற். 85:1)
ஆயிதழ் உண்கண் (அகம். 112:24; பரி. 8:113)
ஆயிதழ் மழைக்கண் (அகம். 132:6)
ஈரிதழ் மழைக்கண் (பதிற். 52:18; புறம். 164:6)
எதிர்மலர்ப் பிணையல் அன்ன இவள்
அரிமதர் மழைக்கண் (அகம். 149:18-19)
கயத்துவளர் குவளையின் அமர்த்த கண்ணே
(ஐங். 277:5)
கயமலர் உண்கண் (கலி. 37:1)
கயவாய நெய்தல்மலர் கமழ்முகை மணநகை
நயவரு நறவிதழ் மதருண்கண் (பரி. 8:74-75)
குவளை நாண்மலர் புரையும் உண்கண் (அகம். 179:12)
குவளையம் கண் (குறுந். 13:5)
குவளை யன்ன ஏந்தெழில் மழைக்கண் (நற். 6:3)
குவளையுண்கண் (அகம். 129:16, 138:2, 156:8, 183:1, 285:13; ஐங். 72:3; குறுந். 167:3; நற். 77:12, 205:6, 271:8; புறம். 348:6)
கொன்றைப் பூவிற் பசந்த உண்கண்
குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்
தொல்கவின் பெற்றன (ஐங். 500:1-3)
தகைமலர் உண்கண் (நற். 370:11)
தாமரைக் கண் (கலி. 39:2)
தூமலர்க் கண்கள் (பரி. 7:52)
நன்மலர் மழைக்கண் (குறுந். 329:7)
நிரையிதழ் உண்கண் (அகம். 65:19)
நீர்சூழ் மாமல ரன்ன கண் (நற். 37:5)
நீனறு நெய்தல் பொலிந்த உண்கண் (புறம். 144:4)
நெய்தல் அம்கண் (ஐங். 135:3)
நெய்தல் இதழுண்கண் (கலி. 39:44)
நெய்தல் உண்கண் (அகம். 10:5; ஐங். 181:1; நற். 113:7)
நெய்தல் ...... கண் (நற். 23:7-9, 195:5-9)

நெய்தல்

கூம்புவிடு நிகர்மலர் அன்ன
ஏந்தெழில் மழைக்கண்எம் காதலி குணமே
(அகம். 83:13-15)

நெய்தல் மலரன்ன கண் (கலி. 142:23)

பயிலிதழ் மலருண்கண் (கலி. 103:60)

பல்லிதழ் உண்கண் (அகம். 161:14; ஐங். 170:4, 190:4, 334:5, 351:4, 471:2; கலி. 112:11; குறுந். 5:5; நற். 155:10, 241:11)

பல்லிதழ் மலருண்கண் (கலி. 45:11, 100:10)

பல்லிதழ் மழைக்கண் (அகம். 51:9; குறுந். 259:4)

பல்லிதழ் மென்மலர் உண்கண் (அகம். 109:1)

பனிமலர்க் கண்ணார் (பரி. 8:48)

பனிமலர் நெடுங்கண் (ஐங். 315:1, 477:1)

புதுமலர் மழைக்கண் (ஐங். 243:4)

புரியவிழ் நறுநீலம் புரையுண்கண் (கலி. 15:20)

பூக்கவின் கொண்ட புகழ்சால் எழிலுண்கண் (கலி. 142:11)

பூங்கண் (கலி. 48:22; குறுந். 142:2; நற்.90:7, 221:11, 243:4, 355:1)

பூங்கணோய் (ஐங். 469:5)

பூங்கணோள் (ஐங். 375:5)

பூங்குழைக் கமர்த்த ஏந்தெழின் மழைக்கண் (நெடு. 38)

பூப்புரை உண்கண் (ஐங். 376:4)

பூப்போல் உண்கண் (ஐங். 16:4, 101:4; குறுந். 101:4; நற். 20:6, 325:7; புறம். 66:4)

பூவுயிர்த் தன்ன புகழ்சால் எழிலுண்கண் (கலி. 142:11)

பூவெழில் உண்கண் (கலி. 39:51, 84:37, 85:27)

பூவொடு புரையும் கண் (குறுந். 226:1)

பேரமர் மழைக்கண் (ஐங். 427:1)

பேரெழில் மலருண்கண் (கலி. 58:2)

பொருந்து மலரன்ன என்கண் (ஐங். 18:3)

போதெழில் உண்கண் (கலி. 33:9, 122:2)

போதெழில் மலருண்கண் (கலி. 49:10)

போதேர் உண்கண் (நற். 144:3)

மலர்க்கண் (நற். 398:10; பரி. 10:99)

மலர்ப்பா டான்ற மையெழின் மழைக்கண் (அகம். 33:9)

மலருண் கண் (கலி. 14:3; பரி. 9:9, 59)

மலரேர் உண்கண் (அகம். 176:16; குறுந். 377:1; நற். 308:2)

மாமலர்
தகைவனப் பிழந்த கண் (அகம். 69:1-2)

மாமலர் புரைஇய கண்ணே (நற். 317:10)

மாமலர் வண்ணம் இழந்த கண் (அகம். 197:1)

மாயிதழ் மழைக்கண் (அகம். 162:11; நற். 252:9, 301:3)

மையெழில் மலருண் கண் (கலி. 27:17)

மைவளம் பூத்த மலரேர் மழைக்கண்ணார் (பரி. 17:16)

வைகறை மலரும் நெய்தல் போலத்
தகைபெரி துடைய காதலி கண்ணே (ஐங். 188:3-4)

# 8

# உயிரினப் பாகுபாட்டு மரபு

## 8.1 *பாகுபாட்டின் அடிப்படை*

நாம் வாழும் இவ்வுலகில், உயிரினங்கள் தம் இயக்க நிலையில் பல திறத்தனவாக விளங்குகின்றன. மரம், செடி, கொடி போன்றவை ஓரிடத்தில் நிலையாக நிற்கும் உயிரினங்கள்; பாம்பு, புழு, அட்டை போல்வன ஊர்ந்து செல்லும் உயிரினங்கள்; மீன், ஆமை, முதலை முதலியன நீரில் நீந்தும் உயிரினங்கள்; மனிதன், மாடு, மான் போல்வன நடந்து செல்லும் உயிரினங்கள்; வண்டு, காக்கை, குருவி போல்வன பறந்து செல்லும் உயிரினங்கள். இவ்வுயிர் இனங்களுள் ஒருசில ஒன்றிற்கு மேற்பட்ட இயக்க நிலைகளைப் பெற்றும் விளங்குகின்றன.

இயக்க நிலைகள் வேறுபட்ட உயிரினங்கள் அனைத்திற்குமே புலன்கள் உள. அப்புலன்களின் வழியாகவே அவை வெளியுலகை — சூழ்நிலையை உணர்கின்றன. ஆனால், எல்லா வகையான உயிரினங்களுக்கும் ஒரே அளவினதான புலன்கள் அமைவதில்லை. எடுத்துக் காட்டாகக் கடல்வாழ் சங்கினை எடுத்துக்கொள்வோம்: ஊர்ந்து செல்லும் இயக்கநிலையை உடையது இச்சங்கு; இதன் அருகில் வேறொரு உயிரினம் சென்றால், அதனைப் பார்வையால் பார்த்துத் தெரிந்து கொள்ளும் திறன் இதற்கு இல்லை; மற்ற உயிரின் வாடையைக் கொண்டு, இன்ன உயிரினம் தன் அருகில் உள்ளது என அறிந்து கொள்ளும் திறன் - நாற்ற உணர்வு இச்சங்குக்கு இல்லை. சுவை உணர்வு (வாய்), தொடு உணர்வு (மெய்) ஆகிய இருவகை உணர்வுகளைக் கொண்டே தன் அருகே உள்ள பிற உயிர்களை இது தெரிந்து கொள்கின்றது. வண்டு, நண்டு, தேனீ போன்றவை தொடு உணர்வால், சுவை உணர்வால், நாற்றம் பார்வை ஆகிய உணர்வு களால் வெளியுலகையும் சூழலையும் தெளிகின்றன.

இவ்வாறே பல்வேறு உயிரினங்கள் தத்தமக்குள்ள புலன் களின் எண்ணிக்கையால் வேறுபடுகின்றன.

தொல்காப்பியர் காலத்துக்கு முன் வாழ்ந்த தமிழ்ச் சான்றோர்கள், உயிரினங்களுக்கிடையே அமைந்துள்ள இப்புலன்களின் வேறுபாட்டை நன்கு தெளிந்துள்ளனர்; தெளிந்து, புலன்களின் எண்ணிக்கை அடிப்படையில் உயிரினங்களை அறுவகையாகப் பாகுபாடும் செய்துள் ளனர். அப்பாகுபாடு வருமாறு:

ஓரறிவு உயிர்கள்
ஈரறிவு உயிர்கள்
மூவறிவு உயிர்கள்
நான்கறிவு உயிர்கள்
ஐயறிவு உயிர்கள்
ஆறறிவு உயிர்கள்

இப்பாகுபாடு, தொல்காப்பியம் — மரபியலில் குறிப்பிடப்படுகிறது. இவ்வுயிர்வகைப் பாகுபாடுகளே அன்றி, ஓரறிவு உயிர்களை அகக்காழன, புறக்காழன எனப்பகுத்து அவ்வவற்றிற்கு உரிய உறுப்புகளுக்குப் பெயர் வழங்கும் மரபும், பெரும்பான்மையும் ஐந்தறிவு மற்றும் ஆறறிவு உயிரினங்களுக்குரிய ஆண்பாற்பெயர், பெண்பாற்பெயர், இளமைப்பெயர் மரபுகளும் இவ் வியலிலேயே தெளிவுபடுத்தப்படுகின்றன. அவற்றைத் திருக்குறளுடன் ஒப்பிட்டு இனி ஆராய்வம்.

## 8.2 உயிர்வகைகள்

### 8.2.1 ஓரறிவுயிர்கள்

உலக உயிரினங்களைப் பாகுபாடு செய்கையில் தொல்காப்பியம்,

ஒன்றறி வதுவே உற்றறி வதுவே (தொல். 1526:1)

என்கிறது. அதாவது தொடுஉணர்ச்சி மட்டுமே உள்ள உயிரினங்கள் ஓரறிவுயிரினவாம்.

புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (தொல். 1527)

என ஓரறிவுயிர்களுக்கு எடுத்துக்காட்டுகளும் தருகின்றது தொல்காப்பியம். புல் முதலியன புறக்காழன; மரம் முதலியன அகக்காழன. *பிற* என்பதனால் செடி கொடி முதலியனவற்றையும் கொள்ளலாம் என்பார் உரையாசிரியர்.[1]

> பிறப்பென்பன, மக்களானும் விலங்கானும் ஈன்ற குழவி ஓரறிவின ஆகிய பருவமும், எஞ்ஞான்றும் ஓரறிவினவே ஆகிய என்பில் புழுவுமென இவை.[2]

என உரைப்பார் பேராசிரியர்.

தாவரங்களுக்கும் உயிருண்டு என்பதை உணர்ந்து, அவை 'ஓரறிவுயிர்கள்' என ஆராய்ந்து பகுத்த பண்டைத் தமிழரின் திறம் போற்றுதற்குரியது. கி. பி. 19-ஆம் நூற்றாண்டில்தான் சகதீச சந்திரபோசு அவர்கள் தாவரங்களுக்கும் உயிருண்டு என்பதை அறிவியல் துணையுடன் நிறுவியுள்ளார்கள் என்பதும் கருதத்தக்கது.

திருக்குறளில் அமை, அலகு, எள், கரும்பு, குவளை, நெருஞ்சி, பசும்புல், பனை, வள்ளி முதலிய புல்லினத்தனவும் அனிச்சம்[3], நச்சுமரம், பயன் மரம், முள்மரம் முதலிய மர இனத்தனவும் உவமை வகையான் குறிப்பிடப்பட்டுள்ளன.[4]

> விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
> பசும்புல் தலைகாண் பரிது (குறள். 16)

என்னும் குறளில், 'பசும்புல் தலைகாண் பரிது' என்னும் தொடர், ஓரறிவினதாகிய பசும்புல்லும் தலை காட்டுதல் அரிது என்னும் பொருளை உள்ளடக்கியதாக விளங்குகின்றது.

> ஓர் அறிவு உயிரும் இல்லை என்பதாம்[5]

எனப் பரிமேலழகர் இக்குறளின் உரை விளக்கத்தில் கூறி இருப்பதும் இங்குக் கருதத்தக்கது.

பொதுவாக, திருக்குறளில் இவை இன்ன அறிவுடையவை என்ற பாகுபாடு வெளிப்படையாக எங்கும் அமையவில்லை; உய்த்துணரும் வகையானே அமைந்துள்ளன.

### 8.2.2 ஈரறிவுயிர்கள்

தொடு உணர்வும் சுவை உணர்வும் ஆகிய இரண்டு உணர்வுகளை மட்டுமே கொண்ட உயிரினங்களை **ஈரறிவுயிர்கள்** என்பர்.

> இரண்டறி வதுவே அதனொடு நாவே (தொல். 1526:2)

என்பது தொல்காப்பியம்; மேலும்,

> **நந்தும் முரளும்** ஈரறி வினவே
> பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (தொல். 1528)

என எடுத்துக்காட்டும் தருகிறது. இவற்றொடு சங்கு, நத்தை, அலகு, நொள்ளை, சிப்பி, கிளிஞ்சில், ஏரல் முதலியனவற்றையும் கொள்ளலாம் என்பார் இளம் பூரணர்.[6] கிளிஞ்சில், முற்றில் (மட்டிச் சுண்ணாம்பு) ஆகியவற்றையும் கொள்ளலாம் என்பார் பேராசிரியர்.[7] மேலும், பிறப்பு என்பதனால் மக்கள் குழவி, விலங்கின் குழவி ஆகியவை ஈரறிவு உடையவாம் பருவமும் கொள்ள லாம் என்பது பேராசிரியரின் கூற்று.

எலும்பில்லாத புழுவை ஓரறிவுயிராகப் பேராசிரியர் கருதுவதால், ஈரறிவுயிர் ஒன்றுகூட வள்ளுவத்தில் இடம் பெறவில்லை எனலாம்.

### 8.2.3 மூவறிவுயிர்கள்

> மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே (தொல். 1526:3)

> **சிதலும் எறும்பும்** மூவறி வினவே
> பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (தொல். 1529)

என்பன தொல்காப்பியம். அதாவது, உற்றறி உணர்வு, சுவை உணர்வு, நாற்றம் அறி உணர்வு ஆகிய மூன்று மட்டுமே கொண்ட உயிர்களை **மூவறிவுயிர்கள்** என்பர். கரையான், எறும்பு போல்வன மூவறிவுயிர்கள் என்பது தொல்காப்பியம்.

> இவற்றுக்குக் கண்ணுஞ் செவியுமின்மை எற்றால் அறிதுமெனின்,—ஒன்று தாக்கியவழியன்றி அறியா மையிற் கண்ணில வென்பதறிதும்; உரப்பியவழி ஓடாமையிற் செவியிலவென்பதறிதும்[8]

என இவற்றை அறியும்வகை உரைப்பார் பேராசிரியர்.

பிற என்பதற்கு ‘அட்டை முதலியன’ என இளம் பூரணரும்[10], ‘ஈயன் மூதாய் போல்வன’ எனப் பேரா சிரியரும்[11] விளக்கம் தந்துள்ளனர். மேலும், ‘பிறப் பென்பன, முற்கூறியவாறே மக்கட் குழவியும் விலங்கின் குழவியும் இம்மூன்றுணர்வாகிய பருவத்தனவும் அட்டை முதலாகியவும் எல்லாமும் கொள்க’ என்பார் பேராசிரியர்.[12]

திருக்குறளில் மூவறிவுயிரினங்களில் ஒன்றுகூட இடம் பெறவில்லை.

## 8.2.4 நான்கறிவுயிர்கள்

மூவறிவுயிர்களுக்கு உள்ள உற்றறி உணர்வு, சுவையறி உணர்வு, நாற்றம் அறி உணர்வு ஆகிய மூவகை உணர்வுகளோடு கண்ணினால் ஆகிய பார்வை உணர்வும் உடைய உயிர்களை **நான்கறிவுயிர்கள்** என்பர். நண்டு, தும்பி போல்வன நான்கறிவுயிர்களாம்.

நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே (தொல். 1526:4)

நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (தொல். 1530)

என்பன தொல்காப்பியம்.

பிறவும் என்றதனால் ஞிமிறு, சுரும்பு, வண்டு, தேனீ, குழவி ஆகியனவற்றையும், பிறப்பென்றதனால் மக்கள் குழவியும் விலங்கின் குழவியும் இந்நான்கு உணர்வாகிய பருவத்தனவும் கொள்ளலாம் என்பார் உரையாசிரியர்.[13]

நான்கறிவுயிர்கள் குறளில் இடம் பெறவில்லை.

## 8.2.5 ஐந்தறிவுயிர்கள்

நான்கறிவு உயிர்களுக்குரிய நான்குவகை உணர்வு களோடு கேள்வி உணர்வும் உடைய உயிர்களை **ஐந்தறிவுயிர்கள்** என்பர்.

ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே (தொல். 1526:5)

என்பது தொல்காப்பியம்; அவற்றிற்குரிய எடுத்துக் காட்டுகள் காட்டும் போது,

மாவும் புள்ளும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (தொல். 1531)

என உரைக்கின்றது. இந்நூற்பாவின்படி, விலங்கினங்களும் பறவை இனங்களும் **ஐந்தறிவுயிர்கள்** என்பது முன்னோர் கண்ட தெளிவு என அறியலாம்.

பிற ஆவன தவழ்வனவற்றுள் பாம்பு முதலாயின வும் நீருள் வாழ்வனவற்றுள் மீனும் முதலையும் ஆமையும் முதலாயினவுங் கொள்ளப்படும் [14]

என்பார் இளம்பூரணர். இந்நூற்பாவில் **புள்ளும்** என்னும் சீருக்குப் பதிலாக **மாக்களும்** என்னும் சீரைக் கொள்ளும் பேராசிரியர்,

மாக்களெனப்படுவார் — மனவுணர்வில்லாதார் [15]

எனப் பொருளும் தருகின்றார். மேலும்,

கிளையென்பன — எண்கால் வருடையும்
குரங்கும் போல்வன...பிறப்பென்பன-
கிளியும் பாம்பும் முதலாயின [16]

என்றும் உரைக்கின்றார்.

ஐந்தறிவு உயிர்களுள் குறளில் வருவன வருமாறு: பாம்பு முதலிய ஊர்வன; ஆமை, மீன், முதலை ஆகிய நீந்துவன: ஆ (பெற்றம்), கவரிமான், குதிரை, சிங்கம், தகர், நரி, பகடு, பிணை, புலி, யானை ஆகிய நடப்பன; அன்னம், காக்கை, கூகை, கொக்கு ஆகிய பறப்பன.

மேற்சுட்டிய ஐந்தறிவு உயிர்களுள் பெரும்பான்மையும், உவமை முகத்தான் பயன்படுத்தப்படுபவை. உவமைக்காகக் கொள்ளப்படும் இவற்றின் செயல்கள் பெரும்பான்மையும் உடல் வலிமை, வலிமை இன்மை, மானம், உறுதி முதலாய நிலைகளில் உவமைகளாக்கப்பட்டுள்ளன; ஐந்தறிவு உயிர்களொடு தொடர்புடைய மனிதனின் செயல் நிலைகள் (தாக்கல், பிடித்தல், பார்த்தல், செயற்கை ஒப்பனை, இரக்கம் காட்டல் முதலியன) வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இவைபோன்ற

காரணங்களால் ஐந்தறிவு உயிரினங்களின் ஐம்புல உணர்வுகள் குறளில் உயிரினங்களோடு தொடர்புபட்ட நிலையில் வெளிப்படுத்தப்படவில்லை. இவ்வுயிரினங்களின் செயல்களாகக் குறிக்கப்படுவனவற்றால் ஒரு சில பொறிகளை உய்த்துணர முடிகின்றது.

தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று (குறள். 931)

என்னும் குறளில் வரும் **விழுங்கியற்று** என்னும் தொடரால் விழுங்குதற்குப் பயன்படும் **வாய்** என்னும் பொறியை-அதன்வழி சுவையுணர்வு மீனுக்கு உண்மையை உய்த்துணரலாம். இவ்வாறு உய்த்துணரும் வகையில் திருக்குறளில் சில குறள்கள் அமைந்துள்ளன.[17]

மனிதன் மனத்தின் திண்மையால், ஐம்புலன்களையும் அடக்கியாள வேண்டும் - அவற்றின் வகை தெளிந்து அவற்றை ஆளவேண்டும் எனக் கூறுமிடத்து வள்ளுவர் ஐம்புலன்கள் யாவை எனக் குறிப்பிடுகின்றார்.

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்து (குறள். 27)

என்பது அத்தொடர். தொல்காப்பியம் கூறும் உயிர்ப் பாகுபாட்டு முறையுற இதன்கண் வைப்புமுறை இடம் பெறவில்லை. அவ்வாறு அமைய வேண்டுமானால்,

ஊறுசுவை நாற்றமொளி ஓசையென் றைந்தின்

என்றிருக்க வேண்டும். யாப்பருங்கலக்காரிகை காட்டும் இலக்கணப்படி இவ்வடி வெண்பாவிற்குரியதே. எனினும், தொல்காப்பியம் கூறும் வரையறையின்படி இவ்வடி வெண்பாவிற்கு உரிய அடி அன்று. அதாவது **ஊறுசுவை** என்னும் சீர் நேர்புநிரை என நின்று ஆசிரிய உரிச்சீராகி, வெண்பாவில் இடம் பெறாத சீராகின்றது. ஆகவே, தொல்காப்பியம் கூறும் சீரியைபு நோக்கிச் 'சுவையொளி யூறோசை நாற்றம்' என அமைத்திருக்கலாமோ எனக் கருத இடமுளது. இவ்வைந்தையும் 'ஐந்தடக்கல்' (குறள். 126) என்னும் தொடரில் குறிப்பானும் உணர்த்துகின்றார் வள்ளுவர். எனவே, உயிர்வகைப் பாகுபாட்டைப் பற்றிய மரபு வழித்தான தெளிவு நிலை வள்ளுவர் பெற்றிருந்தார் என்பது புலனாகின்றது.

### 8.2.6 ஆறறிவுயிர்கள்

உயிரின வகைகளுள் இறுதிப் பிரிவு இது. உயிரினத்துள் ஏற்றமும் எடுப்பும் பெற்று விளங்கும் மனிதன் ஆறறிவு உயிரினன் என்பது ஆன்றோர் முடிபு. ஐந்தறிவு உயிர்களுக்குள்ள உற்றறியும் உணர்வு, சுவை உணர்வு, நாற்றம் அறி உணர்வு, காட்சி உணர்வு, கேள்வி உணர்வு ஆகியவற்றொடு மனம் அல்லது எதையும் பகுத்தறியும் அறிவும் பெற்று விளங்குவதே ஆறறிவு உயிர்.

> ஆறறி வதுவே அவற்றொடு மனனே (தொல். 1526:6)
>
> மக்கள் தாமே ஆறறி வுயிரே (தொல். 1532:1)

என்பன தொல்காப்பியம். **ஆறறிவுயிர்கள்** என மக்கள் இனத்தை மட்டும் சொல்லாமல்,

> பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே (தொல். 1532:2)

எனவும் குறிப்பிடுகின்றது தொல்காப்பியம். இங்குப் **பிற** என்பது ஆராயத்தக்க ஒன்றாகும்.

> பிறவாவன தேவர், அசுரர், இயக்கர் முதலாயி
> னோர் பிறப்புக்கள் [18]

என்பார் இளம்பூரணர். இவருடைய உரையில்,

> ஒருசார் விலங்கும் உளவென மொழிப

என்னும் ஒரு நூற்பா அடுத்து அமைந்துள்ளது. அதற்கு இவர்,

> விலங்கினுள் ஒரு சாரனவும் ஆறறிவுயிராம்
> என்றவாறு.
> அவையாவன கிளியுங் குரங்கும் யானையும்
> முதலாயின [19]

எனப் பொருளும் எடுத்துக்காட்டும் தருகின்றார்.

> கிளையெனப் படுவார் தேவரும் தானவரும் முதலாயினார். பிறப்பென்றதனாற், **குரங்கு முதலாகிய விலங்கினுள் அறிவுடையனவெனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராயடங்குமென்பது** [20]

என்பார் பேராசிரியர். தேவர், அசுரர், இயக்கர் முதலியோரைக் கற்பனையாளர் எனக் கொண்டால், அறிவுடைய குரங்கு, கிளி முதலியவற்றையும் ஆறறிவுயிர்

களாகக் கொண்டுள்ளனர் என்பது தெளிவு. பிற என்ப தில் மனிதக்குரங்கு, டால்பின்சு ஆகியவற்றையும் கொள்ளலாம்.

மனிதன் ஆறறிவு உடையவன் என்பது திருக்குறளில் தெளிவாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் (குறள். 65)

என்னும் குறள்தொடர் மனிதனுக்கு உற்றறியும் உணர்வு உள்ளதை வெளிப்படுத்துகின்றது;

மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு (குறள். 65)

செவியின் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள் (குறள். 420)

எனவரும் தொடர்கள் மக்களுக்குக் கேள்வியுணர்வும் சுவையுணர்வும் உடைமையை உணர்த்துகின்றன;

கண்ணோ, டியைந்துகண் ணோடா தவர் (குறள். 576)

என்னும் தொடர் மக்களுக்குக் காட்சியுணர்வு உள்ள மையை உணர்த்துகின்றது.

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே வுலகு (குறள். 27)

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின் (குறள். 126)

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர் (குறள். 410)

எனவரும் குறள்களும் தொடரும் மக்களுக்கு ஐம்புல உணர்வுகள் உள்ளமையை வெளிப்படுத்துகின்றன.

மக்களுக்குரிய ஆறாவது அறிவு எல்லாவற்றையும் பகுத்தறியும் மன உணர்வுகளை வெளிப்படுத்துவது.

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பில் லவர்க்கு (குறள். 79)

உறுப்பொத்தல் மக்கள்ஒப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு (குறள். 993)

எனவரும் குறள்கள் மனவுணர்வின் ஒருசில பண்புகளை வெளிப்படுத்துகின்றன. ஆகவே, ஆறுவகை அறிவுகளும் குறளில் வெளிப்படல் தெளிவு.

### 8.2.7 உயிரினப்பாகுபாடு—உணர்வுகள்—உயிரினங்கள்

| வரிசை எண் | உயிரினப்பாகுபாடு | உணர்வுகள் | தொல்காப்பியர் காட்டும் உயிரினங்கள் | உரையாசிரியர்கள் குறிப்பிடும் உயிரினங்கள் |
|---|---|---|---|---|
| 1 | ஓரறிவு உயிர் | உற்றறி உணர்வு | புல், மரம், பிற | செடி, கொடி, மக்கள் விலங்குகள் ஈன்ற குழவி ஓரறிவின ஆகிய பருவம், எலும்பில்லாத புழு |
| 2 | ஈரறிவு உயிர் | உற்றறி உணர்வு நாவுணர்வு | நந்து, முரள், பிற | சங்கு, அலகு, நொள்ளை, கிளிஞ்சில், ஏரல், மட்டிச்சுண்ணாம்பு, மக்கள் விலங்குகள் ஈன்ற குழவி ஈரறிவின ஆகிய பருவம் |
| 3 | மூன்றறிவு உயிர் | உற்றறி உணர்வு நாவுணர்வு நாற்றவுணர்வு | சிதல் (கரையான்), எறும்பு, பிற | செல், ஈசல், அட்டை, மக்கள் விலங்குகள் ஈன்ற குழவி மூன்று அறிவின ஆகிய பருவம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 4 | நான்கறிவு உயிர் | உற்றறி உணர்வு<br>நாவுணர்வு<br>நாற்றவுணர்வு<br>காட்சியுணர்வு | நண்டு, தும்பி, பிற | வண்டு, ஈ, ஞிமிறு, சுரும்பு, தேனீ, குழவி, மக்கள் விலங்குகள் ஈன்ற குழவி நான்கு அறிவின ஆகிய பருவம் |
| 5 | ஐந்தறிவு உயிர் | உற்றறி உணர்வு<br>நாவுணர்வு<br>நாற்றவுணர்வு<br>காட்சியுணர்வு<br>கேள்வியுணர்வு | மா, புள், பிற<br>— இளம்.<br><br>மா, மாக்கள், பிற<br>— பேரா. | ஆமை, எண்கால் வருடை, குரங்கு, மீன், முதலை, பாம்பு, வெளவால், மனவுணர்ச்சி அற்ற மக்கள் |
| 6 | ஆறறிவு உயிர் | உற்றறி உணர்வு<br>நாவுணர்வு<br>நாற்றவுணர்வு<br>காட்சியுணர்வு<br>கேள்வியுணர்வு<br>மனனுணர்வு | மக்கள், பிற<br>— பேரா.<br><br>மக்கள், விலங்கு, பிற<br>— இளம். | தேவர், அசுரர், இயக்கர், குரங்கு, கிளி முதலியன |

### 8.2.8 தொல்காப்பியம் காட்டும் உயிரினப்பாகுபாடும் திருக்குறளில் இடம்பெறும் உயிரினங்களும்

| வரிசை எண் | தொல்காப்பியம் காட்டும் உயிரினப்பாகுபாடு | திருக்குறளில் இடம்பெறும் உயிரினங்கள் |
|---|---|---|
| 1 | ஓரறிவு உயிர் | |
| | 1. புல் | அமை, அலகு, எள், கரும்பு, குவளை, நெருஞ்சி, பசும்புல், பனை, வள்ளி |
| | 2. மரம் | அனிச்சம், நச்சுமரம், பயன்மரம், முள்மரம் |
| 2 | ஈரறிவு உயிர் | — |
| 3 | மூவறிவு உயிர் | — |
| 4 | நான்கறிவு உயிர் | — |
| 5 | ஐந்தறிவு உயிர் | |
| | 1. ஊர்வன | பாம்பு |
| | 2. நீந்துவன | ஆமை, மீன் |
| | 3. நடப்பன | ஆ(பெற்றம்), கவரிமான், குதிரை, சிங்கம், தகர், நரி, பகடு, பிணை, புலி, யானை |
| | 4. பறப்பன | அன்னம், காக்கை. கூகை, கொக்கு |
| 6 | ஆறறிவு உயிர் | மனிதன், தேவன் |

### 8.3 ஓரறிவுயிர்கள்

உயிர்வகைகளுள் உற்றறியும் உணர்வு மட்டும் உடையன ஓரறிவு உயிர்கள். இந்த ஓரறிவு உயிர்களைப் புறக்காழன என்றும், அகக்காழன என்றும் இருவகையாகப் பாகுபாடு செய்வர். இப்பாகுபாடு பெரும்பான்மையும் அவற்றிலுள்ள காழ் (வயிரம்) அடிப்படையில் அமைவதாகும்.

#### 8.3.1 புறக்காழன

ஓரறிவு உயிர்களுள் (பெரும்பான்மையும்) புறத்தில் வயிரம் வாய்த்து, அகத்தே வயிரம் அற்றனவற்றைப் புறக்காழன என்பர்; இவற்றைப் புல் என்றும் கூறுவர்.

புறக்கா ழனவே புல்லெனப் படுமே (தொல். 1585:1)

என்பது தொல்காப்பியம். கமுகு, தென்னை, பனை, மூங்கில் போல்வன இவ்வகையைச் சேர்ந்தவை.

அகத்தும் புறத்தும் வயிரம் அற்ற வாழை, ஈந்து, தாமரை, கழுநீர் போல்வனவும் புல்லும் கொடிவகைகளுள் பெரும்பான்மையும் புல் எனப் பெயர் பெறும் என்பர்.[21]

புல் எனத் தழுவிக் கொள்ளத்தக்கனவாக ஊகம் புல், சீழகம்புல், பஞ்சாய், புழற்கால், ஆம்பல் முதலிய வற்றை உரைப்பார் பேராசிரியர்.[22]

தாழையையும் இவ்வகையுள் அடக்குவார் இளம்பூரணர்.

> தாழை பூவுடைத் தாகலானும் கோடுடைத்தாக லானும் புறவயிர்ப்பின்மையானும் மரமெனப்படு மாயினும் புல் என்றல் பெரும்பான்மை [23]

என்பார் அவர்.

திருக்குறளில் வயிரம் உள்ளவை, வயிரம் அற்றவை என்ற பாகுபாடு பற்றிய குறிப்புகள் ஏதும் இடம்பெற வில்லை. என்றாலும், புறக்காழனவாகக் கொள்ளத்தக்க உயிரினப் பெயர்கள் சில இதில் இடம்பெற்றுள்ளன. அவை வருமாறு: அலகு, கரும்பு, குவளை, பசும்புல், பனை, புதல், பைங்கூழ், மூங்கில் (அமை, வேய்), வள்ளி.

### 8.3.1.1 புல்லின் உறுப்புகள்

புல் வகைகளின் உறுப்புகளாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடுகின்றது தொல்காப்பியம் (தொல். 1586).




படம் : 20.

இவற்றொடு குரும்பை, நுங்கு, நுகும்பு, போந்தை முதலியனவற்றையும் புல்வகை உறுப்புகளாகக் குறிப்பிடுவார் பேராசிரியர்.[24]

### 8.3.1.1.1 மடல்

தொல்காப்பியம் குறிப்பிடும் புல்வகை உறுப்புகளுள் **மடல்** என்னும் பெயர் மட்டுமே குறளில் இடம் பெற்றுள்ளது.

சங்கத் தொகைநூல்களில் மடல் என்னும் உறுப்பு ஈந்து, காந்தள், சேம்பல், தாழை, தென்னை, பனை, வாழை ஆகிய புல் இனங்களுக்குரியதாக வழங்கப்பட்டுள்ளது.

கொழுமடல்... ஈந்து (பெரும். 86-88)

காந்தள் கொழுமடல் (அகம். 138:17-18)

குழற்கால் சேம்பின் கொழுமடல் (அகம். 336:1)

தாழைமடல் (அகம். 330:13)

தெங்கின் வாடுமடல் (பெரும். 353)

பனைத்தலைக் கருக்குடை நெடுமடல் (குறுந். 372:1)

வாழைக் கொழுமடல் (நற். 309:4-5)

பனை மடலால் ஆகிய குதிரையைக் கொண்டு, அகத்தில், களவுக்காலத் தலைமகன் மடல் ஊர்வதையும் **மடல்** என வழங்குவர் சங்கச் சான்றோர்:

மாமேலேன் என்று மடல்புணையா நீந்துவேன் (கலி.139:15)

மாவென மதித்து மடலூர்ந் தாங்கும் (நற். 342:1)

திருக்குறள் மடல் என்னும் சொல்லால், இவ்வகை அகத்துறை மடலையே சுட்டுகின்றது (குறள்கள். 1131-1133, 1135-1137)

### 8.3.2 அகக்காழன

ஓரறிவு உயிர்களுள் அகத்தில் வயிரம் வாய்த்து, புறத்தில் வயிரம் அற்றனவற்றுள் பெரும்பாலானவற்றை அகக்காழன—மரம் என்பர்.

அகக்கா ழனவே மரமென மொழிப (தொல். 1585 : 2)

என்பது தொல்காப்பியம்.

இருப்பை, புளி, ஆச்சா போன்றவை இவ்வகைப் பிரிவைச் சேர்ந்தவை என்பார் பேராசிரியர்.[25]

அகக்காழ், புறக்காழ் இல்லாதனவற்றுள் முருக்கு, தணக்கு போல்வன மரம் எனப்படும் என்பார் இளம்பூரணர்.[26]

இடையிடையே பொய்பட்டு விளங்கும் அகில் மரம் போல்வனவும் மரமென அடங்கும் என்பார் பேராசிரியர்.[27] மேலும் அவர் பிடா, காயா முதலிய புதல்களும் பிரம்பு முதலாகிய கொடிகளும் மரம் எனப்படும் என்பார்.[28]

திருக்குறளில் வழங்கப்படும் மரவகை உயிரினங்கள் வருமாறு:

அனிச்சம், நச்சுமரம், பயன்மரம், முள்மரம்.

### 8.3.2.1 பூவின் பருவங்கள்

தாவரங்களின் இனப்பெருக்கத்திற்கு அடிப்படையாக விளங்குவனவற்றுள் பூவும் ஒன்று. இப்பூவின் பருவங்களைப் பின்வருமாறு பகுக்கலாம்:




படம்: 2 1

பூவின் தோற்ற நிலை அரும்பு எனப்படும். நாள் பூக்களுள் மாலையில் மலர்வன காலையில் அரும்பு விடும்; காலையில் மலர்வன முதல்நாள் இரவில் அரும்புவிடும்.

மொக்குள் என்பது பூவின் இரண்டாவது நிலை. இதனை மொட்டு என்பர்.

மாரி மொக்குள் புடைக்கும் நாட! (ஐங். 275 : 3)

நீருள் பட்ட மாரிப் பேருறை
மொக்குள் அன்ன (புறம். 333 : 1-2)

எனவரும் சங்க இலக்கியத் தொடர்களுள் மொக்குள் என்பது நீர்க்குமிழைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இச்சொல், வெய்யில் சூட்டினால் காலில் உண்டாகும் கொப்புளத்தையும் சுட்டப்பயன் படுத்தப்பட்டுள்ள மையை,

அரக்குருக் கன்ன செந்நிலன் ஒதுங்கலின்
பரற்பகை யுழந்த நோயொடு சிவணி
மரற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்குள்
நன்பகல் அந்தி நடையிடை விலங்கலின்
(பொருந. 43-46)

என்னும் அடிகளால் அறியமுடிகிறது. ஆகவே நீர்க்குமிழ், கொப்புளம் இவற்றொடு வடிவொப்புமை உடைய பூவின் நிலையை மொக்குள் எனலாம். சங்கத் தொகை நூல்களிலேயே நீர்க்குமிழும் மொக்குளும் ஒப்பிட்டு நோக்கப்பட்டுள்ளமையை,

நிறைச்சுனை தோறும்
துளிபடு மொக்குள் துள்ளுவன சாலத்
தொளிபொரு பொகுட்டுத் தோன்றுவன மாய
(அகம். 324 : 6-8)

எனவரும் அடிகளால் அறியலாம்.

முகை என்பது பூவின் மூன்றாம் நிலை; பூ மூடிய நிலையில் உள்ளதை முகை என்றனர்; முகையின் கூம்பிய நிலை மகளிரின் குவிந்த முலைக்கு உவமையாக்கப் பட்டுள்ளது:

முகைத் தன்ன குவிமுலை (அகம். 140 : 11)

முகைவாய்த்த முலை (கலி. 68 : 14)

யாணர்க் கோங்கின் அவிர்முகை யெள்ளிப்
பூணகத் தொடுங்கிய வெம்முலை (சிறு. 25-26)

முகை வாய் அவிழ்ந்தே பூவின் அடுத்தநிலை ஏற்படு கிறது என்பதை,

முகை தலை திறந்த (அகம். 105 : 16)

முகைவா யவிழ்ந்த (முருகு. 139)

குவிமுகை யவிழ்ந்த முல்லை (சிறு. 29-30)

முகைமலர்ந் தன்ன (குறுந். 62 : 1)

முகை யவிழ்ந்த (அகம். 144 : 4)

எனவரும் சங்கத் தொடர்கள் உணர்த்துகின்றன.

பூவின் வளர்ச்சி நிலையில், முகையை அடுத்த நிலை போது. போது என்பது சங்கத் தொகைநூல்களில் பூவின் இருவகை வளர்ச்சி நிலைகளுக்குரிய பெயராக விளங்குகிறது.

போதவிழ் அலர் (அகம். 4 : 16)

போதவிழ் புன்னை (நற். 74 : 6, 327 : 7-8)

போதவிழ் குவளை (நெடு. 83)

போதவிழ் புதுமலர் (மது. 564)

போதுபொதி உடைந்த ஒண்செங் காந்தள் (நற். 176 : 6)

போதுவாய் அவிழ (அகம். 150 : 9)

என்பன போலவரும் தொடர்களால், போது என்பது முகை எனக்கருத இடமுளது.

கடவுட்கயத் தமன்ற சுடரிதழ்த் தாமரைத்
தாதுபடு பெரும்போது புரையும் வாண்முகத்து
(மது. 710-711)

அரும்பவிழ் அலரிச் சுரும்பணி பல்போது (நற். 214 : 4)

என்பன போலவரும் தொடர்கள் போது என்பதற்கு மலர்(!) என்னும் பொருள் தருகின்றன. முகையும் போதும் வேறுவேறு என்பதை,

வான்முகை
இரும்போது கமழுங் கூந்தல் (நற். 298 : 10-11)

என்னும் தொடர் உணர்த்துகின்றது; போது என்பது மலர்ச்சியின் தொடக்க நிலை - முகை அவிழும் நிலை எனக் கருதலாம். இக்கருத்திற்கு,

குவளை
எதிர்மலர் இணைப்போது அன்னதன்
அரிமதர் மழைக்கண் (அகம். 381 : 19-21)

எனவரும் சங்கத் தொடர் சான்று பகர்கின்றது.

மலர் என்பது மலர்ச்சியின் இரண்டாவது நிலை. இந்நிலைதான் சங்கத் தொகைநூல்களில் பெரும்பாலும் மகளிரின் கண்களுக்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

அலர் என்பது மலர்ச்சியின் மூன்றாவது நிலை. பூ நன்றாக மலர்ந்து விரிந்த நிலை.

விரிஅலர்ப் புன்னை (குறுந். 351 : 5-6)

என்னும் தொடர் இக்கூற்றுக்குத் தக்க சான்றாக அமைகின்றது.

வீ என்பது பூவின் அடுத்த நிலை. இதனை மலரின் வாடுநிலை என்பர்.[29] சங்க இலக்கியங்கள் பெரும்பான்மையும் இந்நிலையைப் பூ உதிரும் தன்மையொடு தொடர்புபடுத்திக் காட்டியுள்ளன:

உகுதேறுவீ (பொருந. 200)

கொல்லன்
எறிபொற் பிதிர்விற் சிறுபல் காய
வேங்கை வீயுகும் ஓங்குமலை (நற். 13 : 5-7)

நறுவீ ஞாழல் மாமலர் தாஅய்ப்
புன்னை தனைந்த வெண்மணல் (நற். 96 : 1-2)

வெள்ளி யன்ன வொள்வீ யுதிர்ந்து (மது. 280)

வீ என்பதற்கு அடுத்த நிலை செம்மல். இது பூவின் வாடிய நிலை; வதங்கிய நிலை.

குயில்குடைந் துதிர்த்த, புதுப்பூஞ் செம்மல் (சிறு. 4-5)

பல்பூஞ் செம்மல் காடுபய மாறி (பதிற். 30 : 26)

கரிபரந் தன்ன காயாஞ் செம்மல் (அகம். 133 : 8)

என்னும் சங்கத் தொடர்கள் பூவின் செம்மல் பருவத்தை ஓரளவு எடுத்துரைக்கின்றன. பூவின் பருவ நிலைகளுள் அடிப்படையான மூன்றைப் பருவ முறையுற நிரல் படுத்திக் காதல் நோயுடன் ஒப்பிட்டு,

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய் (குறள். 1227)

என இயைபுறக் கூறுகின்றது வள்ளுவம்.

## 8.4 ஆண்பால் பெயர்கள்

உலகத்து உயிரினங்களுள் ஆணினம், பெண்ணினம் என்னும் இருவேறு பாகுபாடுகள் உண்டு; ஓரறிவு உயிர்களிடத்தும் இந்தப் பாகுபாடு உண்டு; ஆறறிவு உயிர்களிடத்தும் இந்தப் பாகுபாடு உண்டு. இவற்றை இன்றைய அறிவியல் தெளிவுறப் பாகுபடுத்துகின்றது.

பண்டைத் தமிழ்ச் சான்றோர்களும் இவ்வுண்மையைத் தெளிவாக உணர்ந்திருத்தல் கூடும். இதனைச் சங்க இலக்கியப் பாடல்களின் வழியாக உய்த்துணர முடிகின்றது. தொல்காப்பியம் ஓரறிவு உயிர் முதல் நான்கறிவு உயிர்கள் வரை உள்ள உயிர் இனங்களுள் ஆண் பெண் பெயர்ப்பாகுபாடு எவ்வெவ்வாறு அமைந்திருந்தது என்பதை ஓரளவே தெளிவு செய்து உரைக்கின்றது; ஐந்தறிவு உயிர்களுள் காணும் ஆண் பெண் பெயர் மரபுக்கே சிறப்பிடம் தந்துள்ளது. அவற்றுள், தொல்காப்பியம் ஆண்பால் பெயர்களாகப் பின்வரும் பெயர்களைக் குறிப்பிடுகின்றது:

> அப்பர், இரலை, உதள், ஏற்றை, ஏறு, ஒருத்தல், கடுவன், கண்டி, கலை, களிறு, சே, சேவல், தகர், போத்து, மோத்தை

இவற்றின் பெயர்—உயிரின அடைவு விவரம் வருமாறு:

### 8.4.1 தொல்காப்பியம் கூறும் ஆண்பால் பெயர்கள் - உயிர் இனங்கள்

| ஆண்பால் பெயர் | உயிர் இனம் | நூற்பா எண் |
|---|---|---|
| அப்பர் | யாடு | 1547 |
| இரலை | புல்வாய் | 1544 |
| உதள் | யாடு | 1547 |
| ஏற்றை | ஆற்றலொடு புணர்ந்த ஆண்பால் | 1549 |
| ஏறு | உழை | 1538 |
| | எருமை | 1539 |

| ஆண்பால் பெயர் | உயிர் இனம் | நூற்பா எண் |
|---|---|---|
| | கவரி | 1538 |
| | சுறவு | 1540 |
| | பன்றி | 1538 |
| | புல்வாய் | ,, |
| | பெற்றம் | 1539 |
| | மரை | ,, |
| ஒருத்தல் | உழை | 1535 |
| | எருமை | 1537 |
| | கராம் | 1535 |
| | கவரி | ,, |
| | புல்வாய் | ,, |
| | புலி | ,, |
| | மரை | ,, |
| | யானை | 1536 |
| கலை | உழை | 1545 |
| | புல்வாய் | 1544 |
| | முசு | 1546 |
| களிறு | கேழல் | 1534 |
| | வேழம் | 1533 |
| சேவல் | மயில் அல்லாத பிற சிறகுடைய பறவைகள் | 1548 |
| தகர் | யாடு | 1547 |
| போத்து | எருமை | 1541 |
| | எழால் | 1543 |
| | நீர்வாழ் சாதியுள் அறுபிறப்பு | 1542 |
| | புல்வாய் | 1541 |
| | புலி | ,, |
| | பெற்றம் | ,, |
| | மயில் | 1543 |
| | மரை | 1541 |
| மோத்தை | யாடு | 1547 |

## 8.4.2 தொல்காப்பியம் கூறும் உயிர் இனங்கள் - ஆண்பால் பெயர்கள்

| உயிர் இனம் | ஆண்பால் பெயர் | நூற்பா எண் |
|---|---|---|
| ஆற்றலொடு புணர்ந்த ஆண்பால் | ஏற்றை | 1549 |
| உழை | ஏறு | 1538 |
| | ஒருத்தல் | 1535 |
| | கலை | 1545 |
| எருமை | ஏறு | 1539 |
| | ஒருத்தல் | 1537 |
| | போத்து | 1541 |
| எழால் | ,, | 1543 |
| கராம் | ஒருத்தல் | 1535 |
| கவரி | ஏறு | 1538 |
| | ஒருத்தல் | 1535 |
| கேழல் | களிறு | 1534 |
| சுறவு | ஏறு | 1540 |
| நீர் வாழ் சாதியுள் அறுபிறப்பு | போத்து | 1542 |
| பன்றி | ஏறு | 1538 |
| புல்வாய் | இரலை | 1544 |
| | ஏறு | 1538 |
| | ஒருத்தல் | 1535 |
| | கலை | 1544 |
| | போத்து | 1541 |
| புலி | ஒருத்தல் | 1535 |
| | போத்து | 1541 |
| பெற்றம் | ஏறு | 1539 |
| | போத்து | 1541 |
| மயில் | ,, | 1543 |
| மயில் அல்லாத பிற சிறகுடைய பறவைகள் | சேவல் | 1548 |

| உயிர் இனம் | ஆண்பால் பெயர் | நூற்பா எண் |
|---|---|---|
| மரை | ஏறு | 1539 |
| | ஒருத்தல் | 1535 |
| | போத்து | 1541 |
| முசு | கலை | 1546 |
| யாடு | அப்பர் | 1547 |
| | உதள் | ,, |
| | தகர் | ,, |
| | மோத்தை | ,, |
| யானை | ஒருத்தல் | 1536 |
| வேழம் | களிறு | 1533 |

திருக்குறளில் ஏறு, களிறு, தகர், பகடு என்னும் ஆண்பால் பெயர்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றை ஒவ்வொன்றாகக் காண்போம்:

### 8.4.3 ஏறு

ஏறு என்னும் சொல்லை உழை, எருமை, கவரி, சுறவு, பன்றி, புல்வாய், பெற்றம், மரை ஆகியவற்றின் ஆண் பால் பெயராகத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது:

பன்றி புல்வாய் உழையே கவரி
என்றிவை நான்கும் ஏறெனற் குரிய (தொல். 1538)

எருமையும் மரையும் பெற்றமும் அன்ன (தொல். 1539)

கடல்வாழ் சுறவும் ஏறெனப் படுமே (தொல். 1540)

சங்கத் தொகைநூல்களில் இச்சொல் எருமை, காட்டு எருமை, பன்றி, சிங்கம், மான், இறால், புலி, மரை, இரலை ஆகியவற்றின் ஆண்பால் பெயராகக் குறிப்பிடப் பட்டுள்ளது:

திரிமருப் பிரலை அண்ணல் நல்லேறு (குறுந். 338: 1)

முடங்குபுற இறவின் மோவாய் ஏறு (நற். 211: 5)

எருமை நல்லேறு (ஐங். 93: 1)

ஆமா நல்லேறு (முருகு. 315

தென்பரதவர் போரேறே ! (மது. 144)

குழிநிறுத் தோம்பிய குறுந்தாள் ஏற்றைக்
கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெருகுவீர்
(பெரும். 344-345)

கொல்லை
நெடுங்கை வன்மான் கடும்பகை உழந்த
குறுங்கை இரும்புலி கொலைவல் ஏறு (குறுந். 141: 3-5)

புரிமட மரையான் கருநரை நல்லேறு (குறுந். 317:1)

ஏறுபிரி மடப்பிணை கடுப்ப வேறுபட்டு (நற். 204:9)

திருக்குறளில் **ஏறு** என்னும் சொல் ஈரிடங்களில் வழங்கப்பட்டுள்ளது:

ஏறுபோல் பீடு நடை (குறள். 59)

அரசருள் ஏறு (குறள். 381)

இவ்விரண்டு இடங்களிலும் இச்சொல் சிங்கத்தின் ஆண் பால் பெயரைக் குறித்து நிற்கின்றது.

### 8.4.4 களிறு

யானைகளுள் ஆண் யானையைக் **களிறு** என்பது மரபு:

வேழக் குரித்தே விதந்துகளி றென்றல் (தொல். 1533)

ஆண் பன்றியையும் களிறு என வழங்கும் மரபு இருந்தது என்பதைக்

கேழற் கண்ணும் கடிவரை யின்றே (தொல். 1534)

எனவரும் நூற்பாவால் அறிந்து கொள்கின்றோம்.

சங்கத் தொகைநூல்களில் ஆண்யானை களிறு என்னும் சொல்லால் வழங்கப்பட்டுள்ளது. பெண் யானையினும் ஆண் யானைக்குரிய தனிச் சிறப்புகளாகச் சங்கத் தொகை நூல்கள் வெளிப்படுத்துவனவற்றுள் சில வருமாறு :

1. **வலிமை மிக்கது**

மைந்துமலி சினத்த களிறு (மலை. 260)

2. **கோடு உடையது**

ஏந்துவெண் கோட்டு வயக்களிறு (நற். 205:4)

3. **தலைமகனுக்கு உவமையாக்கப்படுவது**

பிச்சைசூழ் பெருங்களிறு போலவெம்
அட்டில் ஓலை தொட்டனை நின்மே (நற். 300:11-12)

4. **போர்க்களத்துப் படையாகப் பயன்படுவது**

மிளைவலி சிதையக் களிறுபல பரப்பி
அரண்பல கடந்த முரண்கொள் தானை (நற். 150: 2–3)

இவற்றுள் களிறு, போர்க்களத்தில் பெறும் ஏற்றமும் தோற்றமும் வீழ்ச்சியும் குறளில் பெரும்பான்மையும் உவமை நிலை விளக்கம் பெற்றுள்ளன (குறள்கள். 500, 597, 599, 758, 774).

### 8.4.5 தகர்

ஆட்டின் ஆணினத்தைத் தகர் என வழங்கும் மரபு தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே இருந்துள்ளது. சங்கத் தொகைநூல்களில் அதன் நீண்ட கொம்பும் வலிமையும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன:

வார்கோட்டு வயத்தகர் (ஐங். 238: 1)

ஆட்டுக்கிடாக்களை ஒன்றோடு ஒன்று மோதவிட்டு வேடிக்கை பார்க்கும் பொழுதுபோக்கு, பண்டைத் தமிழகத்தில் நிலவியிருந்ததை அறிகின்றோம்.

தகர்கள் ஒன்றோடு ஒன்று போரிடும்போது, உயிரை-விட வெற்றியைக் கருதியே போரிடும்; அவை, பின் வாங்குவது, எதிரியை வலிமையொடு தாக்கி வீழ்த்துவதற்கே.[32] இச் செய்கையே,

ஊக்கம் உடையவன் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து (குறள். 486)

என்னும் குறளில் குறிப்பிடப்படுகின்றது.

### 8.4.6 பகடு

சங்கத் தொகைநூல்களில் **பகடு** என்னும் சொல் ஏறத்தாழ 47 இடங்களில் வழங்கப்பட்டுள்ளது.[33] இச் சொல் ஆண் யானையையும் எருதையும் குறித்துள்ளது.

**பகட்டு ஆ** (பெரும். 325) என்னும் தொடர் பசுவையும் **பகட்டெருது** (பட். 52) என்னும் தொடர் எருதையும் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளன. **பகடு** என்னும் சொல் பெருமை என்னும் பொருளிலும் சங்கத் தொகை நூல்களில் வழங்கப்பட்டுள்ளது.

பகடு பற்றிச் சங்கத் தொகைநூல்களில் அறியப் படுவன: பகடு வலிமை வாய்ந்தது;[34] பீடு நடையை உடையது;[35] வலிமையான கால்களை உடையது;[36] பிடரி உடையது;[37] எத்தகைய இடையூறுகள் வரினும் எதிர்த்து நடை போடும்;[38] ஏர் உழப் பயன்படுவது;[39] வண்டி இழுக்கப் பயன்படுவது.[40]

நாட்டில் வளம் செழிக்க வேண்டும் எனக் கருதும் புலவர்கள், பகட்டை வாழ்த்துதல் உண்டு:

> நெடுங்கடை நின்று பகடுபல வாழ்த்தி (புறம். 383: 3-4)

எத்துணை இடையூறுகள் வரினும் எதிர்த்து நடை போடும் எருதின் இயல்பையே வள்ளுவம் உவமையாக்கு கிறது:

> மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
> இடுக்கண் இடர்ப்பா டுடைத்து (குறள். 624)

## 8.5 பெண்பால் பெயர்கள்

தொல்காப்பியம், பெண்பால் பெயர்களாகப் பதினாறு பெயர்களைக் குறிப்பிடுகின்றது. அகர நிரல் படி இவற்றின் பெயர் விவரம் வருமாறு :

> அளகு, ஆ, கடமை, நாகு, பாட்டி, பிடி,
> பிணவல், பிணவு, பிணா, பிணை, பெட்டை,
> பெடை, பெண், பேடை, மந்தி, மூடு

இவற்றின் பெயர் — உயிரின அடைவு விவரம் வருமாறு :

## 8.5.1 தொல்காப்பியம் கூறும் பெண்பால் பெயர்கள் -உயிர் இனங்கள்

| பெண்பால் பெயர் | உயிர் இனம் | நூற்பா எண் |
|---|---|---|
| அளகு | கூகை | 1555 |
| | கோழி | ,, |
| | மயில் | 1556 |
| ஆ | எருமை | 1560 |
| | பெற்றம் | ,, |
| | மரை | ,, |
| கடமை | யாடு | 1564 |
| நாகு | எருமை | 1562 |
| | நந்து | 1563 |
| | பெற்றம் | 1562 |
| | மரை | ,, |
| பாட்டி | நரி | 1566 |
| | நாய் | 1565 |
| | பன்றி | ,, |
| பிடி | யானை | 1551 |
| பிணவல் | நாய் | 1559 |
| | பன்றி | ,, |
| | புல்வாய் | ,, |
| பிணவு | நாய் | 1558 |
| | பன்றி | ,, |
| | புல்வாய் | ,, |
| பிணா | மக்கள் | 1561 |
| பிணை | உழை | 1557 |
| | கவரி | ,, |
| | நவ்வி | ,, |
| | புல்வாய் | ,, |
| பெட்டை | ஒட்டகம் | 1552 |
| | கழுதை | ,, |
| | குதிரை | ,, |
| | புள் | ,, |
| | மரை | ,, |

| பெண்பால் பெயர் | உயிர் இனம் | நூற்பா எண் |
|---|---|---|
| பெடை | புள் | 1554 |
| பெண் | மக்கள் | 1561 |
| பேடை | புள் | 1554 |
| மந்தி | ஊகம் | 1567 |
| | குரங்கு | ,, |
| | முசு | ,, |
| மூடு | ஆடு | 1564 |

## 8.5.2 தொல்காப்பியம் கூறும் உயிர் இனங்கள் - பெண்பால் பெயர்கள்

| உயிர் இனம் | பெண்பால் பெயர் | நூற்பா எண் |
|---|---|---|
| ஆடு | மூடு | 1564 |
| | கடமை | ,, |
| உழை | பிணை | 1557 |
| ஊகம் | மந்தி | 1567 |
| எருமை | ஆ | 1560 |
| | நாகு | 1562 |
| ஒட்டகம் | பெட்டை | 1552 |
| கவரி | பிணை | 1557 |
| கழுதை | பெட்டை | 1552 |
| குதிரை | ,, | ,, |
| குரங்கு | மந்தி | 1567 |
| கூகை | அளகு | 1555 |
| கோழி | ,, | ,, |
| நந்து | நாகு | 1563 |
| நரி | பாட்டி | 1566 |
| நவ்வி | பிணை | 1557 |
| நாய் | பாட்டி | 1565 |
| | பிணவல் | 1559 |
| | பிணவு | 1558 |

| உயிர் இனம் | பெண்பால் பெயர் | நூற்பா எண் |
|---|---|---|
| பன்றி | பாட்டி | 1565 |
| | பிணவல் | 1559 |
| | பிணவு | 1558 |
| புல்வாய் | பிணவல் | 1559 |
| | பிணவு | 1558 |
| | பிணை | 1557 |
| புள் | பெட்டை | 1553 |
| | பெடை | 1554 |
| | பேடை | ,, |
| பெற்றம் | ஆ | 1560 |
| | நாகு | 1562 |
| மக்கள் | பிணா | 1561 |
| | பெண் | ,, |
| மயில் | அளகு | 1556 |
| மரை | ஆ | 1560 |
| | நாகு | 1562 |
| | பெட்டை | 1552 |
| முசு | மந்தி | 1567 |
| யாடு | கடமை | 1564 |
| யானை | பிடி | 1551 |

திருக்குறளில் ஆ, பிணை, பெண், பெண்டிர், பெற்றம், மகளிர், மாதர் என்னும் பெண்பால் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றை இனி ஒவ்வொன்றாகக் காண்போம்.

## 8.5.3 ஆ

தொல்காப்பியம் ஆ என்னும் சொல்லை எருமை, பெற்றம், மரை ஆகிய மூவகை விலங்குகளின் பெண்பால் பெயராகக் குறிப்பிடுகிறது:

> பெற்றமும் எருமையும் மரையும் ஆவே (தொல். 1560)

சங்கத் தொகைநூல்களில் ஆ என்னும் சொல் எருமை, பெற்றம், மரை ஆகியவற்றின் பெண்பால்

பெயராகவும், சிறப்பாக எருமையின் பெண்பால் பெயராகவும் வழங்கப்பட்டுள்ளது:

ஆகாண் விடையின் அணிபெற வந்து (குறிஞ். 136)

ஈற்றா (பொருந. 151; நற். 179:1)

கருங்கோட் டெருமைச் செங்கண் புனிற்றாக்
காதற் குழவிக் கூறுமுலை மடுக்கும் (ஐங். 92:1-2)

சேதா நறுமோர் (பெரும். 306)

பகட்டா ஈன்ற கொடுநடைக் குழவி (பெரும். 243)

பல்லா பயந்த நெய் (குறுந். 210: 2)

திருக்குறளில் ஈரிடங்களில் **ஆ** என்னும் சொல் இடம் பெற்றுள்ளது. இச்சொல் எவ்வுயிரினத்தின் பெண்பால் பெயர் என்பதைத் தெளிவாக அறிதற்கான தொடர் அமைப்புகள் குறளில் இடம் பெறவில்லை. எனினும், வழக்காறுகள், திருக்குறள் பழைய உரையாசிரியர்களின் உரைகள் ஆகியவற்றைக் கொண்டு, இச்சொல் **பசு**வைக் குறித்து நிற்கின்றது என அறிய முடிகின்றது. திருக்குறளுக்கு உரையெழுதிய பழைய உரையாசிரியர்களான காலிங்கர், பரிதியார், பரிப்பெருமாள், பரிமேலழகர், மணக்குடவர் ஆகியோர் **பசு** என்னும் பொருளையே இச்சொல்லுக்கு வழங்கியுள்ளனர்.

### 8.5.4 பிணை

புல்வாய், நவ்வி, உழை, கவரி என்னும் மான் இனங்களின் பெண்பால் பெயராகப் **பிணை** வழங்கப்படும் எனத் தொல்காப்பியம் (தொல். 1502, 1557) வரையறுக்கின்றது.

சங்கத் தொகைநூல்களில் மான் என்பதன் பெண்பால் பெயராகவும் இரலை, உழை, கலை, கவரி, நவ்வி என்னும் மான் இனங்களின் பெண்பால் பெயராகவும் **பிணை** வழங்கப்பட்டுள்ளது:

திரிமருப் பிரலை அண்ணல் நல்லே
றரிமடப் பிணையோ டல்குநிழல் அசைஇ
(குறுந். 338: 2-3)

உழைமான் அம்பிணை (நற். 274:3)

புலியுற வெறுத்ததன் வீழ்பிணை யுள்ளிக்
**கலை**நின்று விளிக்கும் கானம் (மலை. 404-405)

நரந்தை நறும்புல் மேய்ந்த ***கவரி***
குவளைப் பைஞ்சுனை பருகி யயல
தகரத் தண்ணிழல் பிணையொடு வதியும்
வடதிசை (புறம். 132:4–7)

பெருங்கவின் பெற்ற சிறுதலை ***நவ்வி***
மடக்கண் பிணையொடு மறுகுவன உகள (மது. 275-276)

*பொதுவாகப் பிணையின் கண்ணை (அல்லது மருட்சியை) மகளிரின் கண்களுக்கு ஒப்பிடுவது சங்க மரபு:*

மான்பிணை நோக்கின் மடநல் லாள் (அகம். 195:6)

பிணையேர் நோக்கம் (அகம். 363:19)

பேதுறு மடமொழிப் பிணையெழில் மானோக்கின்
மாதரார் (கலி. 27:3-4)

*திருக்குறளில் பிணை என்னும் சொல் ஈரிடங்களில் இடம் பெற்றுள்ளது. ஈரிடங்களிலும் சங்கத் தொகை நூல்களில் காணும் மேற்குறித்த மரபே பின்பற்றப்பட்டுள்ளது:*

கூற்றமோ கண்ணோ ***பிணையோ*** மடவரல்
**நோக்கம்**இம் மூன்றும் உடைத்து (குறள். 1085)

***பிணையேர் மடனோக்கும்*** நாணும் உடையாட்
கணியெவனோ ஏதில தந்து (குறள். 1089)

## 8.5.5 *மாதர்*

மாதர் காதல் (தொல். 811)

*என்பது தொல்காப்பியம். இப்பொருளில் இச்சொல் சங்கத் தொகைநூல்களில் பல இடங்களில் வழங்கப் பட்டுள்ளது:*

மாதரும் மடனும் ஓராங்குத் தணப்ப (குறிஞ். 19)

மாதர் மான்பிணை (ஐங். 493:2)

மாதர் வண்டு (குறிஞ். 148; நற். 244:3, 366:6)

மாதர் வாள்முகம் (அகம். 130:14)

மாதர்கொள் மானோக்கின் மடந்தை (கலி. 69:4)

மாதர் மகளிர் (கலி. 103:61, 122:8,16)

இச்சொல் காதல் கொள்ளுதற்கு உரியராய மகளிரைச் சுட்டுவதற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது:

வீங்கிழை மாதர் (கலி. 139:12)

தேமொழி மாதர் (கலி. 139:16)

முகையேர் இலங்கெயிற் றின்னகை மாதர் (கலி. 139:28)

தொல்காப்பியமும் பெண்களை **மாதர்** என்னும் சொல்லால் குறிப்பிடுகின்றது:

ஒண்டொடி மாதர் (தொல். 1449:1)

திருக்குறளில் **மாதர்** என்னும் சொல் ஐந்து இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது:

கனங்குழை மாதர் (குறள். 1081)

மாதர் படாஅ முலை (குறள். 1087)

மறுவுண்டோ மாதர் முகத்து (குறள். 1117)

மாதர் முகம் (குறள். 1118)

மாதர் அடி (குறள். 1120)

இந்த ஐந்து இடங்களிலும் இச்சொல் மரபைத் தழுவிய நிலையில் பெண்களைக் குறிக்கவே பயன்படுத்தப் பட்டுள்ளது. இவ்வாறே பெண், பெண்டிர், மகளிர் என்னும் சொற்களும் பெண்பால் பெயர்களாகச் சங்க இலக்கியங்களில் வழங்கப்பட்டுள்ளன.

### 8.5.6 பெற்றம்

சங்கத் தொகைநூல்களில் **பெற்றம்** என்னும் சொல் தொல்காப்பியம், திருக்குறள் ஆகிய இரு நூல்களில் மட்டுமே வழங்கப்பட்டுள்ளது. இச்சொல் ஆண்பால் பெண்பால் ஆகிய இரு பால்களையும் சுட்டும் பொதுப் பெயர் ஆகும்.

பன்றி புல்வாய் உழையே கவரி
என்றிவை நான்கும் ஏறெனற் குரிய (தொல். 1538)

எருமையும் மரையும் பெற்றமும் அன்ன (தொல். 1539)

பெற்றம் எருமை புலிமரை புல்வாய்
மற்றிவை எல்லாம் போத்தெனப் படுமே (தொல். 1541)

என்பன தொல்காப்பியம். இந் நூற்பாக்கள் ஆண்பால் பெயர்களைக் குறிக்க வருவன. இவற்றால், பெற்றம் என்பது ஆண்பாலாயின் ஏறு, போத்து என வழங்கப் படும் என்பது தெளிவு.

பெற்றமும் எருமையும் மரையும் ஆவே (தொல். 1560)

எருமையும் மரையும் பெற்றமும் நாகே (தொல். 1562)

என்னும் இரு நூற்பாக்களும் பெண்பால் பெயர்களைச் சுட்டும் நூற்பாக்கள். இவற்றால், பெற்றம் பெண்பால் பெயராயின் ஆ, நாகு என வழங்கப்படும் என்பது தெளிவு.

பெற்றம் என்னும் சொல் திருக்குறளில் ஒரு குறளில் மட்டுமே வந்துள்ளது.

வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று (குறள். 273)

என்பது அக்குறள். வலிமை இன்மை கருதப்படுவதால் இங்குப் பெற்றம் என்பதைப் பெண்பாலாகக் கொண்டு உரையாளர்கள் ஆ என்னும் பொருள் கொண்டுள்ளனர்.

## 8.6 இளமைப் பெயர்கள்

தொல்காப்பியம் உயிரினங்களின் இளமைப் பெயர் களாகப் பதினொரு பெயர்களைக் குறிப்பிடுகின்றது. அகர நிரல்படி அவற்றின் பெயர் விவரம் வருமாறு :

கன்று, குட்டி, குருளை, குழவி, பறழ்,
பார்ப்பு, பிள்ளை, போத்து, மக, மகவு,
மறி

இவற்றின் பெயர் — உயிரின அடைவு விவரம் வருமாறு :

### 8.6.1 தொல்காப்பியம் கூறும் இளமைப் பெயர்கள் - உயிர் இனங்கள்

| இளமைப் பெயர் | உயிர் இனம் | நூற்பா எண் |
|---|---|---|
| கன்று | ஆன் | 1514 |
| | எருமை | 1515 |
| | ஒட்டகம் | 1517 |
| | கடமை | 1514 |
| | கராம் | 1516 |
| | கவரி | ,, |
| | கழுதை | 1514 |
| | குதிரை | ,, |
| | நெல் புல் தவிர்த்த ஓரறிவுயிர்கள் | 1523-1524 |
| | மரை | 1515 |
| | யானை | 1514 |
| குட்டி | எலி | 1505 |
| | குரங்கு | 1512 |
| | நரி | 1509 |
| | நாய் | ,, |
| | பன்றி | ,, |
| | புலி | ,, |
| | முயல் | ,, |
| | மூங்கா | 1505 |
| | மூவரி அணில் | ,, |
| | வெருகு | ,, |
| குருளை | நரி | 1508 |
| | நாய் | 1507 |
| | பன்றி | ,, |
| | புலி | ,, |
| | முயல் | ,, |
| குழவி | ஆ | 1519 |
| | ஊகம் | 1521 |
| | எருமை | 1519 |
| | கடமை | 1520 |
| | குஞ்சரம் | 1518 |
| | குரங்கு | 1521 |

| இளமைப் பெயர் | உயிர் இனம் | நூற்பா எண் |
|---|---|---|
| | நெல் புல் தவிர்த்த ஓரறிவுயிர்கள் | 1523-1524 |
| | மக்கள் | 1522 |
| | மரை | 1520 |
| | முசு | 1521 |
| பறழ் | எலி | 1506 |
| | குரங்கு | 1513 |
| | நரி | 1509 |
| | நாய் | ,, |
| | பன்றி | ,, |
| | புலி | ,, |
| | முயல் | ,, |
| | மூங்கா | 1506 |
| | மூவரி அணில் | ,, |
| | வெருகு | ,, |
| பார்ப்பு | குரங்கு | 1513 |
| | தவழ்பவை | 1504 |
| | நரி | 1510 |
| | பறப்பவை | 1503 |
| பிள்ளை | குரங்கு | 1513 |
| | தவழ்பவை | 1504 |
| | நரி | 1510 |
| | நெல் புல் தவிர்த்த ஓரறிவுயிர்கள் | 1523–1524 |
| | பன்றி | 1510 |
| | பறப்பவை | 1503 |
| | புலி | 1510 |
| | முயல் | ,, |
| போத்து | நெல் புல் தவிர்த்த ஓரறிவுயிர்கள் | 1523-1524 |
| மக | மக்கள் | 1522 |
| மகவு | குரங்கு | 1513 |
| மறி | உழை | 1511 |
| | குதிரை | ,, |
| | நவ்வி | ,, |
| | புல்வாய் | ,, |
| | யாடு | ,, |

## 8.6.2 தொல்காப்பியம் கூறும் உயிர் இனங்கள் - இளமைப் பெயர்கள்

| உயிர் இனம் | இளமைப் பெயர் | நூற்பா எண் |
|---|---|---|
| ஆ | குழவி | 1519 |
| ஆன் | கன்று | 1514 |
| உழை | மறி | 1511 |
| ஊகம் | குழவி | 1521 |
| எருமை | கன்று | 1515 |
| | குழவி | 1519 |
| எலி | குட்டி | 1505 |
| | பறழ் | 1506 |
| ஒட்டகம் | கன்று | 1517 |
| கடமை | ,, | 1514 |
| | குழவி | 1520 |
| கராம் | கன்று | 1516 |
| கவரி | ,, | ,, |
| கழுதை | ,, | 1514 |
| குஞ்சரம் | குழவி | 1518 |
| குரங்கு | குட்டி | 1512 |
| | குழவி | 1521 |
| | பறழ் | 1513 |
| | பார்ப்பு | ,, |
| | பிள்ளை | ,, |
| | மகவு | ,, |
| குதிரை | கன்று | 1514 |
| | மறி | 1511 |
| தவழ்பவை | பார்ப்பு | 1504 |
| | பிள்ளை | ,, |
| நரி | குட்டி | 1509 |
| | குருளை | 1508 |
| | பறழ் | 1509 |
| | பிள்ளை | 1510 |
| நவ்வி | மறி | 1511 |
| நாய் | குட்டி | 1509 |
| | குருளை | 1507 |
| | பறழ் | 1509 |

| உயிர் இனம் | இளமைப் பெயர் | நூற்பா எண் |
|---|---|---|
| நெல் புல் தவிர்த்த ஓரறிவுயிர்கள் | கன்று | 1523-24 |
| | குழவி | ,, |
| | பிள்ளை | ,, |
| | போத்து | ,, |
| பன்றி | குட்டி | 1509 |
| | குருளை | 1507 |
| | பறழ் | 1509 |
| | பிள்ளை | 1510 |
| பறப்பவை | பார்ப்பு | 1503 |
| | பிள்ளை | ,, |
| புல்வாய் | மறி | 1511 |
| புலி | குட்டி | 1509 |
| | குருளை | 1507 |
| | பறழ் | 1509 |
| | பிள்ளை | 1510 |
| மக்கள் | குழவி | 1522 |
| | மக | ,, |
| மரை | கன்று | 1515 |
| | குழவி | 1520 |
| முசு | ,, | 1521 |
| முயல் | குட்டி | 1509 |
| | குருளை | 1507 |
| | பறழ் | 1509 |
| | பிள்ளை | 1510 |
| மூங்கா | குட்டி | 1505 |
| | பறழ் | 1506 |
| மூவரி அணில் | குட்டி | 1505 |
| | பறழ் | 1506 |
| யாடு | மறி | 1511 |
| யானை | கன்று | 1514 |
| வெருகு | குட்டி | 1505 |
| | பறழ் | 1506 |

மேற்சுட்டிய பதினோர் இளமைப் பெயர்களே அன்றி, சிறுவன், புதல்வர், புதல்வன், மகள், மகன் என்னும் இளமைப் பெயர்களும் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன. சான்றுகள் வருமாறு:

ஆய்பெருஞ் சிறப்பிற் சிறுவன் பெயரத்
தாய்தப வருஉந் தலைப்பெயல் நிலையும்
(தொல். 1025:32-33)

பல்வேறு புதல்வர்க் கண்டுநனி உவப்பினும்
(தொல். 1097:3)

புதல்வற் பயந்த புனிறுதீர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோள் (தொல். 1092:27-28)

நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பா டஞ்சிய மகட்பா லானும் (தொல். 1025:14-15)

அவன்சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்
மகன்தாய் உயர்பும் தன்னுயர் பாகும் (தொல். 1120:1-2)

இவற்றுள் மகன், மகள் என்னும் இரண்டும் மக என வரும் இளமைப் பெயருக்குள் அடங்கும்.

திருக்குறளில் குழவி, மகன், மக்கள் என்னும் மக்களின் இளமைப் பெயர்கள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. இவற்றுள் மகன் என்பது அன் என்னும் ஆண்பால் விகுதி பெற்று வரும் மக்களின் இளமைப் பெயர் என்பதும், மக்கள் என்பது மகன், மகள் என்னும் இரண்டையும் உள்ளடக்கியது என்பதும் தெளிவு. மகன் என்பது தலை மகனையும், மக்கள் என்பது ஓர் இடத்தில் வாழும் மக்கள் இனத்தையும் குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

### 8.6.3 குழவி

குழவி என்பதை உயிரினங்களின் இளமைப் பெயர்களுள் ஒன்றாகத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

ஓரறிவு உயிர்களுள் நெல்லும் புல்லும் தவிர்த்த பிற உயிரினங்கள், இளமைப் பெயராகக் குழவி என்னும் பெயரைப் பெறும் என்பார் தொல்காப்பியர்:

பிள்ளை குழவி கன்றே போத்தெனக்
கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே (தொல். 1523)

நெல்லும் புல்லும் நேரார் ஆண்டே (தொல். 1524

ஐந்தறிவு உயிர்களுள் யானை, ஆ, எருமை, கடமை, மரை, குரங்கு, முசு, ஊகம் ஆகியவற்றின் இளமைப் பெயராகக் **குழவி** வழங்கப்படும் என்பார் தொல்காப்பியர். குழவி என்பது மக்களுக்குரிய இளமைப் பெயராயும் வரும் என்பது அவர் கருத்து.

சங்கத் தொகைநூல்களில் ஆமான் (காட்டுப்பசு), எருமை, பசு, மரை, யானை, வருடை ஆகிய விலங்கினங்களின் இளமைப் பெயராகக் குழவி வழங்கப்பட்டுள்ளது:

மடநடை ஆமான் கயமுனிக் குழவி (மலை. 500)

கருங்கோட் டெருமைச் செங்கண் புனிற்றாக்
காதற் குழவிக் கூறுமுலை மடுக்கும் (ஐங். 92:1-2)

கடுஞ்சுரை நல்ஆன் நடுங்குதலைக் குழவி
(குறுந். 132:4)

மடக்கண் மரையான் பெருஞ்செவிக் குழவி (மலை. 506)

துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு
பிடிபுணர் வேழம் (பொருந. 125-126)

வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போல (கலி. 50: 21-22)

மக்களின் இளமைப் பெயராகவும் **குழவி** வழங்கப்பட்டுள்ளது:

மாசில் கற்பின் மடவோள் குழவி (நற். 15:7)

பிறை மதியைக் **குழவித் திங்கள்** (கலி 130 : 15) என வழங்கும் வழக்கும் சங்கத் தொகைநூல்களில் காணப்படுகிறது.

திருக்குறளில் **குழவி** என்னும் சொல் ஓரிடத்தில் உருவக நிலையில் வழங்கப்பட்டுள்ளது.

அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு (குறள். 757)

இக்குறளில் குழவி என்பது மக்களின் இளமைப் பெயராக வழங்கப்பட்டுள்ளது. இஃது மரபை ஒட்டிய நிலையே.

## 8.7 வழக்கிழந்த பெயர்கள்

பெயர் வழக்குகள் வீழ்வதும், புதிய வழக்குகள் முகிழ்ப்பதும் இயல்பு — இயற்கை. தொல்காப்பியர், மரபியலில் முன்னிருந்த வழக்குகளையும் சுட்டுகின்றார்; தம் கால மரபுகள் பலவற்றையும் சேர்க்கின்றார். அத்துடன் நில்லாமல், அவர் காலத்திற்கு முன்பே வழக்கிலிருந்து பின்னர் வழக்கு இழந்த பெயர் மரபுகளையும் குறிப்பிடுகின்றார். அவற்றை 'முடிய வந்த வழக்கு' (தொல். 1563 : 8) என வழங்குகின்றார். வழக்குகள் இழந்து போனவைகளாயினும் அவற்றையும் பேணுவதில் தவறில்லை என்பது தொல்காப்பியர் நெஞ்சம்.

கடிய லாகா கடனறிந் தோர்க்கே (தொல். 1563:9)

எனக் கடனறிந்த நல்லோர்க்கு வேண்டுகோள் விடுக்கின்றார் எனவும் கொள்ளலாம்.

வழக்கிழந்தனவாகத் தொல்காப்பியம் குறிப்பிடும் பெயர் மரபுகளில் ஒன்றுகூட வள்ளுவத்தில் இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

வழக்கிழந்த பெயர் மரபு — உயிரின அடைவு விவரம் வருமாறு :

### 8.7.1 தொல்காப்பியர் காலத்து வழக்கு இழந்த பெயர்களும் உயிர் இனங்களும்

| வழக்கிழந்த பெயர் | உயிர் இனம் | நூற்பா எண் |
|---|---|---|
| ஏனம் | பன்றி | 1563 |
| கடுவன் | குரங்கின் ஏறு | ,, |
| கண்டி | ஆண் எருமை | ,, |
| கோட்டான் | கூகை | ,, |
| சேவல் | ஆண் குதிரை | ,, |
| தத்தை | கிளி | ,, |
| பூசை | வெருகு | ,, |

### 8.7.2 உயிர் இனங்களும் தொல்காப்பியர் காலத்து வழக்கு இழந்த பெயர்களும்

| உயிர் இனம் | வழக்கிழந்த பெயர் | நூற்பா எண் |
|---|---|---|
| ஆண் எருமை | கண்டி | 1563 |
| ஆண் குதிரை | சேவல் | ,, |
| கிளி | தத்தை | ,, |
| குரங்கின் ஏறு | கடுவன் | ,, |
| கூகை | கோட்டான் | ,, |
| பன்றி | ஏனம் | ,, |
| வெருகு | பூசை | ,, |

### 8.8 ஆய்வு முடிவுகள்

1. உயிரினப் பாகுபாடு பற்றிய தெளிவான அறிவினைப் பண்டைத் தமிழர்கள் பெற்றிருந்தனர்; உயிரினங்களுக்குள்ள புலன்களின் அடிப்படையில் அவற்றை ஓரறிவு முதல் ஆறறிவு வரையில் பாகுபாடு செய்த நுட்பம், பயிரினத்துக்கும் உயிருண்டு எனக் கண்டுரைத்த நுட்பம், மனிதனைப் போன்று ஆறறிவு படைத்த உயிரினங்கள் பிறவும் உண்டு என அளந்துரைத்த நுட்பம் ஆகியவை வியப்பின் சுவடுகளை நெஞ்சத்தில் ஆழப் பதிய வைப்பவை. அன்றியும், பயிரினங்களை அகக்காழன, புறக்காழன எனப் பகுத்துக் கண்டமையும், அவற்றிற்குரிய உறுப்புகளை வேறுபடுத்திக் கண்ட மையும் பண்டையோரின் பயிரியல் தொடர்பான அறிவைக் காட்டுகின்றன. ஆண்பால் பெயர், பெண்பால் பெயர், இளமைப் பெயர் என அவர்கள் பகுத்துரைத்த பாங்கு, அன்னாரின் உயிரியல் தொடர்பான அறிவைக் காட்டு கின்றது; எனினும், பெரும்பான்மையும் ஐந்தறிவு ஆறறிவு உயிர்களிடையே காணும் இப்பெயர் வேறுபாட்டை மட்டுமே குறித்துள்ளனர்; இதனால், ஓரறிவு முதல் நான்கறிவு முடிய உள்ள உயிரினங்களிடையே காணும் இவ்வகை வேறுபாட்டை அவர்கள் தெளிவாக அறிய வில்லையோ என எண்ணத் தோன்றுகின்றது.

வள்ளுவர், உயிரினப் பாகுபாடுகளை—பெயர் மரபுகளை எடுத்துரைக்க வேண்டும் என்னும் நோக்கினர் அல்லர்; என்றாலும் உயிரினப் பாடுபாடு பற்றிய மரபு வழித்தான சிந்தனைகளை அவர் தெளிவாக அறிந்து, தேவையான அளவு தம் நோக்கிற்கு ஏற்ப அவற்றை வெளிப்படுத்தி உள்ளார் என்பதைக் குறள்வழி உய்த்துணர முடிகின்றது.

2. ஐவகைப் புலன்களையும் ஒருங்கு குறிப்பிடும் போது, தொல்காப்பியர் கூறும் நிரல் முறையில் கூறாமல் (ஓரறிவு முதல் ஐயறிவு உயிரினங்களுக்குள்ள புலன்கள் என்ற முறையில் கூறாமல்) 'சுவையொளி யூறோசை நாற்றம்' எனக் கூறியிருப்பதற்குத் தொல்காப்பியர் கூறும் வெண்பா யாப்பமைப்பும் காரணம் ஆகலாம் எனத் தோன்றுகின்றது.

3. பல்லுயிர், மன்னுயிர் முதலிய தொடர்களின் வழி உயிரினங்கள் அனைத்தையும் திருக்குறள் குறிப்பிடு கின்றதெனினும், ஈரறிவு முதல் நான்கறிவு முடிய உள்ள உயிரினங்களுள் எந்த ஒரு குறிப்பிட்ட உயிரினப் பெயரும் இதில் இடம்பெறவில்லை. இதற்கு அடிப்படைக் காரணம் குறளில் பயன்படுத்தப் பட்டுள்ள உவமைகளின் போக்கே; ஏனெனில், உவமைகளில்தான் பெரும்பான்மை யும் உயிரினங்களின் தனிப் பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

4. ஆண்பால் பெயர், பெண்பால் பெயர், இளமைப் பெயர் தொடர்பான பண்டைமரபு திருக்குறளில் அப்படியே இழையோடி நிற்கிறது.

குறிப்புகள்

1. பேராசிரியர், **தொல்காப்பியம் — பொருளதிகாரம் — பேராசிரியர் உரை**, கழக வெளியீடு, சென்னை, 1969, ப. 488.
2. ஷை
3. 'அனிச்சம் என்பது ஒரு மரம். அனிச்சப்பூ, கொம்பிலிருந்து மலர்கின்ற கோட்டுப் பூவாகும். "இது பற்றி மன்னார் குடி இலக்கண ஆசிரியர் சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். இது கோட்டுப்பூ வகையைச் சேர்ந்தது. இது குறவம்புலம் புகைவண்டி நிலையத்தின் பக்கத்தில் உள்ள ஐயனார் கோவிலில் இருக்கின்றது. இதன் தோற்றம், இலை, கிளை இவற்றால் இது சிறு

சண்பகம் போல இருக்கும். மாசி, பங்குனியில் பூ சரம் சரமாகத் தொங்கும். மாலையில் மலரும். விடியலில் பொடியாக உதிர்ந்து விடும். மலர் வெண்கடம்பு போல மணம் உள்ளது. சிவந்த கோடுகள் படர்ந்த வெள்ளைப் பூ. காயின் மேலோடு வலியது'' என்ற குறிப்பு மட்டுமே கிடைக்கின்றது.'

— இல. செ. கந்தசாமி, *திருக்குறளில் வேளாண்மை*, தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகம், கோயமுத்தூர், 1973, ப. 54.

4. அமை (குறள்கள் 1223, 1227)
அலகு (குறள். 1034)
எள் (குறள். 889)
கரும்பு (குறள். 1078)
குவளை (குறள். 1114)
நெருஞ்சி (குறள். 1120)
பசும்புல் (குறள். 16)
பனை (குறள்கள் 104, 433, 1282)
நச்சுமரம் (குறள். 1008)
மரம் (குறள்கள் 78, 216, 576, 600, 879, 997, 1020, 1058)
முள்மரம் (குறள். 879)

5. பரிமேலழகர், *திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும்*, ஆறுமுக நாவலர் பதிப்பு, வாணி நிகேதனவச்சுக்கூடம், 1861, ப. 105.

6. இளம்பூரணர், *தொல்காப்பியம் — பொருளதிகாரம் — இளம்பூரணர் உரை*, கழக வெளியீடு, சென்னை, 1969, ப. 561.

7. பேராசிரியர், மு.நூ., ப. 499.

8. ஷெ

9. ஷெ

10. இளம்பூரணர், மு. நூ., ப. 561.

11. பேராசிரியர், மு. நூ., ப. 499.

12. ஷெ

13. ஷெ, ப. 450.

14. இளம்பூரணர், மு. நூ., ப. 561.

15. பேராசிரியர், மு. நூ., ப. 450.

16. ஷெ

17. குறள்கள் 59, 126, 481, 486, 490, 495, 500, 527, 624, 890.

18. இளம்பூரணர், மு. நூ., ப. 562.

19. ஷை

20. பேராசிரியர், மு. நூ., ப. 451.

21. இளம்பூரணர், மு. நூ., ப. 571.

22. பேராசிரியர், மு. நூ., ப. 473.

23. இளம்பூரணர், மு. நூ., ப. 572.

24. பேராசிரியர், மு. நூ., ப. 472.

25. ஷை, ப. 471.

26. இளம்பூரணர், மு. நூ., ப. 572.

27. பேராசிரியர், மு. நூ., ப. 471.

28. ஷை

29. 'வீ என்ற ஒரு நிலை உண்டு. இந்நிலையில் பூ வாடிவிடும். இறுதியாக செம்மல் என்ற நிலையில் பூவின் வாழ்வே முடிந்து விடுகின்றது.'

— இல. செ. கந்தசாமி, மு. நூ., ப. 55.

30. குறள்கள் 1113, 1264.

31. குறள்கள் 100, 1191, 1306.

32. 'அக்கால மக்கள் போர் புரிவதில் மிக்க நாட்டங் கொண்டவர்கள். மனிதர்களிடையே போர் புரிய வாய்ப் பில்லாதபோது சேவல்களையும் ஆட்டுக்கிடாய்களையும் ஒன்றோடொன்று மோதவிட்டு வேடிக்கை பார்ப்பது அவர்களது வழக்கமாகும். அத்தகைய காட்சிகளை வள்ளுவரும் கண்டுள்ளார். இரண்டு ஆட்டுக்கிடாய்கள் போரிடத் தொடங்கி விட்டன. ஒன்றோடொன்று பலமாக மோதிக் கொள்கின்றன. இரண்டு தலைகளிலிருந்தும் இரத்தம் வடிந்து கொண்டிருக்கின்றது. எனினும் மீண்டும் மீண்டும் முட்டி மோதுகின்றன. திடீரென இரண்டும் பின்வாங்குகின்றன. அவ்வாறு பின்வாங்குவது தோற்ற தற்கோ சோர்ந்து போனதற்கோ அறிகுறியல்ல. மேலும் வலிமையோடு மோத அவைகள் அவ்வாறு பின்வாங்கு கின்றன. அவற்றிற்கு உயிர் முக்கியமில்லை; வெற்றிதான் அவற்றின் குறிக்கோள்.'

— இல. செ. கந்தசாமி, மு. நூ., ப. 61.

33. தொல். 1022:13; சிறு. 55, 190; பட். 52, 201; பெரும். 58, 198, 238, 243, 325; மது. 94, 259; அகம். 17:13, 30:6, 37:11, 41:6, 107:5, 140:14, 159:3, 173:10, 191:7, 262:2 295:10, 329:7, 366:3, 397:10; ஐங். 3:2; கலி. 65:12; நற். 290:3, 340: 6; பதிற். 58:16, 71:4; புறம். 35:32, 60:9, 90:9, 125: 7, 161:17, 307:9, 366:3, 385:2, 387:11, 388:11, 390:22, 391:4, 395:2, 399:27.

34. ‘நோன்பகடு’ (சிறு. 55; அகம். 30:6; புறம். 125: 7)
‘உரன்கெழு நோன்பகடு’ (சிறு. 190)
‘உரனுடை நோன்பகடு’ (புறம். 60:9)
‘உரனுடைச் சுவல பகடு’ (அகம்:159:3)

35. ‘நடைநவில் பெரும்பகடு’ (பெரும். 198)
‘நடைப்பகடு’ (நற். 290:3)

36. ‘அசைவில் நோன்தாள், திருந்துபகடு’ (அகம். 191:6-7)

37. ‘சுவல பகடு’ (அகம். 159:3)

38. ‘உப்பொய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன்பகடு’ (அகம். 30:5-6)
‘கானல், கழியுப்பு முகந்து கன்னாடு மடுக்கும்
ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்
உரனுடை நோன்பகடு’ (புறம். 60: 6-9)
‘அச்சொடு தாக்கிப் பாருற் றியங்கிய
பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய
வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ ?’
(புறம். 90: 6-9)

39. ‘பகட்டி னானும் ஆவி னானும்
துகள்தபு சிறப்பின் சான்றோர்’ (தொல். 1022: 13–14)
‘உரன்கெழு நோன்பகட் டுழவர்’ (சிறு. 190)
‘புன்புலம் வித்தும் வன்கை வினைஞர்
சீருடைப் பல்பக டொலிப்பப் பூட்டி
நாஞ்சில் ஆடிய கொழுவழி’ (பதிற். 58: 15-17)
‘உழவொழி பெரும்பகடு’ (புறம். 366: 13)
‘உழுத நோன்பகடு’ (புறம். 125: 7)
மற்றும்: பெரும். 197-198, 325; மது. 94; நற். 340:6; பதிற். 71:4; அகம். 41:6, 262:1-2, 366:3; புறம். 390:22, 391:4, 395:1-2.

40. ‘உப்பொய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன்பகடு’ (அகம். 30:5-6)
மற்றும்: சிறு. 55; பெரும். 58; மது. 259-260; அகம். 17: 13-14, 107:11-14, 159:1-3, 173:9-10, 191:6-7, 295:9-10, 329:5-7; புறம். 60:7-9, 90:6–9.

# 9

# நிறைவுரை

மானிட வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படை உண்மைகள் பலவற்றைத் தெளிந்து தேர்ந்து, வகை தொகை செய்து, குறள் என்னும் பொதுமை விளக்கேற்றிய பொதுமைப் பாவலர் — புதுமைப் பாவலர் வள்ளுவர்; இஃது வள்ளுவம் அறிந்தார் கண்ட உண்மை. வள்ளுவர் வாய்மொழியில் திளைத்தவர்கள், தாம் பெற்ற இன்பத்தினால் — ஆர்வப் பெருக்கால், அப்பொய்யா மொழியைப் பல்வேறு பெயர்களிட்டு அழைத்தனர்; அழைத்தும் வருகின்றனர். அதனால், முப்பாலிற்கு இன்று முப்பதுக்கும் மேற்பட்ட பெயர்கள்!

பெயர்கள் பலவாயினும் திருவள்ளுவர் வாக்கிற்குத் திருக்குறள் என்னும் பெயரே இன்று பெரு வழக்குப் பெயராக விளங்குகின்றது. அப்பெயரே இன்று நின்று நிலை பெற்று விட்டது என்றும் கொள்ளலாம். அதற்கான காரணங்கள் பலவற்றுள் ஒன்று, அப்பெயரில் உள்ள மரபு தழுவிய பாங்கு; மற்றொன்று, அப்பெயரில் உள்ள பல்வேறு பொருள் விளக்கங்கள்.

தொல்காப்பியம் திருக்குறளுக்கு முற்பட்டது என்பது பல்லோர் துணிபு. சங்கத் தொகைநூல்கள் திருக்குறளுக்கு முற்பட்டனவா பிற்பட்டனவா என்பதில் கருத்து முரண்பாடுகள் உள. காலங்கள் வேறுபடினும் தொல்காப்பியம், சங்கத் தொகைநூல்கள், திருக்குறள் ஆகியவற்றில் பல பொதுவான இயல்புகள் காணப்படுகின்றன; இவ்வியல்புகள், சங்க நூல்களுள்ளேயே பிற்பட்டனவற்றுக்கு மரபாம் தன்மையை உடையன.

தொல்காப்பியம் சங்கத் தொகைநூல்கள் ஆகியவற்றைத் திருக்குறளுக்கு முற்பட்டனவாகக் கொண்டால், திருக்குறளில் காணும் சங்கப் பொது இயல்புகள்

சிலவற்றுக்கு அவற்றையே வழிகாட்டிகளாகக் கொள்ள லாம்; வேறு வகையாகச் சொல்வதானால் தொல் காப்பியம் சங்கத் தொகை நூல்கள் ஆகியவற்றில் காணும் மரபுகள் சிலவற்றை வள்ளுவர் பின்பற்றியுள்ளார் எனக் கொள்ள வேண்டிய நிலைமை உருவாகின்றது. அவ்வாறு கொள்ளத் தக்க மரபுகளைப் பின்வருமாறு குறிக்கலாம்:

1. திருக்குறள் என்னும் பெயரில் உள்ள திரு, குறள் ஆகியவற்றில் காணும் நூலுக்குப் பெயரிடும் மரபு;

2. வள்ளுவத்தில் வீடு பற்றிய சிந்தனைகள் தெளி வாக இருப்பினும் வாழ்வியல் குறிக்கோளை 'அறம் பொருள் இன்பம் வீடு' என நாற்பொரு ளாகக் கொள்ளாமல், 'அறம் பொருள் இன்பம்' என முப்பொருளாகவே கொண்ட மரபு;

3. ஒரு பொருண்மை நோக்கித் தொகுக்கப்பட்ட பத்துப் பத்துப் பாடல்களுக்குத் தலைப்பிடும் மரபு;

4. பாடலில் வரும் சொல் அல்லது தொடரைக் கொண்டு தலைப்புப் பெயரிடும் மரபு;

5. பத்துப் பத்தாகப் பகுக்கும் எண்ணிக்கைச் சம நோக்கு மரபு;

6. முன்னோர் மொழிபொருள் பொன்னேபோல் போற்றும் மரபு;

7. பழங்கதைகளைப் பாடல்களிடையே பயன் படுத்தும் மரபு;

8. மகளிரின் முறுவலுக்கு முத்தையும் முகத்திற்கு மதியையும் கண்களுக்கு மலர், மானின் பார்வை ஆகியவற்றையும் மேனிக்குத் தளிரையும் தோளுக்கு மூங்கிலையும் உவமித்தல், கேளிர்க்குக் கண்ணை உவமித்தல், நடுவுநிலைமைக்குத் துலாக்கோலை உவமித்தல் முதலாய உவம மரபுகள்;

9. அகப்பாடல்களில் புறச்செய்திகளை உவமையாக்கல், புறப்பாடல்களில் அகச்செய்திகளை உவமையாக்கல், புராணச் செய்திகளை உவமையாக்கல், அறக்கருத்துகளை உவமையாக்கல் ஆகிய உவம மரபுகள்;

10. ஓரறிவு முதல் ஆறறிவினவாக உயிரினங்களைப் பகுத்துக் காணல், உயிரினங்களில் ஆண்பால் பெயர் பெண்பால் பெயர் இளமைப்பெயர் என வேறுபடுத்திக் காணல் முதலிய உயிரினப் பாகுபாட்டு மரபுகள்.

இலக்கிய மரபுகள், அப்படியே தேக்கம் பெறின், அவற்றால் எவ்வகைப் பயனும் இல்லை; கால ஓட்டத்திற்கு ஏற்ப, சூழலுக்கு ஏற்ப அவை மாற்றம் பெற வேண்டும்; அம்மாற்றம், மரபை ஒட்டிய வளர்ச்சியாக அமைய வேண்டும்; அத்தகைய வளர்ச்சிகளையும் குறளில் தெளிவாகக் காண முடிகின்றது. அவற்றுள் சில வருமாறு:

1. அறத்துப்பால் பொருட்பால் என்னும் இரு பால்களில் 'அறம் பொருள் இன்பம்' என்னும் வாழ்வியல் கோட்பாட்டை எடுத்துரைத்த வள்ளுவர், காமத்துப்பால் என்னும் மூன்றாம் பால் அமைத்து, அதில் ஒன்றி உயர்ந்த அன்பு உள்ளங்கள்பெறும் காம இன்பத்தினை நெறிப்படுத்தி உரைத்திருப்பது அவர் செய்த மரபை ஒட்டிய புரட்சியே.

2. தொல்காப்பியம், பல இயல்களைத் தன்னுள் கொண்ட ஒரு பிரிவுக்கு அதிகாரம் எனப் பெயர் வழங்குகிறது; ஆனால், திருக்குறளில் இயலின் ஒரு பிரிவுக்கு அதிகாரம் என்னும் பெயர் வழங்கப் பட்டுள்ளது.

3. அதிகாரத் தலைப்பிற்கு எந்தெந்த அடிப்படைகளில் பெயரிடலாம் என்பதற்குத் திருக்குறள் ஓரளவு வழிகாட்டுகின்றது.

4. 'மாசற்றார் கோள்' இவை எனக் கூறி முன்னோர் மொழிபொருள் உரைக்கும் பாங்கைத் திருக்குறளில் காண்கின்றோம்.

5. முன்னோர் பயன்படுத்திய உவமைகளில் எவ்வெவ்வாறு தமிழரின் பண்பாட்டை நயமாக அதே நேரத்தில் இயல்பாக உரைக்க முடியும் என்பதைக் குறளில் காண முடிகின்றது.

6. ஏழே சீர்களில் முன்னோர்கள் பயன்படுத்திய உவமைகள் ஐந்திணைச் செறிவாகத் தர முடியும் என்பதற்கு 1113-வது குறள் சான்றாகின்றது.

7. பழைய உவமைகளைப் புதிய புதிய கோணங்களில் காணும் பாங்கு சங்கத் தொகைநூல்களிலேயே காணப்படுகின்றது; அதன் தொடர்ந்த வளர்ச்சியைக் குறளில் காண்கின்றோம்; அதே போல், ஓர் இயல்பை அல்லது உணர்ச்சியை வெளிப்படுத்துதற்குச் சங்கத் தொகை நூல்களில் ஒருவகை உவமையையும் அதே இயல்பை அல்லது உணர்ச்சியை வெளிப்படுத்துதற்குக் குறளில் வேறுபட்ட புதிய உவமையையும் காண முடிகின்றது.

8. அறக்கருத்துகளை உவமையாக்குவதில் குறள் தனிச் சிறப்புப் பெற்றுள்ளது.

மொத்தத்தில் வள்ளுவம் பண்டைய மரபுகளுக்குப் பெரிதும் மதிப்பளித்து அவற்றைப் போற்றியதொடு, புதிய மரபுகள் சிலவற்றுக்கும் வழி வகுத்துள்ளது.

> என்றும் புலரா தியாணர்நாள் செல்லுகினும்
> நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க் (தி. மா. 3: 1-2)

குறள் விளங்குதற்குரிய காரணங்கள் பலவற்றுள் இஃதும் ஒன்று எனலாம்.

# துணை நூல்கள் பட்டியல்


| | | |
|---|---|---|
| 1 | அடியார்க்கு நல்லார் 1892 | சிலப்பதிகார மூலமும் அடியார்க்கு நல்லாருரையும், சாமிநாதையர், உ. வே. (பதி.), ஜுபிலி அச்சுக்கூடம், சென்னை. |
| 2 | அப்பாத்துரை, கா. 1967 | திருக்குறள் மணிவிளக்க உரை, முதற் பகுதி, அலமேலு நிலையம், சென்னை. |
| 3 | ———————— 1968 | திருக்குறள் மணிவிளக்க உரை, இரண்டாம் பகுதி, அலமேலு நிலையம், சென்னை. |
| 4 | ———————— 1970 | திருக்குறள் மணிவிளக்க உரை, மூன்றாம் பகுதி, அலமேலு நிலையம், சென்னை. |
| 5 | ———————— 1971 | திருக்குறள் மணிவிளக்க உரை, நான்காம் பகுதி, அலமேலு நிலையம், சென்னை. |
| 6 | ———————— 1972 | திருக்குறள் மணிவிளக்க உரை, ஐந்தாம் பகுதி, அலமேலு நிலையம், சென்னை. |
| 7 | அருணகிரிநாதர் 1923 | திருப்புகழ் (இரண்டாம் பாகம்), சுப்பிரமணிய பிள்ளை, த. (பதி.), பி. ஆர். ராம ஐயர் & கோ, சென்னை. |
| 8 | இளம்பூரணர் 1969 | தொல்காப்பியம் — பொருளதிகாரம் — இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, சென்னை, மூன்றாம் பதிப்பு. |
| 9 | இறையனார் 1969 | இறையனார் களவியல் உரை, கழக வெளியீடு, சென்னை. |
| 10 | கந்தசாமி, டாக்டர் சோ. ந. 1977 | திருக்குறள் கூறும் உறுதிப் பொருள், மணிவாசகர் நூலகம், சென்னை. |

| | | |
|---|---|---|
| 11 | கம்பர் 1886 | ஏரெழுபது, திருக்கை வழக்கம் மூலமும் ஏரெழுபதுக்குக் கச்சித்தலைச் செங்கோட்டத் துறுவன் மகனார் திருநாகந் தையாரால் செய்யப்பட்ட உரையும், நாராயணசாமி பிள்ளை, நாகூர் கண., மெமோரியல் பிரஸ், சென்னை. |
| 12 | கலியாண சுந்தரனார், திரு. வி. 1951 | திருக்குறள் விரிவுரை (அறத்துப்பால் — இல்வாழ்க்கையியல்), சாது அச்சுக் கூடம், சென்னை, இரண்டாம் பதிப்பு. |
| 13 | ———————— 1956 | திருக்குறள் விரிவுரை (பாயிரம்), சாது அச்சுக்கூடம், சென்னை, மூன்றாம் பதிப்பு. |
| 14 | காலிங்கர், பரிப் பெருமாள் 1945 | திருக்குறள் காமத்துப்பால், காலிங் கருரை & பரிப்பெருமாளுரை, பழனியப்பப் பிள்ளை, டி. பி. (பதி.), திருவேங்கடேசுவரன் கீழக்கலை ஆராய்ச்சிக் கழகம், திருப்பதி. |
| 15 | ———————— 1948 | திருக்குறள் பொருட்பால் (அறத்துப்பால் குறைப்பகுதியுடன்), காலிங்கருரை: பரிப்பெருமாளுரை, பழனியப்பப் பிள்ளை, டி. பி. (பதி.), திருவேங்க டேசுவரன் கீழக்கலை ஆராய்ச்சிக் கழகம், திருப்பதி. |
| 16 | குணசாகரர் 1948 | யாப்பருங்கலக் காரிகை — குணசாகரர் உரை, கலியாண சுந்தர ஐயர், எஸ். (பதி.), வீனஸ் அச்சுக்கூடம், சென்னை. |
| 17 | கோபாலக்ருஷ்ணமா சார்யர், ஸ்ரீ உ. வே. வை. மு. 1665 | திருக்குறள் — அறத்துப்பால், பொருட் பால், காமத்துப்பால் மூலமும் பரிமேலழகருரையும், நரசிம்மன் வை. மு. (பதி.), வை. மு. கோபாலக் ருஷ்ணமாசார்யர் கம்பெனி, நான்காம் பதிப்பு. |
| 18 | கோவிந்தசாமி, மு. 1962 | திருக்குறள் நயவுரை, பாரி நிலையம், சென்னை. |
| 19 | சங்கர நமச்சிவாயர் சர்வசித்து | நன்னூல் மூலமும் விருத்தியுரையும், ஆறுமுக நாவலர், யாழ்ப்பாணத்து நல்லூர் (பதி.), வித்தியாநுபாலன யந்திர சாலை, சென்னை. |

| | | | |
|---|---|---|---|
| 20 | சண்முகம்பிள்ளை, மு. 1972 | திருக்குறள் அமைப்பும் முறையும், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை. |
| 21 | சமயத் திவாகர வாமன முனிவர் 1936 | நீலகேசி உரை, சக்ரவர்த்தி, பேராசிரியர், அ. (பதி.), கும்பகோணம். |
| 22 | சாமிநாத தேசிகர் விரோதிகிருது | இலக்கணக் கொத்து, ஆறுமுக நாவலர், யாழ்ப்பாணத்து நல்லூர்,(பதி.), வித்தியாநுபாலன யந்திர சாலை, சென்னை. |
| 23 | சாமிநாதையர் டாக்டர் உ. வே. 1936 | திருவள்ளுவரும் திருக்குறளும், கலைமகள் வெளியீடு, சென்னை. |
| 24 | ——————— (பதி.) 1937 | குறுந்தொகை, கேஸரி அச்சுக்கூடம், சென்னை. |
| 25 | சாரங்கபாணி, டாக்டர் இரா. 1973 | குறள் விருந்து, தி சௌத் இந்தியன் பிரஸ், காரைக்குடி. |
| 26 | சீத்தலைச் சாத்தனார் 1956 | மணிமேகலை மூலமும் அரும்பதவுரையும், சாமிநாதையர், டாக்டர் உ. வே. (பதி.), கபீர் அச்சுக்கூடம், சென்னை, ஐந்தாம் பதிப்பு. |
| 27 | சீனிவாசன், டாக்டர் ரா. 1973 | சங்க இலக்கியத்தில் உவமைகள், அணியகம், சென்னை. |
| 28 | சுந்தர சண்முகனார், புலவர் 1972 | தமிழ்நூல் தொகுப்புக் கலை, பாரி நிலையம், சென்னை. |
| 29 | சுப்பிரமணிய சாஸ்திரி, டாக்டர் பி. எஸ். 1939 | தெய்வப் புலவர் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் — அறத்துப்பால் —பாலருரை, முருக விலாஸ் ஜனானுகூல பிரஸ், திரிசிரபுரம். |
| 30 | ——————— 1949 | தெய்வப் புலவர் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள் — பொருட் பாலும் காமத்துப்பாலும் — பாலருரை, ஸ்ரீ காஞ்சி காமகோடி கோசஸ்தானம், சென்னை. |
| 31 | சுப்பிரமணிய பிள்ளை, ஜி. 1965 | வள்ளுவர் விருந்து, தமிழ் நிலையம், புதுக்கோட்டை, இரண்டாம் பதிப்பு. |

| | | |
|---|---|---|
| 32 | சுப்பிரமணிய பிள்ளை, கா. 1950 | தனிப்பாடல் திரட்டு(உரை), தி இரத்தின நாயகர் சன்ஸ், சென்னை. |
| 33 | செல்வக் கேசவராய முதலியார் 1934 | திருவள்ளுவர், கழக வெளியீடு, சென்னை. |
| 34 | சென்னி மல்லையர் 1938 | சிவசிவ வெண்பா, சாமிநாதையர், டாக்டர் உ.வே. (பதி.), கலைமகள் வெளியீடு, சென்னை. |
| 35 | சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு 1924 | தமிழ்ப் பேரகராதி, தொகுதி,1 சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை. |
| 36 | ———————— 1962 | தமிழ்ப்பேரகராதி, தொகுதி 2, சென்னைப் பல்கலைக் கழகம் சென்னை. |
| 37 | சேரமான் பெருமாணா யனார் 1974 | திருக்கைலாய ஞான உலா, சதாசிவ செட்டியார், கயப்பாக்கம் (உரை), கழக வெளியீடு, சென்னை. |
| 38 | தண்டபாணி தேசிகர், மகாவித்துவான், ச. 1969 | திருக்குறள் அழகும் அமைப்பும், முத்தையா நிலைய வெளியீடு, சென்னை. |
| 39 | திருநாவுக்கரசு, க. த. 1978 | திருக்குறளும் இந்திய அறநூல்களும், மணியகம் வெளியீடு, சென்னை. |
| 40 | தேசிக விநாயகம் பிள்ளை, கவிமணி 1975 | மலரும் மாலையும், பாரி நிலையம், சென்னை, பதினான்காம் பதிப்பு. |
| 41 | தேவநேயன், ஞா. 1956 | தமிழர் திருமணம், சேலம் கூட்டுறவு அச்சகம், சேலம். |
| 42 | ———————— 1969 | திருக்குறள் மரபுரை, நேசமணி பதிப் பகம், காட்பாடி விரிவு. |
| 43 | தொல்காப்பியர் 1967 | தொல்காப்பியம் - மூலம், கழக வெளி யீடு, சென்னை, மூன்றாவது பதிப்பு. |
| 44 | நச்சினார்க்கினியர் 1965 | தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியர் உரை, கழக வெளி யீடு, சென்னை. |

| | | |
|---|---|---|
| 45 | பசுபதி, ம. வே. (தொகு.) 1970 | வள்ளுவர் உலகம், பாவலர் மன்ற வெளியீடு, தஞ்சை. |
| 46 | பரிமேலழகர் 1861 | திருக்குறள் மூலமும் பரிமேலழகருரையும், ஆறுமுக நாவலர், யாழ்ப்பாணத்து நல்லூர், வாணி நிகேதன வச்சுக்கூடம். |
| 47 | பழைய உரையாசிரியர் 1961 | திருக்குறள் மூலமும் ஓர் பழைய உரையும், மகோமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், சென்னை. |
| 48 | பாரதியார் 1978 | பாரதியார் கவிதைகள், பூம்புகார் பிரசுரம், சென்னை. |
| 49 | பெருந்தேவனார் 1942 | வீரசோழிய உரை, கோவிந்தராஜ முதலியார், கா. ர. (பதி.), பவானந்தர் கழகம், சென்னை. |
| 50 | பேராசிரியர் 1969 | தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பேராசிரியர் உரை, கழக வெளியீடு, சென்னை, நான்காம் பதிப்பு. |
| 51 | மணக்குடவர் 1917 | திருக்குறள் மணக்குடவர் உரை-அறத்துப்பால், சிதம்பரம் பிள்ளை, வ. உ. (பதி.), K. R. பிரஸ், சென்னை. |
| 52 | ——————— 1925 | திருக்குறள் மூலமும் மணக்குடவர் உரையும், வடிவேலு செட்டியார், கோ. (பதி.), நோபில் அச்சியந்திர சாலை, சென்னை. |
| 53 | மாணிக்கம், டாக்டர் வ. சுப. 1973 | இலக்கிய விளக்கம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம். |
| 54 | ——————— 1969 | வள்ளுவம் (கற்பனைப் பொழிவுகள்) பாரி நிலையம், சென்னை, ஆறாம் பதிப்பு. |
| 55 | மீனாட்சி சுந்தரனார், தெ. பொ. 1957 | வள்ளுவர் கண்ட நாடும் காமமும், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை. |

56 மோகனராசு, டாக்டர் கு. 1980 — தமிழ் யாப்பு - சில புதிய கோணங்கள், வள்ளுவர் கழகம், சென்னை.

57 ———————— 1978 — தொல்காப்பியமும் திருக்குறளும் - ஓர் ஒப்பாய்வு, (வெளி வராத டாக்டர் பட்ட ஆய்வேடு) சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

58 ———————— 1981 — வள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப் பொதுமையியலும், சென்னைப் பல் கலைக் கழகம், சென்னை.

59 ராதா கிருஷ்ண பிள்ளை, எம். 1964 — குறளின் பெருமை, அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை.

60 ராஜம், எஸ். (பதி.) 1959 — பதினென் கீழ்க்கணக்கு, முதல்தொகுதி, மர்ரே அண்டு கம்பெனி, சென்னை.

61 ஜகந்நாதன், கி. வா. (பதி.) 1963 — திருவள்ளுவமாலை, திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம், கோவை.

62 ஸ்ரீபால், ஜீவபந்து, டி. எஸ். 1959 — திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன், திருத்தக்க தேவர் இலக்கிய மன்றம், சென்னை, இரண்டாம் பதிப்பு.

63 Arunachalam, M. 1969 — *Education in Ancient Tamil Nad*, Gandhi Vidyalayam, Mayuram.

64 Howard Smith, D. 1973 — *Confucius*, Temple Smith, London.

65 Kasturi Sreenivasan 1969 — *Tirukkural* (*An Ancient Tamil Classic*), Bharatiya Vidya Bhavan, Bombay.

66 Pauthier, 1949 — *The Gospel of China, Duncan Greenless* (Tra.), The Theosophical Publishing house, Madras.

# பொருட் குறிப்பு

[கொடுக்கப்பட்டுள்ள எண்கள்
நூலில் வரும் தொடர் எண்கள்]

# திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 11 | 19-20 | தந்துரைத்த தாலும் | தந்துரைத்தான் எனக் கருதப் படுவதாலும் |
| 16 | 30 | வழக்குத் | வழக்கு |
| 20 | 29 | 1.3 25.1.4 | 1.3.23.1.4 |
| 24 | 15 | anable | unable |
| 33 | 16 | தொடக்கநிலை போக்கு | தொடக்கநிலைப் போக்கு |
| 37 | 7 | கருத்துத் | கருத்து |
| 60 | 1 | 3/4 | 3/3 |
| 63 | 1 | 3/5 | 3/4 |
| 64 | 20 | பரைக்குரலருவி | பறைக்குரலருவி |
| 66 | 18 | குறுகு | குருகு |
| 77 | 30 | $5n - 5/2 - \frac{(-1)^{n-1}}{2}$ | $5n - -5/2 - \frac{(-1)^{2n-1}}{2}$ |
| 83 | 23 | குறள்களில் | திருக்குறளில் |
| 92 | 19 | பிரித்தரிய | பிரித்தறிய |
| 93 | 9 | இப்போக்குத் | இப்போக்கு |
| 93 | 21 | ,, | ,, |
| 97 | 16 | தொல்காப்பியத்தில் | தொல்காப்பியத்தில் மட்டும் |
| 99 | 3 | பெற்றுள்ளன | பெற்றுள்ளது |
| 108 | 1 | உணர்த்த பயன்படுத் தும் | உணர்த்தப் பயன் படுத்தும் |
| 126 | 19 | மேன்மை குணத்தைச் | மேன்மைக் குணத்தைச் |
| 127 | 17 | அடைக்களமாக | அடைக்கலமாக |
| 140 | 28 | வெற்றிக் கொள்ளும் | வெற்றி கொள்ளும் |
| 145 | 18 | பார்வை | பாவை |
| 153 | 10 | இலக்கிய நெறியாக | குறிக்கோள் நெறியாக |
| 161 | 20 | விழையே | விழைவே |
| 161 | 28 | புதிய | வேறு |
| 220 | 14 | பதினொன்கீழ்க் கணக்கு | பதினெண்கீழ்க் கணக்கு |

## துணை நூல் பட்டியல் (தொடர்ச்சி)


67 அமிர்தலிங்கன், பூ. 1963 — வள்ளுவர் கண்ட உயிரினங்கள், காரைக்குடி, மூன்றாம் பதிப்பு.

68 இராகவையங்கார், மு. 1964 — ஆராய்ச்சித் தொகுதி, பாரி நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு.

69 இராசமாணிக்கனார், டாக்டர் மா. 1969 — தமிழ்மொழி – இலக்கிய வரலாறு (சங்க காலம்), பாரி நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு.

70 கந்தசாமி, இல. செ. 1973 — திருக்குறளில் வேளாண்மை, தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகம், கோயமுத்தூர்.

71 கழக வெளியீடு 1967 — ஆசிரியர் தொல்காப்பியர் இயற்றிய தொல்காப்பியம் (சு.அ. இராமசாமிப் புலவர் குறிப்புரையுடன்), சென்னை.

72 கிருட்டிணா சஞ்சீவி, டாக்டர் 1980 — பழந்தமிழ் நூல்களில் ஒப்புமைப் பகுதிகள், (டாக்டர் பட்ட ஆய்வேடு, தட்டெழுத்துப்படி) சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

73 சஞ்சீவி, டாக்டர் ந. 1969 — பழந்தமிழ் நூல்களில் அடைகள், (டாக்டர் பட்ட ஆய்வேடு, தட்டெழுத்துப்படி) சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

74 சாமி, பி. எல். 1967 — சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், கழக வெளியீடு, சென்னை.

75 —————————— 1970 — சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், கழக வெளியீடு, சென்னை.

76 சாரங்கபாணி, இரா. 1963 — திருக்குறள் உரை வேற்றுமை, செல்வி பதிப்பகம், காரைக்குடி, இரண்டாம் பதிப்பு.

77 சுந்தரமூர்த்தி, இ. 1971 — திருக்குறள் அணிநலம், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

| | | |
|---|---|---|
| 78 | மார்க்க சகாயஞ் செட்டியார், வா. இராம்சாமிப் புலவர் சு. அ. 1969 | திருக்குறள் சொற்பொருள் அகர வரிசை, கழக வெளியீடு, சென்னை. |
| 79 | வரதராசனார், டாக்டர் மு. 1956 | திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பாரி நிலையம், சென்னை, நான்காம் பதிப்பு. |
| 80 | Ram Brothers 1978 | *Studies in Arts and Sciences (A Felicitation Volume to Arunkalaiakkon Prof. N. Subbu Reddiar, Ph. D. in Commemoration of his sixty - first Birth day)*, Madras. |
| 81 | University of Madras 1971 | *Thirumathi Sornammal Endowment Lectures on THIRUKKURAL* (1959-60 *to* 1968 - 69) *Part* 1 - *English,* Madras. |

# கணிதக் குறியீடுகள் : விளக்கம்

77 ஆம் பக்கத்தில் காணும் கணிதக் குறியீடுகளைப் பயன் படுத்தும் முறை வருமாறு:

அகநானூற்றில் பாலைப் பாடல்களின் அமைப்பு ஒழுங்கைச் சுட்டும் கணிதக் குறியீடு ($2n-1$); பாலைப் பாடல்களின் முதல்எண் கிடைக்க, $n = 1$ எனக் கொள்ள வேண்டும். அவ்வாறு கொண்டால்,

$$
\begin{aligned}
2n - 1 &= 2 \times 1 - 1 \\
&= 2 - 1 \\
&= 1
\end{aligned}
$$

அதாவது, பாலைப் பாடல்களின் முதல் எண் $= 1$

பாலைப் பாடல்களின் இரண்டாம் எண் கிடைக்க, $n = 2$ எனக் கொள்ள வேண்டும்; அவ்வாறு கொண்டால்,

$$
\begin{aligned}
2n - 1 &= 2 \times 2 - 1 \\
&= 4 - 1 \\
&= 3
\end{aligned}
$$

அதாவது, பாலைப் பாடல்களின் இரண்டாம் எண் $= 3$. இவ்வாறே $n = 3, 4, 5 \ldots$ எனக் கொண்டால், $5, 7, 9 \ldots$ ஆகியவை பாலைப் பாடல்களின் எண்களாகக் கிடைக்கும்.

அகநானூற்றில் குறிஞ்சிப் பாடல்களின் அமைப்பு ஒழுங்கைச் சுட்டும் கணிதக் குறியீடு :

$$5n - 5/2 - \frac{(-1)^{n+1}}{2}$$

குறிஞ்சிப் பாடல்களின் முதல் எண் கிடைக்க, $n = 1$ எனக் கொள்ள வேண்டும். அவ்வாறு கொண்டால்,

$$
\begin{aligned}
5n - 5/2 - \frac{(-1)^{n+1}}{2} &= 5 \times 1 - 5/2 - \frac{(-1)^{1+1}}{2} \\
&= 5 - 5/2 - \frac{(-1)^{2}}{2} \\
&= 5 - 5/2 - (+\ 1/2) \\
&= 5 - 5/2 - 1/2 \\
&= 5 - 3 \\
&= 2
\end{aligned}
$$

அதாவது, குறிஞ்சிப் பாடல்களின் முதல் எண் 2.

குறிஞ்சிப் பாடல்களின் இரண்டாம் எண் கிடைக்க, $n = 2$ எனக் கொள்ள வேண்டும். அவ்வாறு கொண்டால்,

$$5n - 5/2 - \frac{(-1)^{n+1}}{2} = 5 \times 2 - 5/2 - \frac{(-1)^{2+1}}{2}$$

$$= 10 - 5/2 - \frac{(-1)^{3}}{2}$$

$$= 10 - 5/2 - (-1/2)$$

$$= 10 - 5/2 + 1/2$$

$$= 101/2 - 2\tfrac{1}{2}$$

$$= 8$$

இவ்வாறே $n = 3, 4, 5$ எனக் கொண்டு கணக்கிட்டால், 12, 18, 22 ... ஆகியவை குறிஞ்சிப் பாடல்களின் எண்களாகக் கிடைக்கும்.

பிற திணைகளுக்குரிய பாடல் எண்களையும் அவ்வவற்றிற்கு உரிய கணிதக் குறியீடுகளைக் கொண்டு கணக்கிட்டுக் காணலாம்.

